**कलक** - **पु०** கல்கம் ; சூரணம் ; தற்பெருமை ; சூது ; லேகியம் ; —**फल** - மாதுளம்பழம்

**कलपना** - **स्त्री०** கற்பனை

**कलपांत** - **पु० क़यामत** பிரளயம்

**कलिपत** - **वि० मनगढंत** கற்பனை செய்யப்பட்ட ; செயற்கையான

**क़ल्ब** - **पु०** இதயம் ; மனம் ;

**कल्य** - **पु०** காலை நேரம் ; நேற்று அல்லது நாளை ; கள்

**कल्याण** - **पु०** மங்களம் ; சுபம்; **वि०** நல்ல

**कल्ल** - **वि०** செவிடான ; காது கேளாத

**कल्लर** - **पु०** களர் நிலம் ; உவர்பூமி ; உடல்

**कल्ला** - **पु०** தாடை ; முளை ; விளக்கின் பர்னர் ;—**तोड़**- பலசாலியான ; —**दराज** - பிடிவாதமுள்ள ; மிதமிஞ்சிப் பேசுகிற

**कल्लोल** - **पु०** அலை; விளையாட்டு

**कल्लोलिनी** - **स्त्री० नदी** ஆறு

**कवच** - **पु० ज़िरहबख़्तर** ; கவசம் ; தாயத்து ; ரட்சை

**कवरी** - **स्त्री० जूड़ा** பின்னல்

**कवल** - **पु० कौर** கவளம்

**कवलित** - **वि०** சாப்பிடப்பட்ட ; விழுங்கப்பட்ட

**कवाबचीनी** - **पु०** வால் மிளகு

**क़वायद** - **पु०** ஒழுங்கு ; எற்பாடு ; சிப்பாய்களின் கவாத்து ; '**कायदा**' **का बहु०** வழி முறைகள்

**कवि** - **पु० शायर** கவி ; புலவர் ; சூரியன்

**कविक** - **पु०** கடிவாளம்

**कश** - **पु०** சாட்டை ; மார்பு ; மூச்சு; இழுத்தல் ;—**मकश**; **स्त्री०** விரோதம் ; கவலை ; நெரிசல்

**कशा** - **स्त्री०** கயிறு ; சவுக்கு ; —**कश** - முன் பின் இழுப்பது ; இடித்துத் தள்ளுதல் ; தயங்குதல்

**कशिश** - **स्त्री० खिंचाव** கவர்ச்சி ; இழுத்தல் ; ஈடுபடுதல்

**कशीदगी** - **स्त्री० वैमनस्य** மனஸ்தாபம் ; விரோதம்

**कशीदा** - **पु०** சித்திர வேலைத் தையல் ; —**काढ़ना** - துணிகளில் சித்திரத் தையல் வேலை செய்ய

**कश्चित** - **वि० कोई** ஏதாவதொரு

**कश्ती** - **स्त्री० किश्ती** படகு ; சதுரங்க ஆட்டத்தில் ராஜா கட்டப்படும் நிலைமையில் இருத்தல்

**कष - पु०** சாணைக்கல் ; தேர்வு பரீக்ஷை

**कषाय - वि०** துவர்ப்பான ; காஷாய நிறமான ; **पु०** துவர்ப்புப் பண்டம் ; கஷாயம்

**कष्ट - पु० तकलीफ़** கஷ்டம் ; **—साध्य -** செய்வதற்குக் கஷ்டமான

**कस - पु०** உரைகல் ; அதிகாரம் ; பலம் ; பரீக்ஷை ; **—बल -** வலிமை ; ஆதிக்கம்

**कसक - स्त्री०** பழைய விரோதம் ; வலி ; அநுதாபம் ; **—निकालना -** பழிவாங்க

**कसकना - अ०** வலிக்க

**कसकुट - पु० काँसा** வெண்கலம்

**क़सदन- क्रि०जान-बूझकर** வேண்டுமென்றே ; தெரிந்துகொண்டே

**कसन - स्त्री०** துக்கம் ; இறுகக் கட்டும் கயிறு

**कसना - स०** இறுகக் கட்ட ; கெட்டியாய் அடைக்க ; தங்கம் முதலியவைகளை உரைத்துப் பரீக்ஷிக்க ; கஷ்டப்படுத்த

**कसनी - स्त्री०** கட்டும் கயிறு ; உரைகல் ; பரிசோதனை ; ரவிக்கை

**कसब - पु०** உழைப்பு;தொழில்; வேசித்தொழில்

**कसबल - ०** வலிமை ; துணிவு

**क़सबा - पु०** கஸ்பா ; பெரிய கிராமம்

**कसबी - स्त्री० रंडी** வேசி

**क़सम - स्त्री०** சபதம் ;**—खाना -** சத்தியம் செய்ய ; **—देना, रखना -** சபதம் செய்விக்க

**कसमसाना - अ०** கொதிக்க ; மனம் குழம்ப

**क़सर-स्त्री० कमी** குறைவு; துவேஷம் ;**—करना -** குறைக்க ; **—पड़ना -** நஷ்டம் உண்டாக ; **—निकालना -** நஷ்டத்தைச் சரிப்படுத்த ; பழிவாங்க ; **—रखना -** குற்றம் குறைவு இருக்க

**कसरत - स्त्री० बहुतायत** மிகுதி ; தேகப்பயிற்சி ; உழைப்பு

**कसरती - वि०** தேகப்பயிற்சி செய்கிற ; தேகப்பயிற்சியால் பலம் பெற்ற ; வலுவுள்ள

**कसल - पु०** அசௌக்கியம் ; களைப்பு ; சோர்வு; **—मन्द -** அசௌக்கிய முள்ள ; சோர்வுற்ற

**क़साई - पु०** கசாப்புக் கடைக்காரன் ; இரக்கமற்றவன்; **वि०** இரக்கமில்லாத

**क़साना** - अ० துவர்க்க ; களிம்பு ஏற

**कसाला** - पु० கஷ்டம் ; துன்பம் கடும் உழைப்பு

**कसाव** - पु० துவர்ப்பு ; களிம்பு

**कसावट** - स्त्री० விறைப்பு ; இழுத்தல்

**कसीदा** - पु० दे० **कशीदा**

**क़सीदा** - पु० உருது, பாரசீக மொழிகளில் துதியும் நிந்தனையும் கலந்த ஒருவகைக் கவிதை

**कसीर** - वि० மிக அதிகமான

**क़सीस** - स्त्री० இரக்கமின்மை; முயற்சி ; அன்ன பேதி

**क़सूर** - पु० **दोष** குற்றம் ; —**मंद, वार** - குற்றமுள்ள

**कसेरा** - पु० கன்னான் ; வெண்கல வியாபாரி

**कसैला** - वि० துவர்ப்பான

**कसैली** - स्त्री० **सुपारी** பாக்கு

**कसोरा** - पु० **कटोरा** கிண்ணம் ; மண்ணாலான கோப்பை

**कसौटी** - स्त्री० உரைகல் ; சோதனை

**कस्तूरी** - स्त्री० கஸ்தூரி

**क़स्द** - पु० எண்ணம் ; உறுதி; உத்தேசம் ; விருப்பம்

**कस्बाब** - पु० दे० **कसाई**

**कहकशाँ** - स्त्री० ஆகாச கங்கை

**क़हकहा** - पु० உரத்த சிரிப்பு ; அட்டகாசம்

**क़हत** - पु० **अकाल** பஞ்சம்

**कहन** - स्त्री० **कथन** சொல்லப்பட்ட விஷயம்; பழமொழி ; கதை

**कहना** - स० சொல்ல

**कहनावत**, **कहनूत** - स्त्री० **कहावत** பழமொழி

**कहनी** - स्त्री० சொல் ; பேச்சு

**क़हर** - पु० **आफ़त** ஆபத்து ; இடி —**करना** - வியத்தகு செயல் செய்ய ; அக்ரமம் செய்ய —वि० பயங்கரமான ; கடினமான

**कहरना** - अ० **कराहना** வலியின் காரணமாய் முனக ; பெருமூச்சு விட

**कहलाना**, **कहवाना** - स० சொல்லச் செய்ய; தூது அனுப்ப ; சொல்லப்பட

**क़हवा** - पु० காப்பிக் கொட்டை ; காப்பி ; (பானம்)

**कहाँ** - क्रि० எங்கே ;—**का कहाँ** - வெகு தூரம்

**कहा-सुना** - पु० பேச்சில் ஏற்படும்பிழை ; தவறு ;—**सुनी** - स्त्री० தகராறு ; சண்டை ; சச்சரவு

**कहानी** - स्त्री० கதை ; சிறு

கதை ; **राम कहानी** - நீண்ட விருத்தாந்தம்

**कहार** - **पु०** வீட்டு வேலைசெய்யும் ஒரு ஜாதி ; மீனவர்

**कहाल** - **पु०** ஒருவகை வாத்தியம்

**कहावत** - **स्त्री०** **मसल** பழமொழி

**कहीं** - **क्रि०** எங்கேயாவது ;—**का न रहना** - இங்குமில்லாமல் அங்குமில்லாமல் இருக்க ; —**का कहीं** - முற்றிலும் வேறுபட்ட இடம்

**काँइया** - **वि०** **चालाक** தந்திரசாலியான

**कांकरी** - **स्त्री०** சிறு சரளைக்கல் —**चुनना** - கவலை அல்லது பிரிவுத் துன்பத்தின் காரணமாக எதிலும் மனது ஈடுபாடு கொள்ளாதிருக்க

**कांक्षा** - **स्त्री०** **इच्छा** விருப்பம்

**कांक्षी** - **वि०** விரும்புகிற

**कांख** - **स्त्री०** கக்கம்

**कांखना** - **अ०** சிரமத்தால் முக்கிமுனக ; இரும

**कांच** - **पु०** கண்ணாடி ; கொசுவம் ; —**निकलना** - அடிபடுவதாலோ அல்லது இளைப்பினாலோ வருந்த

**कांचन** - **पु०** பொன் ; ஊமத்தை

**कांचनी** - **स्त्री०** பசு மஞ்சள்

**काँची** - - **स्त्री०** ஒட்டியாணம் ; குந்து மணி ; பாதசரம் ; காஞ்சி நகரம்

**काँचुली** / **कैंचुली** } **स्त्री०** பாம்புச்சட்டை

**कांजी** - **स्त्री०** புளிப்பான கஞ்சி ; காடி ; தயிரின் மேல் இருக்கும் புளித்த ஜலம் ; மோர்

**कांजी-हाउस** - **पु०** பட்டி ; பவுண்டு

**काँटा** - **पु०** முள் ; பாதாளக் கரண்டி ; தராசு முள் ; ஐரோப்பியர் சாப்பாட்டில் உபயோகிக்கும் முள் கரண்டி ; தூண்டில் முள் ; —**बोना** - இடையூறு செய்ய ; —**होना** - ரொம்பவும் மெலிந்துபோக ; —**काँटों में घसीटना** - அளவு மீறிப் புகழ்ச்சி செய்ய

**काँटी** - **स्त्री०** சிறுமுள் ; ஆணி

**कांड** - **पु०** இரண்டு கணுக்களுக்கு நடுவே உள்ள இடம் ; கிளை ; காண்டம் ; அத்தியாயம் ; பகுதி

**कांत** - **पु०** **पति** கணவன் ; சந்திரன் ; சிவன் ; உயர்ரக உருக்கு இரும்பு

**कांता - स्त्री० पत्नी** மனைவி

**कांति - स्त्री०** பிரகாசம் ; அழகு

**काँदना - अ० रोना** அழ

**काँधना - स०** தோளின்மேல் சுமக்க ; தலையில் தூக்க ; ஏற்க ; பொருத்திக் கொள்ள

**काँपना - अ०** அசைய ; நடுங்க; பயப்பட

**काँय-काँय** / **काँव-काँव** } **पु०** காக்கை கரைதல் ; வீண் சத்தம்

**काँवर - स्त्री० बहँगी** காவடி

**काँवरिया - पु०** காவடி எடுத்துச் செல்லுபவன்

**काँस - पु०** கோரைப்புல்

**काँसा - पु०** வெண்கலம்

**काई - स्त्री०** தேங்கிய ஜலத்தில் மிதக்கும் பாசி; அழுக்கு ; **—छुड़ाना -** அழுக்கைப் போக்க ; ஏழ்மை துன்பம் முதலியவற்றைத் துடைக்க; **—सा फट जाना -** இங்கு மங்கும் சிதறி விட

**काक - पु० कौवा** காக்கை ;—**वंध्या - स्त्री०** ஒரு குழந்தைக்கு மேல் பெறுத (ஸ்திரீ)

**काकतालीय - वि०** எதிர்ச்சையாக நடந்த; எதிர்பாராது ஏற்பட்ட ; திடீரென்று

**काकपक्ष - पु०** முன்னெற்றி மயிர்

**काकली - स्त्री०** இனிய ஒலி ; குந்துமணி

**काका - पु० चाचा** தகப்பனாரின் சகோதரர்

**काकातुआ - पु०** கொண்டையுள்ள ஒரு கிளி ; வெள்ளைக் கிளி

**काकी - स्त्री०** பெண் காக்கை ; **चाची** தகப்பனாருடைய சகோதரரின் மனைவி

**काकु - पु०** வியங்கியம்

**काकुल - पु०** சுருண்ட முன் நெற்றி மயிர்

**काग - पु० कौआ** காகம்; கார்க்கு

**काग़ज़ - पु०** காகிதம்; பத்திரம்; பத்திரிகை; செய்தித்தாள்

**काग़ज़ात - पु०** காகிதங்கள் ; பத்திரங்கள்

**काग़ज़ी - वि०** காகிதத்தால் செய்த ; எழுதப்பட்ட ; காகிதம்போன்ற

**कागद - पु० दे० काग़ज़**

**काच - पु० छीका** உறி

**काची - स्त्री०** பால் கலயம்

**काछ - पु०** இடுப்பு ; வேஷ்டியின் கச்சை

**काछना - स०** வஸ்திரத்தைக் கச்சை போட்டுக் கட்டிக்கொள்ள

**काछनी** - स्त्री० கச்சை போட்டு அணிந்த ஒருவித வஸ்திரம்
**काछा** - पु० दे० **काछनी**
**काछी** - पु० கறிகாய் பயிர் செய்துவிற்பவன்
**काछे** - क्रि० சமீபத்தில்
**काज** - पु० **काम** காரியம்; பித்தான் போடும் துவாரம்
**काजर** / **काजल** } पु० கண்மை
**काज़ी** - पु० முஸ்லிம் நீதிபதி
**काज़ू** - पु० முந்திரிப்பருப்பு
**काट** - स्त्री० முகவெட்டு; ஆடையின் வெட்டு; வெட்டுதல்; நறுக்குதல்; **छाँट** - வெட்டு குத்து; குறைவு-நிறைவு
**काटना** - स० வெட்ட; குறைக்க; கொல்ல
**काठ** - पु० கட்டை; —**का उल्लू** - வடிக்கட்டின முட்டாள்; —**में पाँव देना** - தானே சங்கடத்தில் சிக்க; கைதியாக; —**की हाँडी** - மரப் பானை; சுலபமாய் உடையக் கூடிய பொருள்; —**की पुतली होना** - வலி குன்றிப் போக
**काठड़ा** - पु० பெரிய மரத் தொட்டி
**काढ़ना** - स० வெளிப்படுத்த; பகிரங்கப் படுத்த; கட்டை, கல் முதலியவற்றில் செதுக்கு வேலை செய்ய
**काढ़ा** - पु० கஷாயம்
**कातना** - स० நூல் நூற்க; **बुढ़िया का काता** - பஞ்சு மிட்டாய்
**कातर** - वि० பயந்த
**कातिक** - पु० **कार्तिक** கார்த்திகை
**क़ातिब** - पु० **लेखक** எழுதுபவன்; குமாஸ்தா
**क़ातिल** - वि० கொலை செய்யும்
**कादंबरी** - पु० குயில்கள்; மைனைப் பறவை; வடமொழியில் பாணபட்டனால் எழுதப்பட்ட நெடுங்கதை
**क़ादिर** - वि० சாமர்த்தியமுள்ள; பலமுள்ள
**कान** - पु० காது; —**भरना** - கோள் சொல்ல; —**पर जूँ न रेंगना** - கவனக் குறைவாய் இருக்க; —**पर हाथ धरना** - மறுக்க; —**पकड़ना** - தண்டனைக்குட்பட; தாழ்மையைத் தெரிவிக்க; —**फूलना** - கோள் சொல்லி சண்டை மூட்டிவிட; —**काटना** - மிக சாமர்த்

தியமாக ஏமாற்ற ; — **का कच्चा** - கேட்பதை யெல்லாம் நம்புகிற ; அப்பாவி; **—खड़े होना** - பயப்பட ; **—में तेल डालना** - கவனியாதுபோல் இருக்க ; **—लगना** - நம்பிக்கைக்கு ஆளாக

**कानन - पु॰ जंगल** காடு

**काना - वि॰** ஒரு கண் கெட்டுப் போன ; பூச்சி அரித்த (பழம்) ; கோணலான

**कानाकानी** } **कानाफूसी** } **स्त्री॰** தாழ்ந்த குரலில் ரகசியமாகப் பேசுதல்

**कानी - वि॰** ஒரு கண் உள்ள (ஸ்திரீ) ; எல்லாவற்றிலும் சிறிய (விரல்)

**कनीन - पु॰** கன்னிப்பெண்ணுக்குப் பிறந்தபிள்ளை

**कानी-हाउस - पु॰ दे॰ कांजी-हाउस**

**क़ानून - पु॰** சட்டம்

**क़ानूनगो - पु॰** நிலவரி உத்தியோகஸ்தர் ; ரெவின்யூ இன்ஸ்பெக்டர்

**क़ानूनदाँ - पु॰** சட்ட நிபுணன்; வக்கீல் ; வழக்கறிஞர்

**क़ानूनन् - क्रि॰** சட்டப்படி

**क़ानूनी - क्रि॰** சட்டம் அறிந்த; சட்ட சம்பந்தமான ; தர்க்கம் அல்லது வாதம் செய்கிற

**कान्ह - पु॰** ஸ்ரீ கிருஷ்ணன்

**कापुरुष - पु॰** பயங்கொள்ளி

**क़ाफ़िया - पु॰** செய்யுட்களில் அந்தியப் பிராஸம் ; **—तंग करना** - ரொம்பத் தொந்தரவு படுத்த

**काफ़िर - पु॰** இஸ்லாமியருக்கு அன்னிய மதக்காரன் ; கடவுளை நம்பாதவன் ; நாஸ்திகன்

**काफ़िला - पु॰** பிரயாணிகள் கூட்டம்

**काफ़ी - वि॰** போதுமான; பூரா

**काफ़ूर - पु॰** கற்பூரம் ; முழுவதும் ; **—होना** - மறைந்து போக

**काबर - वि॰** புள்ளியுள்ள

**काबा - पु॰** மெக்கா நகரத்தில் முகம்மது வசித்த புண்ணியத்தலம் ; முஸ்லிம்கள் ஹஜ் யாத்திரை போகும் இடம்

**काबिज़ - वि॰** அதிகாரமுள்ள; மலச்சிக்கல் உண்டாக்குகிற

**काबिल - वि॰ योग्य** தகுந்த

**काबिलियत - स्त्री॰ योग्यता** தகுதி; சாமர்த்தியம் ; திறமை

**काबुक - स्त्री०** புறு மாடம்
**काबुली - पु०** காபூல்காரன்; **वि०** காபூலைச் சேர்ந்த
**क़ाबू - पु० वश** வசம்
**काम - पु०** காரியம்; பிரயோஜனம்; **—आना** - உபயோகப்பட; **—तमाम करना** - வேலை முடிக்க; கொல்ல; **—देना** - வேலைக்குதவ; **—पड़ना** - காரியத் தொடர்பு ஏற்பட; **—में लाना** - உபயோகப்படுத்த
**काम-काज - पु०** வேலை; தொழில்
**कामकाजी - पु०** காரியம் செய்கிற; பல வேலைகளுள்ள
**कामगार - पु०** மானேஜர்; ஏஜண்டு; **वि०** சித்திரத்தையல் வேலை செய்யப்பட்ட
**कामचलाऊ - वि०** எப்படியாவது சமாளித்துக் காரியத்தை முடிக்கக் கூடிய; உபயோகப்படக்கூடிய
**कामचारी - पु०** மனம் போகிற போக்கில் திரிபவன்; ஊர் சுற்றி; காமுகன்
**कामचोर - वि०** வேலையைச் செய்யாமல் ஏமாற்றித் திரிகிற; சோம்பேறியான
**कामदार - वि० दे० कामगार**

**कामना - स्त्री० इच्छा** விருப்பம்
**काम-नाकाम - क्रि०** வேறு வழியின்றி
**कामयाब - वि० सफल** வெற்றியடைந்த
**कामयाबी - स्त्री० सफलता** வெற்றி
**कामरान - वि०** லட்சியத்தை அடைந்த; வெற்றிபெற்ற
**कामरानी - स्त्री०** எண்ணம் கைகூடல்; லட்சிய பூர்த்தி; வெற்றி
**कामरी** - சிறு கம்பளி
**कामिल - वि०** முழுவதுமுள்ள; பூரணமான; செயல் திறமையுள்ள
**कामी** } **वि०** விரும்புகிற; **पु०**
**कामुक** } காமுகன், காம இச்சை மிகுந்த; உடல் இன்பத்தில் மூழ்கிய
**काय - स्त्री०** சரீரம்
**क़ायदा - पु०** நியமம்; முறை
**कायनात - स्त्री०** சிருஷ்டி; உலகம்; சொத்து; பெருமை
**क़ायम - स्त्री० मुक़र्रर** தீர்மானிக்கப்பட்ட; நிலையான; **—मुकाम** - பதிலுக்கு வேலை பார்க்கும்
**कायर - वि० डरपोक** பயந்த
**क़ायल - वि०** ஒப்புக்கொள்ளுகிற; ஏற்கிற; வெட்கப்படுகிற

**कायस्थ - पु॰** வட இந்தியாவில் ஒரு ஜாதி; **वि॰** உடலில் உள்ள

**काया - स्त्री॰** சரீரம்; **—कल्प - पु॰** யௌவனம் உண்டாக்கும் சிகிச்சை; **—पलट - स्त्री॰** மிகப் பெரிய மாறுதல்; உருமாற்றம்

**कायिक - वि॰** சரீர சம்பந்தமான

**कार - पु॰** செய்கை; செய்பவன்; **—आमद - वि॰** உபயோகமுள்ள

**कारक - वि॰** செய்கிற; வேற்றுமை (இலக்கணம்)

**कार-करदा - वि॰** திறமையுடன் வேலை பார்க்கிற; நல்ல பயிற்சியுள்ள

**कारकुन - पु॰** எதிர் பார்ப்பவன்; ஏற்பாடு செய்பவன்; ஏஜண்டு

**कारख़ाना - पु॰** தொழிற்சாலை

**कारगर - वि॰** பலித்த; குணமளிக்கக்கூடிய; உபயோகமுள்ள

**कारगुजार - वि॰** கடமையை நன்ருகச் செய்கிற

**कारगुजारी - स्त्री॰** கடமையைச் செய்தல்; வேலைத் திறன்

**कारचोबी - स्त्री॰** சித்திரத் தையல் வேலை

**कारण - पु॰ वजह** காரணம்

**कारतूस - पु॰** தோட்டா

**कारनामा - पु॰** யாராவது செய்த காரியங்களின் (முக்கியமாக யுத்தங்களின்) வர்ணனை

**कारपरदाज - पु॰** மானேஜர்; ஏஜண்டு

**कारबार - पु॰** வேலை; தொழில்

**कारबारी - वि॰** வேலையுள்ள; **पु॰** ஏஜண்டு

**कारवाँ - पु॰** பிரயாணிகள் கூட்டம்; யாத்திரிகர் குழு

**कारसाज - पु॰** கரியத்தைச் சாதிக்க யோசனை சொல்பவன்; ஆலோசகன்

**कारसाजी - स्त्री॰** காரியத்தைச் செய்துமுடிக்க யோசனை; கபடம்; முயற்சி

**कारस्तानी - स्त्री॰** நடவடிக்கை; கபடம்; சூது

**कारा - स्त्री॰** கட்டு; துன்பம்; சிறை வாசம் **वि॰** கருப்பான

**कारागार**, **कारागृह** } **पु॰** சிறைச்சாலை

**काराबन्दी - पु॰** கைதி

**कारावास** - पु० சிறைவாசம்
**कारिंदा** - पु० குமாஸ்தா; ஏஜண்டு; மானேஜர்
**कारिका** - स्त्री० சுலோகத்துடன் கூடிய விளக்கம்; நடிகை
**कारिख** - स्त्री० दे० **कालिख**
**कारी** - पु० செய்கிறவன்; **वि०** கொலை செய்யும்; உள்ளத்தைப்பிளக்கும்
**कारीगर** - पु० சிற்பி; சிறந்த தொழிலாளி
**कारुण्य** - पु० **दया** இரக்கம்
**कारूरा** - पु० **पेशाब** மூத்திரம்
**कारोबार** - पु० दे० **कारबार**
**कार्पण्य** - पु० **कंजूसी** கஞ்சத்தனம்; கருமித்தனம்
**कार्मुक** - पु० வில்; வானவில்; மூங்கில்
**कार्य** - पु० காரியம்; செயல்; —**क्रम** - நடவடிக்கை; —**कर्ता** - உத்தியோகஸ்தன்; வேலை செய்பவன்; —**कारिणी समिति** - காரியக் கமிட்டி; செயற்குழு; —**परायण** - தன் வேலையில் கவனமுள்ள
**कार्यालय** - पु० அலுவலகம்; ஆபீஸ்; தொழிற்சாலை
**कार्रवाई** - स्त्री० செயல்; நிகழ்ச்சிக்குறிப்பு; நடவடிக்கை
**काल** - पु० நேரம்; காலம்; யமன்; பஞ்சம்; —**कूट** - மிகக்கொடிய ஒரு விஷம்; —**कोठरी** - स्त्री० சிறையின் இருட்டறை, —**चक्र** - காலத்தின் மாறுபாடு; காலப்போக்கு; —**धर्म** - முடிவு; மரணம்; காலத்திற் கேற்ற தர்மம்; —**यापन** - காலத்தைக் கழித்தல்
**काला** - वि० கருத்த; —**अक्षर भैंस बराबर** - எழுதப் படிக்கத் தெரியாதவன்; —**कलूटा** - மிகக்கருப்பான; —**चोर** - பெரிய திருடன்; —**मुँह** - கெட்ட பெயரெடுத்த
**कालातीत** - वि० காலாவதியான
**काला नमक** - पु० சோடா கலந்து செய்த ஒருவித ஜீரண உப்பு
**कालापानी** - पु० நாடு கடத்தும் தண்டனை
**कालिंदी** - स्त्री० யமுனை
**कालिख** - स्त्री० மை; களங்கம்
**कालिमा** - स्त्री० கருமை; இருட்டு; களங்கம்
**कालीजीरी** - स्त्री० கருஞ்சீரகம்
**कालीमिर्च** - स्त्री० மிளகு

**कालीन** - वि० ஒரு காலத்தைச் சேர்ந்த

**क़ालीन** - पु० ஜமக்காளம்; விரிப்பு

**काल्पनिक** - वि० கற்பனை செய்யப்பட்ட

**कावल** - पु० காவலில் வைப்பது

**काव्य** - पु० காவியம்;செய்யுள்

**काश** - अव्य० கடவுள் அனுக்கிரகிக்கட்டும்; அவ்வாறு நடக்கட்டும் (வேண்டுகோள் அல்லது எதிர்பார்ப்பதைக் காட்டும் சொல்)

**काशाना** - पु० குடிசை; வீடு

**काशीफल** - पु० பூசணிக்காய்

**काश्त** - स्त्री० விவசாயம்; விவசாயக் குத்தகைப் பாத்தியம்; —**कार** - குடியானவன்; சாகுபடி செய்பவன்; —**कारी** - சாகுபடித் தொழில்

**काष्ठ** - पु० **लकड़ी** கட்டை

**कासनी** - स्त्री० இளம்பச்சை நிறம்

**कासा** - पु० பேலா; கோப்பை

**कासार** - पु० சிறிய குளம்; ஓடை

**क़ासिद** - पु० தூதன்; தபால் சேவகன்

**कासीस** - पु० அன்னபேதி

**काहिल** - वि० **आलसी** சோம்பேறியான

**काहिली** - स्त्री० சோம்பல்

**काहे** - क्रि० **क्यों** ஏன்; எதற்கு

**किंकर** - पु० அடிமை; வேலையாள்; ஓர் அரக்க ஜாதி

**किंकर्तव्य-विमूढ़** - वि० என்ன செய்வதென்று தெரியாத; பிரமை பிடித்த

**किंकिणी** - स्त्री० **करधनी** ஒட்டியாணம்; சதங்கை; கால் தண்டை

**किंचन** - पु० குறைவு; சொற்பம்; அற்பம்; பலாச மரம்

**किंचित** - पु० கொஞ்சம்

**किंजल** / **किंजल्क** } पु० தாமரைப் பூத் தாது; நார்; சிம்பி

**किंतु** - अव्य० **लेकिन** ஆனால்

**किंवदंती** - स्त्री० **अफ़वाह** வதந்தி; உலகச் சொல்

**किंवा** - अव्य० **या** அல்லது

**किंशुक** - पु० பலாச மரம்

**कि** - अव्य० அதாவது; என்ன; அல்லது

**किकियाना** - अ० **रोना** அழ

**किचकिच** - स्त्री० வீண் பேச்சு; சண்டை

**किचकिचाना** / **किटकिटाना** } अ० பல் நெறிக்க

**कितना** - क्रि० எத்தனை

**क़िता** - पु० தைப்பதற்காக துணியைத் துண்டித்தல்; நடத்தை; நிலப்பகுதி

**किताब** - स्त्री० **पुस्तक** புத்தகம்

**किताबत** - स्त्री० **लिखना** எழுதுதல்; நகல் செய்தல்

**क़िताबी** - वि० புத்தக சம்பந்தமான;—**कीड़ा** - எப்பொழுதும் புத்தகத்திலேயே மூழ்கியிருப்பவன்; 'புத்தகப் புழு'

**किधर** - क्रि० எந்தத் திசையில்; எங்கே

**किधों** - अव्य० அல்லது

**किनका** - पु० குருணை; நொய்

**किनार** } पु० ஓரம்; கரை
**किनारा** } **हाशिया** 'மார்ஜின்'

**किनाराकश** - पु० விலகியிருப்பவன்; ஒதுங்குபவன்

**किनारी** - स्त्री० துணிகளின் கரையில் நெய்யப்படும் தங்க அல்லது வெள்ளி ஜரிகை

**किनारे** - क्रि० ஓரத்தில்; தனியாய்; கரையில்

**क़िफ़ायत** - स्त्री० சிக்கனம்; சேமிப்பு

**किफ़ायती** - वि० செட்டாய்ச் செலவு செய்கிற

**क़िबला** - पु० மேற்குத் திசை; தந்தை; மெக்கா நகர்; **वि०** பூஜிக்கத்தக்க; —**नुमा** - அரபிப் பட கோட்டிகள் மேற்குத் திசையைக் காட்டுவதற்காக உபயோகித்த ஒரு கருவி

**क़िबला-आलम** - पु० துருவ நட்சத்திரம்; பாதுஷா முதலிய பெரியவர்களை அழைக்கும் சொல்

**क़िब्र** } स्त्री० மேன்மை; கிழத்
**क़िब्रिया** } தன்மை

**क़िमाम** - पु० சர்க்கரை அல்லது வெல்லப் பாகு; கெட்டிச் சாராயம்

**क़िमार** - पु० சூதாட்டம்; —**बाज़** - சூதாடுபவன்

**क़िमाश** - पु० **तर्ज़** முறை; பிரகாரம்

**किम्मत** - स्त्री० யுக்தி

**कियत** - वि० எத்தனை

**कियारी** - स्त्री० **क्यारी** பாத்தி

**क़िरक़िरा** - वि० சிறு கற்கள் நிறைந்த; —**होना** - சந்தோஷத்தில் இடையூறு ஏற்பட

**किरकिरी** - स्त्री० கண்ணை உறுத்தும் தூசு; அவமானம்

**किरच** - स्त्री० துப்பாக்கியின்

முனையில் வைக்கும் ‘சனியன்’ என்னும் கக்தி

**किरण** } **स्त्री०** கிரணம்; கதிர்
**किरन** } **—माली - पु०** சூரியன் சந்திரன்; **फूटना -** சந்திரன் அல்லது சூரியன் உதயமாக

**किरपान - पु० कृपाण** கத்தி; வாள்

**किरमिच - पु०** பை, செருப்பு முதலியவை செய்யப் பயன் படும் சணல் துணி

**किरराना - अ०** பல்லை நெறிக்க

**किरात - पु०** ஒரு காட்டு ஜாதியைச் சேர்ந்த மனிதன் **स्त्री०** ரத்னங்கள் நிறுக்கும் காரட் அளவு

**किराना - पु० केराना** பலசரக்குச் சாமான்கள்; **—बाज़ार -** பலசரக்கு பஜார்

**किरानी - पु० केरानी** ஆங்கிலோ இந்தியன்; குமாஸ்தா

**किराया - पु० भाड़ा** வாடகை; சத்தம்

**किरायेदार - पु०** வாடகை கொடுப்பவன்

**किरासन - पु०** மண் எண்ணெய்

**किरिच - स्त्री० दे० किरच**

**किरीट - पु०** கிரீடம்; மணிமுடி; மகுடம்

**किलक - स्त्री०** சந்தோஷத்தால் ஆரவாரம் செய்தல்; நாணல்த்தட்டை

**किलकार** }
**किलकारी** } **स्त्री०** சந்தோஷ ஆரவாரம்
**किलकिला** }

**किलनी - स्त्री०** உண்ணி; நாய்ப் பேன்

**किलबिलाना - अ०** அசைய; சஞ்சலப்பட

**क़िला - पु०** கோட்டை

**क़िलाबंदी - स्त्री०** கோட்டை கட்டல்; வியூகம் அமைத்தல்; முற்றுகை

**क़िलाया - स्त्री०** யானையின் கழுத்துச் சங்கிலி அல்லது கயிறு

**क़िल्लत - स्त्री०** குறைவு; பணக் கஷ்டம்

**किल्ला - पु०** பெரிய ஆணி; முளை

**किल्ली - स्त्री०** ஆணி; தாழ்

**किवाड़ - पु०** கதவு

**किशमिश - स्त्री०** கிஸ்மிஸ் பழம் (உலர்ந்த விதையில்லாத திராட்சை)

**किशोर - पु०** 11 வயதுக்கு மேல் 15 வயதுக்குட்பட்ட பையன்; புத்திரன் (**स्त्री० किशोरी**)

**किश्त - स्त्री०** சதுரங்கத்தில் ராஜா கட்டப்படும் நிலைமையிலிருத்தல்; தவணை

**किश्ती** - स्त्री० **नाव** படகு ; —**नुमा** - படகைப் போன்ற

**किसबत** - स्त्री० சவரக்கத்தி ; அதை வைக்கும் பெட்டி

**क़िसमत** - स्त्री० दे० **क़िस्मत**

**किसलय** - पु० துளிர் ; தளிர்

**किसान** - पु० வேளாளன்

**किसानी** - स्त्री० வேளாண்மை

**किस्त** / **किस्तबंदी** - स्त्री० தவணைப்படி செலுத்துதல்

**किस्तवार** - क्रि० தவணைப்படி

**क़िस्म** - स्त्री० மாதிரி ; விதம்

**क़िस्मत** - स्त्री० தலைவிதி ; அதிர்ஷ்டம் ; —**वर** - பாக்கியசாலியான ; —**का फेर** - விதியின் சோதனை ; —**आज़माना** - அதிர்ஷ்டத்தைப் பரீட்சித்துப் பார்க்க ; —**चमकना** - அதிர்ஷ்டமடிக்க; —**खुलना** - நல்ல காலம் பிறக்க

**किस्सा** - पु० கதை ; செய்தி

**क़िस्सा-कोताह** - क्रि० சுருங்கச் சொன்னால்

**कीक** - पु० கூச்சல்

**कीकना** - अ० கூச்சலிட

**कीकर** / **कीकड़** - पु० **बबूल** கருவேலமரம்

**कीच** / **कीचड़** - पु० சேறு ; கண் பீளை

**कीट** / **कीड़ा** - पु० புழு ; பூச்சி

**कीड़ी** - स्त्री० சிறு புழு

**कीना** - पु० **द्वेष** பகைமை

**क़ीमत** - स्त्री० **दाम** விலை

**क़ीमती** - वि० விலை உயர்ந்த

**क़ीमा** - पु० மிகச் சிறு துண்டுகளாக வெட்டப்பட்ட மாமிசம்

**कीमाया** - स्त्री० ரஸாயனம்

**कीमियागर** - पु० விஞ்ஞானி ; ரஸாயனம் தயாரிப்பவன்

**कीर** - पु० கிளி ; வேடன்

**कीर्तन** - पु० குணங்களையோ புகழையோ போற்றும் பாட்டு

**कीर्तनिया** - पु० கீர்த்தனை பாடுபவன்

**कीर्तनीय** - वि० பாட அல்லது புகழத்தக்க

**कील** - स्त्री० ஆணி

**कीलक** - स्त्री० **खूँटी** முளை

**कीलना** - स० ஆணி அடிக்க ; பாம்பைப் பழக்க

**कीला** - पु० பெரிய ஆணி

**कीली** - स्त्री० சக்கரத்தின் அச்சு ; இருசு

**कीश** - पु० குரங்கு ; பறவை ; சூரியன்

**कुँआरा** - वि० விவாகமாகாத

**कुँई** - स्त्री० **कुमुदिनी** அல்லிப்பூ

**कुंचन** - **पु०** சுருக்கம்
**कुंज** - **पु०** அடர்ந்த சோலை ; கரை ; புதர்க்காடு
**कुंजड़ा** - **पु०** கறிகாய் விற்கும் ஒரு ஜாதி ; **स्त्री० कुंजड़िन**
**कुंजर** - **पु०** யானை ; **वि०** சிறந்த
**कुंजी** - **स्त्री० चाभी** சாவி ; துணை நூல்
**कुंठ** - **वि०** முட்டாளான ; மழுங்கிய
**कुंठित** - **वि०** கூர்மை மழுங்கிய
**कुंड** - **पु०** குட்டை ; குளம்
**कुंडल** - **पु०** காதில் அணியும் குண்டலம்
**कुंडली** - **स्त्री०** ஜாதகம் ; வளையம் ; சர்ப்பம்
**कुंडा** - **पु०** யானை ; கதவின் சங்கிலி மாட்டுவதற்காக நிலைவாசலில் உள்ள கொண்டி ; அகலமான வாயுள்ள பெரிய மண் பாண்டம்
**कुंडी** - **स्त्री०** கதவுச் சங்கிலி ; ஓர் ஆழமில்லாத மண் பாண்டம்
**कुंत** - **पु०** ஈட்டி
**कुंतल** - **पु०** கூந்தல் ; தலைமயிர்
**कुंद** - **पु०** வெண்மை நிறமுள்ள ஒரு பூ ; தாமரை ; **वि०** மழுங்கிய ;—**ज़ेहन** - **पु०** முட்டாள் ; —**ए नातराश** - வெறும் முட்டாள்
**कुंदन** - **पु० चोखा सोना** சொக்கத் தங்கம் ; **वि०** சுத்தமான
**कुंदरू** - **पु०** கோவைக்காய்
**कुंदा** - **पु०** கனத்த விறகுக் கட்டை ; தொழுக்கட்டை ; ஆயுதத்தின் பிடி ; துப்பாக்கியின் அடிப்பாகம் ; பறவையின் இறக்கை
**कुंदी** - **स्त्री०** துணிகளின் சுருக்கங்களை நீக்கி, ஒரு கட்டையால் அடித்துச் சீராக்கி மடித்தல் ; நன்ருக அடித்தல்; புடைத்தல்
**कुंदेरना** - **स०** சுரண்ட
**कुंभ** - **पु०** பானை ; யானையின் தலையிலிருக்கும் இரு மேடான பாகங்கள் ; மத்தகம்
**कुंभकार** - **पु०** குயவன் ; சேவல்
**कुंभी** - **पु०** யானை ; முதலை **स्त्री०** - சிறுபானை
**कुंवर** - **पु०** பையன் ; ராஜகுமாரன்
**कुंवारा** - **वि० दे० कुँआरा**
**कु** - **स्त्री०** பூமி **पु०** பாபம் ; நிந்தனை ; அதர்மம்
**कुआँ** - **पु०** கிணறு
**कुआर** - **पु०** ஐப்பசி மாதம்

कुइयाँ / कुइँ } **स्त्री०** சிறு கிணறு

**कुकड़ी - स्त्री०** நூல்சிட்டம்; சோளம்; நெட்டி

**कुकरी - स्त्री०** கோழி; காட்டுக் கோழி

**कुकर्म - पु०** கெட்ட காரியம்; பாபம்

**कुकर्मी - वि०** கெட்ட காரியம் செய்கிற; பாபி

**कुकुरदंत - पु०** கோணல் பல்; தித்திப் பல்

**कुकुरमुत्ता - पु०** நாய்க்குடை

**कुक्कुट - पु०** சேவல்

**कुक्ष - पु० पेट** வயிறு

**कुखेत - पु०** கெட்ட இடம்

**कुघात - पु०** கெட்ட சமயம்; கபடம்

**कुच - पु०** கொங்கை; முலை; **वि०** உலோபி; சுருங்கிய

**कुचना - अ०** சுருங்க; குத்த; அழுந்த

**कुचक्र - पु० षडयंत्र** சதியாலோசனை; சூழ்ச்சி

**कुचक्री - पु०** சதி செய்பவன்; சூழ்ச்சிக்காரன்

**कुचर - पु०** ஊர் சுத்தி; பழிகாரன்

**कुचलना - स०** நசுக்க; அழுத்த; பொடியாக்க

**कुचला - पु०** எட்டி மரம்; எட்டிக்காய்

**कुचाल - स्त्री०** கெட்ட நடத்தை; போக்கிரித்தனம்

**कुचेष्टा - स्त्री०** கெட்ட செயல்; கெட்ட முயற்சி

**कुचैला - वि०** அழுக்கான; அழுக்கான உடையுள்ள

**कुछ - वि०** சில; கொஞ்சம்

**कुछ-एक - वि०** மிகச் சில

**कुछ न कुछ - वि०** ஏதாவது

**कुजा - क्रि०** எங்கே; எவ்விடம்

**कुजाति - स्त्री०** கெட்ட ஜாதி; தாழ்ந்த ஜாதி;— **पु०** - தாழ் குடிப் பிறந்தவன்; நீசன்

**कुजोग - पु०** கெட்டசேர்க்கை; கெட்ட சமயம்; ஒவ்வாத தொடர்பு

**कुट - पु०** வீடு; கோட்டை; கைப்பிடி; மரம்; கூட்டம்

**कुटका - पु०** சிறு துண்டு

**कुटनपन - पु०** பெண்களை ஏமாற்றிக் கெடுக்கும் தொழில்; தூது; கலகம் மூட்டுதல்

**कुटना - पु०** பெண்களை ஏமாற்றி அயலார்களுடன் சேர்த்து விடுபவன் (**स्त्री० कुटनी**); **अ०** இடிபட; அடிபட

**कुटाई - स्त्री०** இடித்தல் ; இடிக்கும் கூலி

**कुटास - स्त्री०** அடிதடி சண்டை

**कुटिया - स्त्री०** குடிசை

**कुटिल - वि०** கபடமான ; சுருள் சுருளான ; கோணலான ; **पु०** போக்கிரி ; வஞ்சகன்

**कुटी - स्त्री०**
**कुटीर** } குடிசை

**कुटुंब - पु० परिवार** குடும்பம் ; வம்சம்

**कुटेक - स्त्री०** முரட்டுப் பிடிவாதம்

**कुटेव - स्त्री०** கெட்ட வழக்கம்

**कुठला - पु०** நெற்குதிர்

**कुठाँउ**
**कुठाँव** } **- पु०** கெட்ட இடம்

**कुठार - पु०** கோடாலி

**कुठारी - स्त्री०** கோடாலி; நாசம் செய்பவள்

**कुठाली - स्त्री०** மூசை ; மட்குகை

**कुठौर - पु० दे० कुठाँव**

**कुड़कुड़ाना**
**कुड़बुड़ाना** } **अ०** முணுமுணுத்துப் பேச ; மனதுக்குள் புகைந்துகொண்டிருக்க

**कुड़ना - अ०** ஊற்றுப் பார்க்க; உறும

**कुडल - स्त्री०** ரத்தசோகை

**कुड्डुक - स्त्री०** முட்டையிடாத கோழி

**कुडौल - वि०** கோரமான ; அழகில்லாத

**कुढंग - पु०** கெட்ட நடத்தை ; தவருன முறை

**कुढंगा - वि०** கெட்ட மாதிரியான ; ஒழுங்கில்லாத

**कुढन - स्त्री०** எரிந்து விழுதல் ; உள்ளூற ஆத்திரமடைதல் ; எரிச்சல்

**कुढ़ना - अ०** மனதுக்குள் வெறுப்பு அல்லது கோபம் அடைய ; வயிறெரிய

**कुढब - वि०** கோரமான; துர்க்குணமுடைய

**कुढ़ाना - स०** துக்கம் அல்லது கோபம் அடையச் செய்ய ; துன்புறுத்த

**कुतना - अ०** மதிப்பிடப்பட

**कुतप - पु०** நடுப்பகல்; சூரியன்; விருந்தினர்

**—काल -** வெயில் நேரம் ; நடுப்பகல்

**कुतरना - स०** கொத்திச் துண்டாக்க ; கடித்துக் குதற

**कुतर्क - पु०** விதண்டாவாதம்

**कुतर्की - पु०** விதண்டாவாதம் செய்பவன் ; வாயாடி

**कुतिया** - **स्त्री०** பெண் நாய்
**कुतुक** - **पु०** **कौतुक** குதூகலம் ; ஆர்வம்
**कुतुब** - **पु०** துருவ நட்சத்திரம்; —**नुमा** - திசை காட்டும் கருவி
**कुतुब** - **पु०** **किताबें** புத்தகங்கள் ; —**ख़ाना** - புத்தகசாலை ;—**फ़रोश** - புத்தக விற்பனையாளன்
**कुतूहल** - **पु०** ஆர்வம் ; தெரிந்து கொள்ளத் தூண்டும் ஆசை ; விந்தை
**कुत्ता** - **पु०** நாய்
**कुत्सा** - **स्त्री०** நிந்தனை ; அவமானம்
**कुत्सित** - **वि०** அற்பமான ; நிந்திக்கப்பட்ட ; இழிந்த
**कुदकना** - **अ०** குதிக்க ; தாண்ட
**कुदरत** - **स्त्री०** சக்தி; கடவுளின் சக்தி ; இயற்கை
**कुदरती** - **वि०** தெய்விகமான ; இயற்கையினுடைய
**कुदाना** - **स०** குதிக்கச் செய்ய
**कुदाम** - **पु०** செல்லாக்காசு
**कुदाल** - **पु०** பிக்காசு
**कुदिन** - **पु०** கெட்ட காலம்
**कुदृष्टि** - **स्त्री०** கெட்ட பார்வை; 'கண் வைத்தல்'
**कुधातु** - **स्त्री०** இரும்பு
**कुनकुना** - **वि०** வெதுவெதுப்பான ; இளஞ்சூடான
**कुनबा** - **पु०** குடும்பம்
**कुनह** - **स्त्री०** வெறுப்பு ; விரோதம்
**कुनाई** - **स्त्री०** ரம்பத்தூள் ; கரித்தூள் ; கடைசல் ; கடைசல் கூலி; **वि०** குறைவான ; கம்மியான
**कुन्नियत** - **स्त्री०** வம்சப் பெயர்
**कुपंथ** - **पु०** கெட்ட வழி
**कुपढ़** - **वि०** படிப்பில்லாத
**कुपथ** - **पु०** கெட்ட வழி ; தகாத நடத்தை ; அபத்தியச் சாப்பாடு
**कुपथ्य** - **पु०** அபத்தியச் சாப்பாடு
**कुपाठ** - **वि०** கெட்ட யோசனை; துர்போதனை
**कुपात्र** - **वि०** தகுதியற்ற
**कुपित** - **वि०** கோபமுள்ள
**कुपुत्र** - **पु०** கெட்ட புத்திரன்
**कुप्पा** - **पु०** தோல் ஜாடி
**कुप्पामल** - **पु०** தடிராமன்
**कुप्पी** - **स्त्री०** சிறிய தோல் ஜாடி
**कुफ़्फ़ार** - **पु०** **'काफ़िर' का बहु०** நாஸ்திகர்கள்
**कुफ़्** - **पु०** இஸ்லாமிய மதத்தினின்று வேறுப்பட்ட மதம்

**कुफ़्ल** - **पु०** பூட்டு

**कुबड़ा** - **पु०** கூனன்; **वि०** கோணலான; வளைந்த

**कुबड़ी** - **स्त्री०** கூனி; வளைந்த பிடியுள்ள தடி

**कुबुद्धि** - **स्त्री०** துர்புத்தி

**कुबेला** - **स्त्री०** கெட்ட வேளை

**कुब्ज** - **वि०** கூனலுள்ள

**कुमंत्रणा** - **स्त्री०** கெட்ட யோசனை

**कुमक** - **स्त्री०** உதவி; பக்ஷபாதம், ஒரு தலைச்சார்பு; மகிழ்ச்சி

**कुमकी** - **स्त्री०** ஆண் யானைகளைப் பிடிக்க உதவும் பெண் யானை

**कुमत** - **पु०** கெட்ட அபிப்பிராயம்; தீய கொள்கை

**कुमति** - **स्त्री०** கெட்ட புத்தி

**कुमाच** - **पु०** ஒருவகைப்பட்டுத் துணி

**कुमार** - **पु०** புத்திரன்; இளவரசன்; கிளி; செம்பொன்

**कुमारी** - **स्त्री०** விவாகமாகாத பெண்; கன்னி

**कुमार्ग** - **पु०** கெட்ட வழி

**कुमार्गी** - **वि०** கெட்ட நடத்தையுள்ள

**कुमुद** - **पु०** } அல்லி;
**कुमुदिनी** - **स्त्री०** } அல்லிக்குளம்

**कुम्मैत** - **पु०** கறுப்புக் கலந்த சிவப்பு நிறம்; அரக்கு நிறம்;மேற்படி நிறமுள்ள குதிரை

**कुम्हड़ा** - **पु०** பூசணிக்காய்

**कुम्हलाना** - **अ०** வாட; வதங்க

**कुम्हार** - **पु०** குயவன்

**कुरंग** - **पु०** மான்; கெட்ட நடவடிக்கை

**कुरक़ी** - **स्त्री०** **कुर्क़ी** ஜப்தி செய்தல்; கைப்பற்றுதல்

**कुरकुरा** - **वि०** முறமுறப்பான; கரகரப்பான; சுலபமாய் உடையக்கூடிய

**कुरता** - **पु०** குடுத்துணி; ஜுப்பா

**कुरती** - **स्त्री०** கையில்லாத ரவிக்கை; 'பாடி'

**कुरबत** - **स्त्री०** சமீபம்

**कुरबान** - **वि०** பலியிடப்பட்ட; **—होना** - பலியாக

**कुरबानी** - **स्त्री०** பலி; காவு

**कुरलना** - **अ०** பட்சிகளின் இனிய ஓசை ஒலிக்க

**कुरव** - **पु०** தீய சொல் **वि०** தீய சொல் பேசுகிற

**कुरवना** - **स०** குவிக்க

**कुरसी** - **स्त्री०** **कुर्सी** நாற்காலி; வம்சபரம்பரை; **—नामा** - வம்சாவளி; **आराम कुरसी** -

சாய்வு நாற்காலி ;—**पाना** - பட்டம் பதவி அல்லது புகழ் அடைய ; **देना** - மரியாதை செய்ய

**कुराई - स्त्री०** நடைபாதையில் உள்ள பள்ளம் படுகுழி ; மேடுபள்ளமான நிலம்

**कुरान - पु०** அரபு மொழியில் உள்ள இஸ்லாமிய வேதம்

**कुराह - स्त्री०** கெட்ட வழி ; கெட்ட நடத்தை

**कुराहर - पु०** கூச்சல்

**कुराही - वि०** கெட்ட வழியில் செல்லுகிற

**कुरीति - स्त्री०** தீய முறை; தீய பழக்கம்

**कुरुख - वि० नाराज़** கோபமான

**कुरूप - वि०** குரூபமான ; கோரமான

**कुरेदना - स०** தோண்ட; குவியலைக் கலைக்க

**कुर्क़ - वि०** ஜப்தியான

**कुर्ब - पु०** சமீபம் ; பக்கம்

**कुलंग - पु०** சேவல்

**कुलंजन - पु०** சித்தரத்தை ; வெற்றிலைவேர்

**कुल - पु०** வம்சம் ; கூட்டம் ; வியாபாரிகள் கழகம் ; **वि०** எல்லாம் ; மொத்தம் ; பூரா

**कुलच्छनी - स्त्री०** கெட்ட அறிகுறியுள்ள ; குடிகேடி

**कुलट - वि०** கெட்ட நடத்தையுள்ள

**कुलटा - स्त्री०** வேசி ; நடத்தை கெட்டவள்

**कुलथी - स्त्री०** கொள்ளு

**कुलफ़ - पु० दे० कुलुफ़**

**कुलफ़त - स्त्री०** மனக்கவலை

**कुलफ़ी - स्त्री०** ஐஸ்கிரீம் செய்யப் பயன்படும் சிறு தகரக் குவளை

**कुलबुलाना - अ०** அசைய ; சஞ்சலப்பட

**कुलबोरन - वि०** குலத்தின் பெயரைக் கெடுக்கிற

**कुलवंत** / **कुलवान** } **वि०** உயர் குலத்து

**कुलह - स्त्री०** குல்லா ; தொப்பி

**कुलही - स्त्री०** பனிக்குல்லா

**कुलांगार - पु०** குலத்தை நாசம் செய்பவன்

**कुलांच - स्त्री०** குதித்தல்; பாய்ச்சல் ; துள்ளல் ;—**भरना** - துள்ளிக்குதிக்க

**कुलाबा - पु०** கதவின் ஆதாரம் அல்லது தாங்கல் ; கீல்

**कुलिश - पु०** வைரம்; மின்னல்; இடி ; கோடாலி

**कुली - पु०** கூலியாள் ; மூட்டைத் தூக்கி

**कुलीन** - **वि०** உயர்குலத்து ; பவித்திரமான

**कुलुफ़** - **पु०** **ताला** பூட்டு

**कुलेल** - **स्त्री०** விளையாட்டு

**कुल्ला** - **पु०** }
**कुल्ली** - **स्त्री०** } வாய் கொப்பளித்தல்

**कुल्लियात** - **पु०** கவி அல்லது எழுத்தாளரின் கிருதிகளின் தொகுதி

**कुल्हड़** - **पु०** மண் கலயம்

**कुल्हाड़ी** - **स्त्री०** கோடலி

**कुल्हिया** - **स्त्री०** **घरिया** சிறு மண் கலயம் ; தங்கம், வெள்ளி உருக்கும் மூசை ;—**में गुड़ फोड़ना** - ரகசியமாக ஏதாவது காரியம் செய்ய

**कुल्या** - **पु०** சிற்றோடை ; சிறு ஆறு

**कुवलय** - **पु०** நீலத்தாமரை ; பூமண்டலம்

**कुवाच्य** - **वि०** சொல்லத்தகாத; **पु०** வசைச்சொல்

**कुविचारी** - **वि०** கெட்ட எண்ணமுள்ள

**कुवेणी** - **स्त्री०** மீன் கூடை

**कुव्वत** - **स्त्री०** **कूवत** சக்தி; பலம்

**कुश** - **पु०** தர்ப்பைப் புல்

**कुशल** - **वि०** கைதேர்ந்த ; க்ஷேமமான ; **पु०** க்ஷேமம்; நலம்

**कुशाग्र** - **वि०** தர்ப்பைப் புல் நுனியைப்போலக் கூர்மையான ; —**बुद्धि** புத்திக் கூர்மையுள்ள

**कुशादा** - **वि०** விசாலமான ; திறந்த

**कुशीलव** - **पु०** பாடகன் ; நாடகத்தில் நடிப்பவன்

**कुश्तम-कुश्ता** - **पु०** கலகம் ; சண்டை

**कुश्ता** - **वि०** கொல்லப்பட்ட ; **पु०** சாம்பல்

**कुश्ती** - **स्त्री०** குஸ்தி ; —**बाज़** - குஸ்தி விளையாடுகிற ; பயில்வான்

**कुसंग** - **पु०** தீயவர் சேர்க்கை

**कुसमय** - **पु०** கெட்ட காலம் ; தகுதியற்ற சமயம்

**कुसल** - **वि०** **दे०** **कुशल**

**कुसलाई** - **स्त्री०** திறமை ; க்ஷேமம்

**कुसाइत** - **स्त्री०** அசுப முகூர்த்தம்

**कुसियार** - **पु०** அதிகச் சாறு உள்ள கரும்பு

**कुसीद** - **पु०** வட்டி ; வட்டிக்குக் கடன் கொடுத்த பணம்

**कुसुंभ** - **पु०** துணிகளுக்காகச் சிவப்புச் சாயம் இறக்கும் ஒரு பூ ; வெளி அன்பு

**कुसुम** - **पु०** பூ; கண்ணில் விழும் பூ; மாதவிடாய்

**कुसुमांजलि** - **स्त्री०** இரு கைகள் நிறையப் புஷ்பங்கள் எடுத்து கடவுள் மேல் போடுதல்; மலர் அஞ்சலி

**कुसुमाकर** - **पु०** வசந்த காலம்

**कुसुमायुध** - **पु०** காமதேவன்

**कुसुमित** - **वि०** மலர்ந்த

**कुहक** - **पु०** ஏமாற்றம்; துஷ்டன்; மயில் அல்லது குயிலின் கூவல்

**कुहकना** - **अ०** பறவை இனிமையாகக் கூவ

**कुहनी** - **स्त्री०** முழங்கை; —**उड़ान** - குஸ்தியில் ஒரு வீச்சு

**कुहर** - **पु०** துவாரம்

**कुहरा** - **पु०** மூடுபனி

**कुहराम** - **पु०** அழுகை; இரைச்சல்

**कुहासा** - **पु० दे० कुहरा**

**कुहुक** - **पु०** பக்ஷிகளின் இனிமையான ஒலி

**कुहुकना** - **अ०** பக்ஷிகளைப் போல் இனிமையாகப் பேச

**कूँचा** - **पु०** துடைப்பம்

**कूँची** - **स्त्री०** சிறு துடைப்பம்; வர்ணம் பூசும் ப்ருஷ்

**कूँडा** - **पु०** பானை; பூந்தொட்டி

**कूँडी** - **स्त्री०** சிறு தொட்டி

**कूँथना** - **स०** வேதனையில் முனக; மெல்ல அரற்ற **स०** அடிக்க; புடைக்க

**कूईं** - **स्त्री० दे० कुमुदिनी**

**कूक** - **स्त्री०** குயிலின் கூவு ஒலி; இனிமையான தொனி

**कूकना** - **अ०** மயில் அல்லது குயில் கூவ

**कूकर** - **पु० कुत्ता** நாய்

**कूच** - **पु०** புறப்பாடு (சேனை) —**कर जाना** - இறந்து போக; —**बोलना** - புறப்பட

**कूचा** - **पु०** சந்து

**कूज** - **स्त्री०** தொனி; கூவல்

**कूजन** - **पु०** பறவைகளின் இனிமையான கூவல்

**कूजना** - **अ०** இனிமையாகப் பேச அல்லது கூவ

**कूज़ा** - **पु०** கூஜா; மண் பாண்டத்தில் படிய விட்ட கற்கண்டு

**कूट** - **वि०** பொய்யான; —**नीति** - அரசியல் தந்திரம்; சூது; **पु०** மலை உச்சி; பெருங்குவியல்; எளிதில் பொருள் விளங்காத கவிதை

**कूटना** - **स०** இடித்துப் பொடியாக்க

**कूटस्थ - वि०** மிகச் சிறந்த ; அழிவற்ற ; மாறுதலற்ற ; **पु०** பரமாத்மா

**कूड़ा - पु०** கூளம் ; பயனற்ற பொருள் ; —**करकट** - குப்பை கூளம் ; —**ख़ाना** - குப்பை கூளம் கொட்டுமிடம்; குப்பைமேடு

**कूढ़ - वि०** அறிவில்லாத ; —**मग्ज़** - மந்த புத்தியுள்ள

**कूत - स्त्री०** பொருளின் எண்ணிக்கை, விலை, அளவு ஆகியவற்றின் உத்தேச மதிப்பு; குத்துமதிப்பு

**कूतना - स०** மதிப்பிட

**कूदना - अ०** குதிக்க

**कूप - पु० कुआँ** கிணறு ; —**मंडूक** - கிணற்றுத் தவளை; உலகமறியாதவன்

**कूबड़ - वि०** கோணல் ; கூன்

**कूर - वि०** தயவற்ற; கெட்ட; பயங்கரமான

**कूरा - पु०** குவியல் ; பாகம் ; கூறு

**कूर्म - पु० ककुआ** ஆமை

**कूल - पु०** கரை ; சமீபம் ; பெரிய வாய்க்கால் ; சேனையின் பின்புறம்

**कूल्हा - पु० चूतड़** சூத்தாமட்டை ; ப்ரஷ்ட பாகம்

**कूवत - स्त्री०** பலம் ; வலிமை

**कूष्मांड - पु०** பூஷணிக்காய்

**कूह - स्त्री०** யானையின் பிளிறல்

**कृत - वि०** செய்யப்பட்ட ; —தொகுக்கப்பட்ட
—**कार्य** - எண்ணம் நிறைவேறிய ; —**कृत्य** - காரியம் கைகூடிய ; கடமையைச் செய்து முடித்த

**कृतघ्न - वि०** நன்றி கெட்ட

**कृतज्ञ - वि०** நன்றியறிவுள்ள

**कृतांत - पु०** முடிவு ; மரணம் ; யமன்

**कृतार्थ - वि०** காரியம் கைகூடின ; திருப்தியடைந்த

**कृति - स्त्री०** செயல் ; காரியம்; கிருதி (இலக்கியம்) ; —**स्वास्य** - நூல் உரிமை; காபிரைட்

**कृती - वि०** நல்ல திறமையுள்ள ; முயற்சியுள்ள ; புண்ணியசாலி

**कृत्य - पु०** காரியம் ; கடமை

**कृत्रिम - वि०** செயற்கையான

**कृदंत - पु०** வினை முற்று (இலக்கணம்)

**कृपण - पु० कंजूस** கஞ்சன்

**कृपया - क्रि०** தயவு செய்து

**कृपा - स्त्री० मेहरबानी** தயை ; அருள் ; ஆதரவு ;— **पात्र** - தயைக்கு ஆளான

**कृपाण - पु०** கத்தி ; வாள்
**कृपालु - वि०** தயவுள்ள
**कृमि - पु०** கிருமி ; புழு
**कृश - वि०** மெலிந்த; சிறிய
**कृशानु - पु०** அக்கினி ; நெருப்பு
**कृशित - वि०** மெலிந்த
**कृशोदरी - वि०** சிறுத்த இடையுள்ள
**कृषक - पु० किसान** குடியானவன்
**कृषि - स्त्री० खेती** விவசாயம்
**कृष्ण - वि०** கறுப்பான ; **पु०** கிருஷ்ண பரமாத்மா
**केंचली**, **केंचुली** } **स्त्री०** பாம்புச் சட்டை
**केंचुआ - पु०** மண்ணுண்ணிப் பாம்பு ; வயிற்றுப்புழு
**केंद्र - पु०** நடுப்புள்ளி ; மையமானப் பகுதி ; முக்கிய இடம்
**केकड़ा - पु०** நண்டு
**केकी - पु०** மயில்
**केचित् - सर्व०** சிலர் ; யாரோ சிலர்
**केड़ा - पु० अंकुर** முளை
**केत - पु०** வீடு ; இடம் ; கொடி ; அடையாளம்
**केतकी - पु० केवड़ा** தாழம்பூ
**केता**, **केतिक** } **- वि०** எத்தனை ; எவ்வளவு
**केतु - पु०** கொடி ; அடையாளம் ; வால் நக்ஷத்திரம் ; ஞானம்
**केदार - पु०** நாற்று விடும் வயல் ; சிவன்
**केयूर - पु०** கைக் கவசம் ; தோளில் அணியும் ஒரு நகை
**केराना - पु० किराना** மளிகைச் சாமான்கள்
**केरानी - पु०** ஆங்கிலோ இந்தியர் ; கிறிஸ்தவர் ; குமாஸ்தா
**केरी - स्त्री० अबिया** சிறிய மாவடு ; கல் வாழைச் செடி
**केला - पु०** வாழை
**केलि - स्त्री०** விளையாட்டு ; சிரிப்பு ; ஊடுதல்
**केवट - पु० नाविक** படகோட்டி ; மீனவர்
**केवड़ा - पु० दे० केतकी**
**केवल - क्रि० सिर्फ़** மாத்திரம் **वि०** தனியாக ; தனித்த ; தூயதான
**केवा - पु०** தாமரை ; தழை ; சங்கோசம் ; பாசாங்கு
**केश - पु०** தலைமயிர் ; கிரணம் ; சூரியன் ; உலகம் ;—**पाश -** மயிர்க் கொத்து ; கூந்தல் ; —**विन्यास -** முடி அலங்காரம்

**केशरी** - पु० दे० केसरी

**केस** - पु० दे० केश

**केसर** - पु० குங்குமப்பூ

**केसरिया** - वि० குங்குமப்பூ நிற மான ; ஆரஞ்சு நிறமான

**केसरी** / **केहरी** } पु० சிங்கம் ; குதிரை

**कैंकर्य** - पु० தொண்டு ; பணி விடை

**क़ैंचा** - पु० ऐंचाताना இழுத்துப் பறித்தல் ; சாக்குப் போக்கு

**कैंचा** - पु० பெரிய கத்தரிக் கோல்

**कैंची** - स्त्री० கத்தரிக்கோல்

**कै** - वि० எத்தனை अव्य அல்லது

**क़ै** - स्त्री० வாந்தி

**कैतव** - पु० ஏமாற்றம் ; சூது ; वि० ஏமாற்றுகிற ; சூதாடு கிற

**कैथ** / **कैथा** } पु० விளாம்பழம்

**क़ैद** - स्त्री० சிறைவாசம் ; —**ख़ाना** - சிறைக்கூடம்; ஜெயில் ; —**महज़** - வெறுங் காவல் ; —**सख्त** - கடுங் காவல் ; —**तन्हाई** - தனிக் காவல்

**क़ैदी** - पु० கைதி

**क़ैफ़** - पु० नशा போதை ; மகிழ்ச்சிப்பெருக்கு

**कैफ़ियत** - स्त्री० சமாசாரம் ; விவரம் ; —**तलब करना** - காரணம் விசாரிக்க

**कैफ़ी** - वि० मतवाला போதை யுள்ள

**कैरव** - पु० வெண் தாமரை ; பகைவன்

**कैवत** - पु० दे० केवट

**कैवल्य** - पु० தூய்மை;மோக்ஷம்; முக்தி ; பற்றின்மை

**कैसर** - पु० सम्राट சக்கரவர்த்தி

**कैसा** - वि० எப்படிப்பட்ட

**कैसे** - क्रि० எவ்விதமாய் ; எப் படி

**कोंइछा** - स्त्री० ஸ்திரீகள் இடுப்பில் செருகிக்கொள் ளும் கொசுவமடிப்பு

**कोंचना** - स० चुभाना குத்த ; புதைக்க

**कोंछ** - पु० புடவையின் முந் தானைப் பகுதி

**कोंछना** - स० கொசுவத்தை மடித்து உள்ளே செருக

**कोंपर** / **कोंपल** } स्त्री० துளிர் ; தளிர்

**कोंहड़ा** - पु० பூஷணிக்காய்

**कोआ** - पु० பட்டுப் புழுவின் கூடு ; பலாச்சுளை ; கண் ணின் ஓரம்

**कोइरी** - पु० காய்கறி பயிர் செய்து விற்கும் ஜாதி

**कोई** - वि० எவனாவது ஒரு; எவளாவதொரு; ஏதாவதொரு; क्रि० சுமார்

**कोक** - पु० दे० **चकवा**

**कोकनद** - पु० செந்தாமரை

**कोकिल** - पु०
**कोकिला** - स्त्री० } குயில்

**कोख** - स्त्री० வயிறு; கர்ப்பப்பை

**कोच** - पु० கோச்சு வண்டி

**कोचवान** - पु० குதிரை வண்டிக்காரன்

**कोट** - पु० கோட்டை; கூட்டம்; கோட்டு; ஒரு கோடி

**कोटर** - पु० மரப் பொந்து

**कोटि** - स्त्री० வில் நுனி; வரிசை; கூட்டம்; சிறப்பு; **करोड़** ஒரு கோடி

**कोटिक** - वि० **करोड़** கோடி; கணக்கிலடங்காத

**कोटिशः** - क्रि० பலவிதமாக; वि० மிக அதிகமான

**कोठरी** - स्त्री० சிறு அறை

**कोठा** - पु० பெரிய அறை; சாமான்கள் வைக்கும் அறை; உக்கிராணம்

**कोठार** - पु० கிடங்கு; பண்டகசாலை

**कोठारी**-पु० கிடங்கின் அதிகாரி

**कोठी** - स्त्री० பெரிய வீடு; பங்களா; லேவாதேவிக் கடை; —**बैठना, बिगड़ना** - இன்ஸால்வெண்டு ஆக; —**चलना** - வியாபாரம் வளர; —**वाला** - பெரிய வியாபாரி; வட்டிக் கடைக்காரர்

**कोड़ना** - स० **खोदना** தோண்ட

**कोड़ा** - पु० சவுக்கு; சாட்டை

**कोड़ी** - स्त्री० இருபது

**कोढ़** - पु० குஷ்டம்

**कोढ़ी** - पु० குஷ்டரோகி

**कोण** - पु० கோணம்; ஏவுகணையின் நுனி

**कोतल** - पु० நன்றாக அலங்கரித்து ஊர்வலம் முதலியவற்றிற்கு வைத்திருக்கும் குதிரை

**कोतवाल** - पु० கொத்தவால்; போலீஸ் அதிகாரி

**कोतवाली** - स्त्री० கொத்தவாலின் கச்சேரி

**कोताह** - वि० சிறிய; குறைவான; —**अन्देश** - **अदूरदर्शी** முன்யோசனை இல்லாதவன்; —**गरदन** - சிறுகழுத்துள்ள; வஞ்சகன்

**कोताही** - स्त्री० குறை; குற்றம்

**कोथला** - पु० பெரிய பை; வயிறு

**कोदंड - पु०** **धनुष** வில் ; புருவம்

**कोदो | पु०** திணை ; **—दलवाना -**
**कोदों** கடினமான வேலை செய்விக்க ; **—देकर पढ़ना -** அரை குறையாகப் படிக்க; சொற்ப செலவில் படிக்க

**कोना - पु०** மூலை ; **—कोने-कोने में घुसना -** மூலை முடுக்குகளில் ஒளிய

**कोनिया - स्त्री०** சுவர்ச்சட்டம்

**कोप - पु०** **गुस्सा** கோபம்

**कोपल - स्त्री दे०** **कोंपल**

**कोपी - वि०** கோபமுள்ள

**कोपीन - पु० दे०** **कौपीन**

**कोफ़्त - स्त्री०** கஷ்டம் ; துக்கம்

**कोफ़्ता - फ०** **क़बाब** ஒரு வித மாமிச ஆகாரம்

**कोबी - स्त्री० दे०** **गोभी**

**कोमल - वि०** மிருதுவான

**कोयल - स्त्री०** குயில்

**कोयला - पु०** நிலக்கரி ; அடுப்புக்கரி

**कोया - पु०** பலாச்சுளை

**कोर - स्त्री०** கரை ; ஓரம் ; பகைமை ; வரிசை ; **वि०** **—क़सर -** குற்றம் குறை ; பிழை

**कोरनिश - स्त्री०** உடம்பை வளைத்து வணக்கம் செய்தல் ; கும்பிடல்

**कोरमा - पु०** குருமா ; வறுத்த மாமிசம்

**कोरा - वि०** புதிய ; கரையில்லாத ; முட்டாளான ; **पु०** கரையில்லாத பட்டுத்துணி ; **—जवाब -** முற்றிலும் மறுத்தல்

**कोरी - पु०** ஹிந்து சேணியன்

**कोल - पु०** பன்றி ; ஒரு பூர்விகக்குடி ; மிளகு ; படகு ; ஒரு தோலா ; மடி

**कोलाहल - पु०** இரைச்சல்

**कोली - स्त्री०** **गोद** மடி ; **दे०** **कोरी**

**कोल्हू - पु०** எண்ணெய்ச் செக்கு ; கரும்பு ஆலை **—का बैल -** மிகவும் உழைக்கின்ற ; அறிவில்லாத ; **—में डालकर पेरना -** மிகுந்த துன்பம் தர

**कोविद - वि०** பண்டிதனை

**कोश - पु०** பொக்கிஷம் ; டப்பா ; மூடி ; அகராதி ; வாளுறை ; **—कार -** அகராதி எழுதுபவன் ; **—पाल -** பொக்கிஷதாரர்

**कोशिश - स्त्री०** முயற்சி

**कोष - पु० दे०** **कोश** ; அண்டகோசம் ; அகராதி ; கஜானா

**कोषाध्यक्ष - पु०** பொக்கிஷதார்

कोष्ठ - पु० வயிற்றின் உள பாகம்; உள்ளறை; கிடங்கு; —बद्ध - पु०, बद्धता - स्त्री० மலபந்தம்

कोष्ठक - पु० சுவர்; கோடு அல்லது கமானால் சூழப்பட்ட இடம்; ப்ராக்கட் ( ) அடையாளம்

कोस - पु० இரண்டு மைல் தூரம்; கஜானா

कोसना - स० சபிக்க; திட்ட

कोसा - पु० ஒருவிதப் பட்டு; மண் அகல்

कोह - पु० மலை; கோபம்

कोहकन - पु० மலை வெட்டுபவன்; फ़रहाद என்பவனுடைய மறு பெயர், शीरीं யின் காதலன்

कोहनी - स्त्री० முழங்கை

कोहबर - पु० கல்யாண வீட்டில் குல தேவதையை அமைக்கும் அறை

कोहान - पु० ஒட்டகத்தின் திமில்

कोहाना - अ० கோபிக்க; சிணுங்க

कोहिस्तान - पु० மலைப் பாங்கான நாடு

कोही - वि० கோபிக்கிற; மலைப்பாங்கான

कौंध - स्त्री० மின்னல்; ஒளி

कौंधना - अ० மின்ன; ஒளிர

कौंधनी - स्त्री० ஒட்டியாணம்

कौआ - पु० दे० कौवा

कौटुंबिक - वि० குடும்ப சம்பந்தமான

कौड़ी - स्त्री० சோழி; —का - மிக அற்பமான; —के तीन होना - மலிந்து போக; —कौड़ी चुकाना - பாக்கியில்லாமல் கடனை அடைக்க; —कौड़ी जोड़ना - சிறுகச் சிறுகப் பணம் சேர்க்க

कौतुक, कौतूहल - पु० दे० कुतूहल

कौन - सर्व० யார்; எது

कौपीन - पु० கோவணம்

क़ौम - स्त्री० ஜாதி; இனம்

कौमार - पु० பிள்ளைப் பருவம்

क़ौमियत - स्त्री० ஜாதி

क़ौमी - वि० ஜாதி சம்பந்தமான; —ज़बान - பொது மொழி; —हुकूमत - சுயராஜ்யம்; —मजलिस - தேசீய மகாநாடு

कौमुदी - स्त्री० நிலவு; அல்லிப்பூ

कौर - पु० கவளம்

क़ौल - पु० வாக்கியம்; சொல்; வாக்குறுதி; —व फल - சொல்லும் செயலும்

**कौवा** - पु० காக்கை

**कौवागुहार** - வீண் பேச்சு; அரட்டை

**कौवाली** - स्त्री० 'ஸூபி' மதத்தினர் பாடும் கீர்த்தனம்

**कौशल** - पु० திறமை

**कौशेय** - पु० பட்டு

**क्या** - सर्व० என்ன

**क्यारी** - स्त्री० பாத்தி

**क्यों** - क्रि० ஏன்; —**कर** - எவ்விதம்; எப்படி; —**कि** - ஏனென்றால்

**क्रन्दन** - पु० அழுகை

**क्रम** - पु० வரிசைக் கிரமம்; தொடர்ச்சி; —**बद्ध** - வரிசைக்கிரமமான

**क्रमशः** - क्रि० போகப்போக; வரிசையாக; முறையே

**क्रमागत** - वि० கிரமமாக வந்துள்ள

**क्रमानुकूल** } वि० முறையான;
**क्रमानुसार** } क्रि० முறைப்படி

**क्रमिक** - वि० முறையாக அமைந்த

**क्रय** - पु० வாங்குதல் —**विक्रय** - வாங்குவதும் விற்பதும்

**क्रयी** - पु० வாங்குபவன்

**क्रव्य** - पु० மாமிசம்

**क्रांत** - वि० அழுத்திய; தாண்டப்பட்ட; எதிர்க்கப்பட்ட; முன்னே நீட்டிய

**क्रांति** - स्त्री० புரட்சி; செல்கை; —**मंडल, वृत्त** - சூரியன் சுற்றும் வானவெளிப் பாதை; —**कारी** - புரட்சிக்காரன்

**क्रिया** - स्त्री० செயல்; நித்திய கருமம்; வினைச்சொல் (இலக்கணம்); —**कर्म** - ஈமச்சடங்கு; —**विशेषण** - வினை உரிச்சொல்

**क्रिस्तान** - पु० கிறிஸ்தவர்

**क्रीड़ा** - स्त्री० விளையாட்டு

**क्रीत** - वि० விலைக்கு வாங்கப்பட்ட

**क्रुद्ध** - वि० கோபமடைந்த

**क्रूर** - वि० கொடுமையான; குரூரமான

**क्रोड़** - पु० गोद மடி; மார்பு

**क्रोड़पत्र** - पु० அநுபந்தம்; பின் இணைப்பு

**क्रोध** - पु० கோபம்

**क्रोधी** - वि० கோபங்கொண்ட; கோபித்துக் கொள்ளுகிற

**क्रौंच** - पु० ஒருவிதப் பக்ஷி

**क्लांत** - वि० களைத்த

**क्लांति** - स्त्री० களைப்பு

**क्लिष्ट** - वि० கஷ்டமான

**क्लीब** - वि० ஆண்மையற்ற; பயங்கொள்ளியான; அலியான

**क्लेद - पु०** ஈரம் ; வியர்வை

**क्लेश - पु०** துக்கம் ; வேதனை ; ஆயாசம்

**क्लैब्य - पु०** சோர்வு; ஆண்மை இல்லாமை

**क्वचित् - क्रि०** அரிதாய்

**क्वणित - वि०** ஒலிக்கிற

**क्वाथ - पु० काढ़ा** கஷாயம்

**क्वारा - पु०** விவாகம் ஆகாத வன் ; **वि०** விவாகமாகாத

**क्षंतव्य - वि०** மன்னிக்கக் கூடிய

**क्षण - पु०** க்ஷணம் ; கணம்

**क्षणभंगुर, क्षणिक - वि०** நொடியில் நசித்துப் போகக்கூடிய

**क्षत - वि०** காயப்பட்ட ; **पु०** காயம் ; அடி ; **—विक्षत -** காயம்பட்ட

**क्षति - स्त्री०** நஷ்டம் ; நாசம்

**क्षत्र - पु०** பலம் ; க்ஷத்திரியன்

**क्षत्राणी - स्त्री०** க்ஷத்திரியப் பெண்

**क्षपा - स्त्री०** இரவு ; **—कर -** சந்திரன்

**क्षमता - स्त्री०** தகுதி ; யோக்கியதை ; திறமை

**क्षमा - स्त्री० माफ़ी** மன்னிப்பு

**क्षमी - वि०** மன்னிக்கும் இயல்புள்ள

**क्षम्य - वि०** மன்னிக்கத்தக்க

**क्षय - पु०** குறைதல் ; பிரளயம் ; க்ஷயரோகம்

**क्षय्य - वि० नश्य** அழியத் தகுந்த

**क्षर - वि०** அழியக்கூடிய

**क्षाम - वि०** க்ஷீணமான ; பல வீனமான ; **पु०** கடும் பஞ்சம்

**क्षार - पु०** உவர்மண் ; உப்பு ; சாம்பல் ; **वि०** உப்பான

**क्षालन - पु०** அலம்புதல் ; சுத்தப்படுத்துதல்

**क्षिति - स्त्री०** பூமி

**क्षितिज - पु०** அடிவானம்

**क्षिप्त - वि०** எறியப்பட்ட ; வீழ்ச்சியடைந்த ; சஞ்சலமான

**क्षिप्र - क्रि०** சீக்கிரம் ; **—हस्त -** துரிதமாய் வேலை செய்யக்கூடிய

**क्षीण - वि०** மெலிந்த

**क्षीर - पु०** பால் ; பாயஸம்

**क्षुद्र - वि०** கஞ்சனை ; அற்பமான ; இழிந்த

**क्षुधा - स्त्री०** பசி ; **—तुर -** பசியால் வாடுகிற

**क्षुधित - वि०** பசியுள்ள

**क्षुब्ध, क्षुभित - वि०** மன அமைதியில்லாத ; சஞ்சலமான ; கோபமடைந்த

**क्षुर** - **पु०** க்ஷவரக் கத்தி; குளம்பு
**क्षुरक** - **पु०** நாவிதன்
**क्षेत्र** - **पु०** இடம்; கட்டம்; —**फल** - நிலப்பரப்பு
**क्षेप** - **पु०** எறிதல்
**क्षेपक** - **वि०** கலந்த; **पु०** பின்னால் சேர்க்கப்பட்ட பகுதி; இடைச்செருகல்
**क्षपण** - **पु०** எறிதல்
**क्षोणि** - **स्त्री०** பூமி
**क्षोभ** - **पु०** சஞ்சலம்; வியாகூலம்; கோபம்; வேதனை
**क्षोभित** - **वि०** வியாகூலப்பட்ட; பயப்பட்ட; கோபங்கொண்ட
**क्षोभी** - **वि०** கோபமுள்ள; வேதனை அடைந்த
**क्षौर** - **पु०** க்ஷவரம்; முடி திருத்தம்

## ख

**खं** - **पु०** பாழான இடம்; ஆகாசம்; சுவர்கம்; பிரமன்
**खंखर** - **वि०** பாழடைந்த
**खँखार** - **पु०** **खखार** கபம்
**खंग** - **पु०** வாள்; காண்டா மிருகம்
**खँगालना** / **खँघारना** - **स०** கழுவ; அலம்ப; காலி செய்ய
**खंज** - **पु०** அழகான கண்களை யுடைய ஒரு பட்சி
**खंजक** - **वि०** நொண்டியான
**खँजड़ी** - **स्त्री०** **खंजरी** கஞ்சிரா
**खंजन** - **पु०** **खंजरीट** ஒருவிதப் பறவை (கண்களை இவற்றின் கண்களுடன் ஒப்பிடுவதுண்டு)
**खंजर** - **पु०** குத்துவாள்; பிச்சுவா
**खँजरी** - **स्त्री०** சிறிய 'டபலி' வாத்தியம்
**खंड** - **पु०** பாகம்; பகுதி; **वि०** முற்றுப்பெருத; சிறிய; —**काव्य** - **पु०** சிறு காப்பியம்
**खंडन** - **पु०** உடைத்தல்; ஒரு விஷயத்தைப் பொய் யென்று நிரூபித்தல்; மறுத்தல்; —**मंडन** - இகழ்சியும் புகழ்ச்சியும்
**खंडरना** - **स०** துண்டுதுண்டாக்க
**खँडहर** - **पु०** பாழடைந்த கட்டடம்; இடிபாடு
**खंडित** - **वि०** உடைந்த; முற்றுப் பெருத; மறுக்கப்பட்ட
**खंता** - **पु०** பிக்காசு; கடப்பாறை; மண்வெட்டி
**खंदक** - **स्त्री०** அகழி; பெரிய குழி

**खंधार - पु०** கூடாரம் ; டேரா

**खंधियाना - स०** வெளியேற்ற ; காலி செய்ய

**खंभ / खंभा - पु०** கம்பம் ; தூண்

**खंभिया - स्त्री०** மெல்லிய தூண்

**खक्खा - पु०** உரத்த சிரிப்பு

**खखार - पु०** கபம்

**खखारना - अ०** காறித் துப்ப

**खखोरना - स०** தேடிப்பார்க்க

**खग - पु०** பறவை ; அம்பு ; —**नायक** - சூரியன் ; கருடன்

**खगना - अ०** குத்த ; ஈடுபட

**खगोल - पु०** ஆகாய மண்டலம்; வான நூல்; —**विद्या** - வான இயல்

**खग्ग - स्त्री०** கத்தி ; வாள்

**खग्रास - पु०** பூர்ண கிரகணம்

**खचना - अ०** அமைய ; பொருந்த ; பதிய ; **स०** பொருத்த ; அமைக்க ; பதிக்க

**खचरा - वि०** வெவ்வேறு வகை ஜந்துக்களுக்குப் பிறந்த ; துஷ்ட ; கலப்படமான

**खचाखच - क्रि०** மிக நெருங்கி ; **वि०** நிரப்பப்பட்ட ; அதிகம் நிறைந்த

**खचित - वि०** அமைக்கப்பட்ட ; பொருத்தப்பட்ட ; சித்தரிக்கப் பட்ட

**खच्चर - पु०** கோவேறு கழுதை

**ख़ज़ानची - पु०** பொக்கிஷதார்

**ख़ज़ाना - पु०** கஜானா

**खजूर - पु०** பேரீச்சம்பழம் ; ஒருவிதத் தின்பண்டம்

**खटकना - अ०** ' கட்கட் ' என்ற சத்தம் உண்டாக; நின்று நின்று வலிக்க ; மனஸ்தாபம் ஏற்பட

**खटका - पु०** பயம் ; கவலை ; கதவு, தாழ்ப்பாள் முதலியவற்றைத் தட்டுதலால் ஏற்படும் ஒலி ; காலடியின் சத்தம்

**खटकाना - स०** 'கட் கட்' என்று சத்தப்படுத்த ; தட்ட

**खटखट - स्त्री०** தட்டும் சத்தம்; மனஸ்தாபம்; சண்டை

**खटखटा - पु०** வயல்களில் பட்சிகளைத் துரத்துவதற்காகக் கட்டப்படும் டின்

**खटखटाना - स०** தட்ட

**खटना - स०** சம்பாதிக்க ; **अ०** தொழிலில் ஈடுபட

**खटपट - स्त्री०** மனஸ்தாபம் ; தட்டும் ஓசை

**खटमल - पु०** மூட்டைப்பூச்சி

**खटमिट्ठा - वि०** புளிப்பும் தித்திப்பும் கலந்த

**खटराग** - पु० குழப்பம் ; அபஸ்வரம் ; சச்சரவு

**खटाई** - स्त्री० புளிப்பு ; புளிப்பான பண்டம் ; **—में डालना** - வேலை செய்யாமல் விட்டுவைக்க; நிச்சயப்படுத்தாமல் விட்டுவைக்க

**खटाखट** - पु० 'கட் கட்' என்னும் சத்தம்; क्रि० சீக்கிரம்

**खटाव** - पु० நிர்வாகம் ; வாழ்க்கை நடத்துதல்

**खटिक** - पु० பாதி திறந்த முஷ்டி; கறிகாய் விற்கும் ஒரு ஜாதி

**खटिया** - स्त्री०, **खटोला** - पु० } சிறு கட்டில்

**खट्टा** - वि० புளிப்பான

**खट्टू** - पु० சம்பாதிப்பவன்

**खड़खड़ाना** - अ० இரு பொருள்கள் மோதிக்கொள்ள

**खडग** - पु० दे० **खड्ग**

**खड़खड़िया** - स्त्री० **पालकी** சாதாரண பல்லக்கு

**खड़बड़**, **खड़बड़ी** } स्त्री० தட்டும் சத்தம்; இடையூறு; குழப்பம்; மாறுதல்

**खड़मंडल** - पु० குழப்பம் ; சீர்கேடு ; இடையூறு

**खड़ा** - वि० நின்ற ; நிலையான ; முன்னிலையில் இருக்கிற ; **—करना** - நிற்கச் செய்ய ; நிலைநாட்ட ; கட்ட ; **—होना** - நிற்க ; நிலைநிற்க

**खड़ाऊँ** - स्त्री० பாதுகை

**खड़िया** - स्त्री० சிறு பை ; 'சாக்' கட்டி

**खड्ग पु०** - கத்தி ; வாள்

**खड्गी** - वि० வாளேந்திய ; पु० காண்டாமிருகம்

**खड्ड**, **खड्डा** } पु० பள்ளம் ; குழி

**खड़ीबोली** - स्त्री० தற்காலத்து ஹிந்தி மொழி

**खटकीड़ा** - पु० दे० **खटमल**

**ख़त** - पु० கடிதம்

**खतकशीद** - पु० மூலமட்டம் (தச்சுக்கருவி)

**ख़तना** - पु० ஸுன்னத்

**ख़तम** - वि० முடிந்த ; நிறைவேறிய; **—करना** - முடிக்க; கொல்ல ; **—होना** - முடிய

**ख़तर** - पु० பயம் ; **—नाक** - वि० பயங்கரமான

**खतरा** - पु० दे० **ख़तर**

**ख़ता** - स्त्री० குற்றம் ; **—बार** - वि० குற்றமுள்ள

**खतियाना** - स० பேரேட்டில் பதிய

**खतियौनी** - स्त्री० **ख़ाता** பேரேடு; பேரேட்டில் பதித்தல்

**ख़ते-इस्तिवा** - **पु०** பூமத்திய ரேகை

**ख़ते-शिकस्त** - **पु०** கிறுக்கலான கையெழுத்து

**ख़तोकितावत** - **पु०** கடிதப் போக்குவரத்து

**खत्ता** - **पु०** நிலவறை; தானியக் களஞ்சியம்; மண்டி

**ख़त्म** - **वि०** **दे०** **ख़तम**

**ख़दबदाना** - **अ०** கொதி ஓசை

**खदान** - **स्त्री०** சுரங்கம்

**खदेरना** - **स०** **खदेड़ना** விரட்ட

**खद्दुक** - **पु०** பெருந்தீனிக் காரன்; சாப்பாட்டு ராமன்

**खद्योज** - **पु०** விடாமின்

**खद्योत** - **पु०** மின்மினிப்பூச்சி; சூரியன்

**ख़नक** - **पु०** மண் வெட்டுபவன்; சுரங்கம் வெட்டுபவன்; கன்னம் இடுபவன்; எலி; **स्त्री०** ஒலி; ரூபாய்; கை வளைகளின் ஒலி

**ख़नकना** - **अ०** சப்திக்க; ஒலிக்க

**ख़नखजूरा** - **पु०** பூரான்

**ख़नना** - **स०** (பள்ளம்) வெட்ட

**खनिज** - **वि०** சுரங்கத்திலிருந்து எடுக்கப்பட்ட (தங்கம், வெள்ளி முதலிய கனிஜப் பொருள்)

**ख़न्नास** - **पु०** பிசாசு; சைத்தான்

**खपची** / **खपच्ची** - **स्त्री०** மூங்கில் சிம்பு

**खपटौरा** - **पु०** கரப்பு

**खपड़ा** - **पु०** ஓடு; ஆமை ஓடு; பிச்சை ஓடு

**खपड़ैल** - **स्त्री०** **दे०** **खपरैल**

**खपत** / **खपती** - **स्त्री०** செலவாதல்; விலையாதல்; மொள்ளுதல்

**खपना** - **अ०** விலையாக; செலவாக; பயன்பட

**खपरा** - **पु०** **दे०** **खपड़ा**

**खपरैल** - **स्त्री०** ஓட்டுக்கூரை

**खपाना** - **स०** உபயோகிக்க; செலவழிக்க; ஒழித்துக் கட்ட; செயலாக்க

**खप्पर** - **पु०** தொட்டிப்போன்ற பாத்திரம்; மண்டை ஓடு; பிச்சை ஓடு; கப்பரை

**ख़फ़गी** - **स्त्री०** கோபம்; சந்தோஷமின்மை

**ख़फ़ा** - **वि०** கோபமான

**ख़फ़ीफ़** - **वि०** வெட்கமடைந்த; கொஞ்சம்; லேசான

**ख़फ़ीफ़ा** - **स्त्री०** சிறியவழக்குகளை விசாரிக்கும் கோர்ட்டு; அங்குள்ள நீதிபதி

**ख़बर** - **स्त्री०** சமாசாரம்; தகவல்; செய்தி; **—लेना** -

தண்டிக்க ; —**करना** அறிவிக்க ; —**गीर** - ஒற்றன் ; காப்பாற்றுபவன் ;—**दार** - எச்சரிக்கையான ; ஜாக்கிரதை ; —**रसाँ** - தூதன்

**खबसा** - पु० சேறு

**ख़बीस** - पु० அதி துஷ்டன் ; பிசாசு ; கஞ்சன்

**ख़ब्त** - पु० **पागलपन** பைத்தியம்

**ख़ब्ती** - वि० பைத்தியமான

**खभार** / **खभारू** } கவலை ; துக்கம்

**ख़म** - वि० வளைந்த ; கோணலான ; पु० தூண் ; கோணல் ;—**ठोकना** - குஸ்திக்கு முன் புஜம் தட்ட ; —**खाना** - தோற்றுவிட ; —**दम** - தைரியமும் உற்சாகமும்

**खमीर** - पु० காடி

**खमीलन** - पु० இளைப்பு

**खम्बा** / **खम्भा** } पु० கம்பம்

**ख़यानत** - स्त्री० அடகு வைத்த பொருளைத் திருப்பிக் கொடாமை அல்லது குறைத்துக் கொடுத்தல் ; அயோக்கியத்தனம் ; நாணயமில்லாமை

**ख़याल** - पु० **ख़्याल** எண்ணம்

**ख़यालात** - पु० எண்ணங்கள்

**ख़याली** - वि० கற்பனை செய்யப்பட்ட ;—**पुलाव पकाना** - மனக் கோட்டை கட்ட ; ஆகாத பேச்சுப் பேச

**खर** - पु० **गधा** கழுதை ; —**दिमाग़** - वि० முட்டாளான; பிடிவாதமுள்ள ; கர்வங் கொண்ட

**खरक** - पु० வேலி; தட்டிக் கதவு

**खरका** - पु० துரும்பு

**ख़रखरा** - वि० दे० **खुरदरा**

**ख़रख़शा** - पु० சண்டை ; பயம் ; சங்கடம்

**खरग** - पु० **तलवार** வாள்

**ख़रगोश** - पु० முயல்

**ख़रच** - पु० दे० **ख़र्च**

**ख़रचना** - स० செலவு செய்ய ; உபயோகப்படுத்த

**खरब** - पु० நூறு '**अरब**' 1,00,00,00,00,000

**खरबूज़ा** - पु० கர்பூஜ் பழம்

**खरभर** - पु० இரைச்சல்; குழப்பம்

**खरभरना** - अ० இரைச்சல் போட ; மனம் குழம்ப

**ख़रमस्ती** - स्त्री० குறும்பு; துஷ்டத்தனம்

**खरल - पु०** மருந்து முதலியவை பொடி செய்ய உபயோகிக்கும் சிறிய கல் உரல்; கலுவம்

**खरसान - पु०** சாணைக்கல்

**खरहरा - पु०** துவரங்குச்சிகளால் செய்த துடப்பக் கட்டை; குதிரைச் சீப்பு

**खरहा - पु०** முயல்

**खरा - वि०** கூர்மையான; நல்ல; உண்மையான; **—खोटा** - நல்லதும் கெட்டதும்; **—सोना - पु०** சொக்கத் தங்கம்; நேர்மையானவன்

**ख़राई - स्त्री०** உண்மை; நேர்மை; காலையில் சிற்றுண்டி அல்லது உணவு கிடைக்காததால் ஏற்படும் உடல் கோளாறு

**खराद - पु०** கடைசல் யந்திரம்; **—पर चढ़ाना** - சீர்திருத்த; சாணையில் தீட்ட

**खरादना - स०** அச்சில் வார்த்தெடுக்க; உருவம் செதுக்க; உருவாக்க; செப்பனிட

**ख़राब - वि०** கெட்ட

**ख़राबा - पु०** அழிவு

**ख़राबी - स्त्री०** கெடுதல்; தோஷம்

**ख़राश - स्त्री०** சுரண்டுதல்; உரித்தல்

**खरिया - स्त्री०** சிறு வலைப்பை

**खरियाना - स०** பையில் போட; கைவசமாக்க; எடுத்துக் கொள்ள

**खरिहान - पु०** நெற்களம்; நெற்குவியல்; களத்து மேடு

**ख़रीता - पु०** பை; நீளமான காகித உறை

**ख़रीद - स्त्री०** வாங்குதல்; வாங்கப்பட்ட சாமான்; **—फ़रोख़्त** - வியாபாரம்

**ख़रीदना - स०** வாங்க

**ख़रीदार**, **ख़रीददार** } **पु०** வாங்குபவன்

**ख़रीफ़ - स्त्री०** குறுவை விளைச்சல்

**खरोंच - स्त्री०** பட்டையுரித்த வடு; காயவடு

**खरोंचना - स०** பட்டையுரிக்க

**ख़र्च**, **ख़र्चा** } **पु०** செலவு

**ख़र्चीला - वि०** அதிகச் செலவு செய்கிற; செலவாளியான

**खर्जूर - पु० खजूर** ஈச்சம்பழம்

**खर्रा - पु०** மசோதா; இருமல்; முதுகுப் பிளவை

**खर्राच - वि०** மிகச் செலவு

செய்கிற ; **पु०** முக்கிய மான வியாபார விவரங் களும் கணக்குகளும் குறித்த காகிதக் கட்டு

**खर्राटा - पु०** குறட்டை ; — **मारना -** ஆழ்ந்த தூக்கம் தூங்க ; குறட்டை விட்டுத் தூங்க

**खर्व - वि०** அங்கஹீனமுள்ள ; சிறிய

**खल - वि०** கொடுமையான ; போக்கிரியான ; நீசனை ; **पु०** சிறு உரல்

**ख़लक - पु०** உலகம் ; சிருஷ்டி

**खलना - अ०** கெடுதலாகப்பட ; பொடியாக்க

**खलबल - स्त्री० खलबली** குழப் பம் ; கலக்கம்

**खलबलाना - अ०** கொதிக்க ; கலங்க

**ख़लल - पु०** இடையூறு

**ख़लवत - स्त्री०** பாழிடம்

**खराल - पु०** தாழ்ந்த நிலப்பகுதி

**ख़लास - वि०** விடுபட்ட ; நழுவிய

**ख़लासी - स्त्री०** விடுதலை ; முக்தி ; மாலுமி

**खलियान** } **- पु० दे० खरिहान**
**खलिहान** }

**खलिश - स्त्री०** பீடை ; வேதனை ; துன்பம்

**खली - स्त्री०** பிண்ணாக்கு

**ख़लीज - स्त्री०** வளைகுடா அல்லது விரிகுடா

**ख़लीता - पु० दे० ख़रीता**

**खलीन - पु०** கடிவாளம்

**ख़लीफ़ा - पु०** தலைவன் ; வயோதிகன்

**ख़लील - पु०** உண்மையான நண்பன்

**ख़ल्क़ - स्त्री०** மானிட ஜாதி ; **ख़ल्क़े-ख़ुदा -** கடவுள் படைத்த உயிரினம் ; சிருஷ்டி ; படைப்பு

**खल्लड़ - पु०** மருந்து அரைக்கும் கல்லுரல் ; தோல் பை

**खल्वाट - पु०** மயிர் உதிர்ந்து சொட்டைவிழும் வியாதி ; **वि० गंजा** சொட்டையான

**खवा - पु०** தோள் ; புஜம்

**ख़वास - पु०** அரசர்கள் முதலியோரின் பிரத்தியேக வேலையாள் ; அவர்களுக்கு உடை முதலியவைகளை அணிவிப்பவன்

**खवैया - पु०** வயிறு புடைக்கச் சாப்பிடுகிறவன்

**खस - स्त्री०** வெட்டிவேர்

**खसकना - अ०** நழுவ ; விட்டுப் போக ; சொல்லாமல் செல்ல

**खसकाना - स०** விலக்க

**खसखस - स्त्री०** கசகசா

**खसखसा - वि०** உலர்ந்ததும் பொடியாகும் குணம் உடையதுமான; மெல்லிய

**ख़सम - पु०** கணவன்; எஜமானன்; விரோதி

**ख़सरा - पु०** தினசரிக் கணக்குப் புத்தகம் (ரகம் வாரியாகப் பிரிக்காதது); கர்ணத்தின் நில ஜாப்தா, அடங்கல் கணக்கு; சொறி சிரங்கு

**ख़सलत - स्त्री०** இயற்கை; சுபாவம்; பழக்கம்

**खसाना - स०** விழச் செய்ய

**ख़सिया - वि०** விதையடிக்கப்பட்ட; நபும்சகமான; **पु०** வெள்ளாட்டுக் கடா

**ख़सी | ख़स्सी - पु०** வெள்ளாட்டுக் கடா

**खसीस - वि०** கஞ்சத்தனமான

**खसोटना - स०** பிறுண்ட; பிடுங்க

**ख़स्ता - वि०** உலர்ந்து பொடியாகக்கூடிய; உடைந்த; **—हाल -** ஏழ்மை நிலையிலுள்ள; வறுமையான

**खाँखर - वि०** துவாரமுள்ள

**खाँचा - पु०** கொடி, மிலாறு முதலியவையால் செய்யப்பட்ட கூடை; கூடு; கோழிக்கூடு

**खांड - स्त्री०** சர்க்கரை; **—रस -** கருப்பஞ்சாறு

**खांडना - स०** முறிக்க; மெல்ல

**खाँडा - पु०** வாள்; பாகம்

**खाँसना - अ०** இரும

**खाँसी - स्त्री०** இருமல்; இருமல் நோய்

**खाई - स्त्री०** அகழி

**खाऊ - वि०, पु०** போஜனப் பிரியன்; 'சாப்பாட்டு ராமன்'

**ख़ाक - स्त्री०** தூள்; சாம்பல்; **—उड़ना -** நாசமாக; **—उड़ाना -** நாசமாக்க; சுற்றி அலைய; **—चाटना -** வணக்கமாயிருக்க; **—छानना -** காரியமின்றி சுற்றி அலைய; **—सिर पर उठाना -** துக்கப்பட

**ख़ाकसार - वि०** அகம்பாவமில்லாத; மிக எளிய

**ख़ाका - पु०** சட்டம்; திட்டக் குறிப்பு; நகல் திட்டம்; **—उड़ाना -** பரிகாசம் செய்ய; அவமானப் படுத்த

ख़ाक़ी - वि० காக்கி நிறமான
खाज - स्त्री० खुजली சொறி சிரங்கு
खाजा - पु० சாப்பிடக்கூடிய பண்டம்; ஒருவிதத் தின்பண்டம்
खाट - स्त्री० கட்டில்; —पर पड़ना - வியாதியுற
खाड़ी - स्त्री० விரிகுடா
खात - पु० தோண்டுதல்; குளம்; பள்ளம்
ख़ातमा - पु० முடிவு; சாவு; புத்தகத்தின் கடைசி அத்தியாயம்
खाता - पु० பேரேடு; கணக்கு; —खोलना - புதுக் கணக்கு ஆரம்பிக்க; —बंद करना - கணக்கை முடிக்க; —पीता - சாதாரண நிலையிலுள்ள
ख़ातिमा - पु० दे० ख़ातमा
ख़ातिर - स्त्री० மரியாதை; अव्य० (ஆக, उदा० आपकी ख़ातिर); —ख़्वाह - எப்படி வேண்டுமானாலும்; இஷ்டப்படி; —तवाज़ा, दारी - உபசரிப்பு; வரவேற்பு
ख़ातिरिन - अव्य० ஆக; (ஒருவருடைய) சந்தோஷத்தின் பொருட்டு
ख़ातिरी - स्त्री० மரியாதை; உபசாரம்; சந்தோஷம்
ख़ातून - स्त्री० भद्र महिला உயர் குடும்பத்தவள்
खाद - स्त्री० எரு; உரம்
खादक - पु० கடன் பட்டவன்; वि० சாப்பிடுகிறவன்
खादन - पु० சாப்பாடு
खादर - पु० தாழ்ந்த நிலம்
ख़ादिम - पु० தொண்டன்; வேலையாள்; முஸ்லிம் தர்மஸ்தாபனத்தின் அதிகாரி
ख़ादिमा - स्त्री० பணிப்பெண்
खादी - स्त्री० கையால் நூற்ற நூலைக்கொண்டு கைத்தறியில் நெய்யப்பட்ட ஆடை; கதர்; वि० சாப்பிடுகிற
खाद्य - वि० சாப்பிடத் தகுந்த
खान - पु० சாப்பாடு; —पान - அன்னபானாதிகள்; சாப்பிடுதல்; स्त्री० சுரங்கம்
ख़ान - पु० ख़ाँ தலைவன்; பட்டாணியர்களின் ஒரு பட்டம்; —ए खुदा - மசூதி; —ख़ाना - தலைவர்களுக்குத் தலைவன்
ख़ानगी - वि० வீட்டு சம்பந்தமான; சொந்தமான; स्त्री० அற்பமான வேசி

**ख़ानदान** - **पुं०** வம்சம் ; குடி ; குடும்பம்

**ख़ानदानी** - **वि०** உயர் குலத்து; பூர்வீகமான

**ख़ानम** - **स्त्री०** உயர் குடும்பத்துப் பெண்

**ख़ानसामाँ** - **पुं०** உக்கிராணச் சேவகன் ; சமையற்காரன்

**खाना** - **स०** சாப்பிட ; **पुं०** சாப்பாடு; உணவு

**ख़ाना** - **पुं०** வீடு ; அறை ; விடுதி ; ரயிலின் பெட்டி ; **—आबाद** - வீடு மக்களாலும் செல்வத்தாலும் நிரம்பியிருக்க ; **—तलाश** - போலீசார் வீட்டை சோதனை இடல் ; **—दारी** - இல்லறம் ; **—बदोश** - வீடு வாசல் இல்லாத; நாடோடி ; **—शुमारी**-ஜனத் தொகை கணக்கிடுதல் ; **—नशीन** - உத்தியோகத்திலிருந்து விலகினவன் ; **—जंगी** - உள்நாட்டுக் கலகம்; **—पुरी** - விண்ணப்பங்களில் அல்லது நமூனைக்களில் குறிப்பிட்ட இடத்தில் தேவையான தகவல் எழுதுதல்

**खाब** / **ख्वाब** } **पुं०** சொப்பனம்; கனவு

**खाबड़** - **वि०** மேடு பள்ளமான

**खाम** - **पुं०** கடிதத்தின் ; உறை (கவர்) ; மொத்தம்; குறைவான

**ख़ाम** - **वि०** கெட்ட ; பழுக்காத ; அனுபவமற்ற; ஒவ்வாத ; **—ख़याली** - வீண் யோசனைகள்

**ख़ामख़्वाह** - **क्रि० दे० ख्वाहमख़्वाह**

**ख़ामी** - **स्त्री०** பக்குவமில்லாமை ; குற்றம் ; கெடுதல்

**ख़ामोश** - **क्रि०** பேசாமல்; சத்தமில்லாமல்

**ख़ामोशी** - **स्त्री०** சத்தமின்மை ; மௌனம்

**खार** - **पुं०** உப்பு ; உவர்ப்பு ; உவர்மண்

**ख़ार** - **पुं०** முள் ; பொறுமை ; **—खाना** - பொறுமைப்பட ; பொறுமை கொள்ள ; கோபம் கொள்ள; கறுவ ; **—निकालना** - பழி வாங்க

**खारा** - **स्त्री०** உப்பான ; **पुं०** புல் வைக்கும் வலைப்பை

**ख़ारिज** - **वि०** வெளியேற்றப் பட்ட ; தள்ளுபடியான ; விசாரணை செய்யப்படாத (வழக்கு) ; தனியான

**ख़ारिश - स्त्री०** சொறி சிரங்கு

**खारी - वि०** உப்பான

**खाल - स्त्री०** தோல்; தாழ்ந்த நிலம்; **—उधेड़ना -** கடும் தண்டனை கொடுக்க; செம்மையாகப் புடைக்க

**ख़ालसा -** சீக்கிய ஜாதியாரின் ஒரு விசேஷ சபை

**खाला - वि०** தாழ்ந்த

**ख़ाला - स्त्री० मौसी** தாயாரின் சகோதரி

**ख़ालिक़ - पु०** கடவுள்

**ख़ालिस - वि०** சுத்தமான; **क्रि०** மாத்திரம்

**खाली - वि०** காலியான; பயன் படாத

**ख़ालू -** சிற்றப்பா அல்லது பெரியப்பா (தாய் வழி)

**ख़ाविंद - पु०** கணவன்; எஜமானன்

**ख़ास - वि०** முக்கியமான; சொந்தமான; விசேஷமான; **—व आम -** பொது ஜன சம்பந்தமான; **—कर -** முக்கியமாக; **—दान -** வெற்றிலை பாக்குப் பெட்டி; **—नवीस - क़लम** அந்தரங்கக் காரிய தரிசி; **—बरदार-**அரசனின் ஆயுதங்களை எடுத்துச் செல்லும் சிப்பாய்

**ख़ासा - वि०** நல்ல; அழகான; நிரம்பிய; மேன்மை தங்கிய; **पु०** விருந்துச் சாப்பாடு; மெல்லிய மஸ்லின் துணி

**ख़ासियत - स्त्री०** சுபாவம்; விசேஷ குணம்; சிறப்பு

**खिंचना - अ०** இழுக்கப்பட்ட; விரக்தியடைய

**खिंचाव - पु०** இழுக்கப்படுதல்; கவர்ச்சி; விரக்தி

**खिचड़ी - स्त्री०** பொங்கல்; பல பதார்த்தங்கள் கலந்த கதம்பப் பொருள்; **वि०** கலந்த; குளறுபடியான; **—पकाना -** ரகசிய ஆலோசனை செய்ய

**खिजलाना - अ०** கோபமடைய; **स०** கோபமூட்ட

**खिजलाहट - स्त्री०** கோபம்; உபத்திரவம்

**ख़िज़ाँ - स्त्री०** இலையுதிர்காலம்; தாழ்மை ஏற்படும் காலம்

**खिजाना - स०** கோபமுண்டாக்க

**ख़िज़ाब - स्त्री०** நரைமயிர்ச் சாயம்

**ख़िज़ालत स्त्री०** வெட்கம்

**ख़िज़्र - पु०** காடுகளில் வழி காட்டும் வன தேவதை

**खिड़की - स्त्री०** ஜன்னல்

**ख़िताब** - पु० பதவி ; பட்டம் ; பெருமை

**खित्ता** - पु० தேசம் ; மாநிலம் ; மனைக்கட்டு

**ख़िदमत** - स्त्री० சேவை ; தொண்டு ; —**गार** - தொண்டன்

**खिन्न** - वि० மனமுடைந்த ; வருத்தமடைந்த

**ख़िरद** - स्त्री० அறிவு ; மூளை ; —**मंद** - அறிவாளி

**ख़िराज** - पु० வரி

**ख़िलअत**, **खिलात** - स्त्री० அரசனால் வழங்கப்படும் ஆடை

**खिलखिलाना** - अ० உரக்கச் சிரிக்க

**खिलना** - अ० மலர ; சந்தோஷப்பட ; வெடிக்க

**ख़िलक़त** - स्त्री० ஏகாந்தம், தனிமை ; படுக்கையறை

**खिलवाड़** - पु० दे० **खेलवाड़**

**खिलाड़ी** - पु० விளையாடுபவன் ; குஸ்தி போடுபவன் ; ஜாலவித்தை செய்பவன்

**खिलाना** - स० விளையாடச் செய்ய ; சாப்பிடச் செய்ய ; மலரச்செய்ய

**ख़िलाफ़** - वि० எதிரான ; விரோதமான ; —**क़ानून** - சட்ட விரோதமான ; —**गोई** - பொய்ப்பேச்சு ; —**मरज़ी** - விருப்பத்திற்கு எதிரான

**ख़िलाफ़त** - स्त्री० கலீபா அல்லது ராஜப் பிரதிநிதியின் பதவி ; எதிர்ப்பு

**खिलौना** - पु० விளையாட்டுச் சாமான் ; பொம்மை

**ख़िलक़त** - स्त्री० சிருஷ்டி ; ஜனசமூகம் ; இயற்கை நிகழ்ச்சி

**ख़िल्त** - पु० கலவை ; சேர்க்கை ; —**स्त्री०** கபம், வாதம் முதலியன

**खिल्ली** - स्त्री० சிரிப்பு ; கிண்டல் ; ஆணி ; வெற்றிலை பீடா ; —**उड़ाना** - கிண்டல் செய்ய

**खिसकना** - अ० दे० **खसकना**

**खिसलना** - अ० வழுக்கி விழ

**ख़िसारा** - पु० நஷ்டம் ; கெடுதி

**खिसियाना** - अ० வெட்கப்பட ; கோபப்பட

**ख़िस्सत** - स्त्री० கருமித்தனம்

**खींच** - स्त्री० இழுத்தல் ; —**तान**, **खींचातानी** - இழுக்கடித்தல் ; கிண்டல்

**खींचना** - स० இழுக்க ; வரைய

**खीजना**, **खीझना** - अ० துன்பமடைய ; கோபமடைய ; எரிந்துவிழ

**खीर** - स्त्री० பாயஸம் ; —**चटाई** -

अन्नप्राशन - குழந்தைக்கு முதல் தடவையாக அன்னமூட்டும் சடங்கு
**खीरा - पु०** வெள்ளரிக்காய்; கக்கரிக்காய்
**खीरी - स्त्री०** பால்மடி (பசுவின்)
**खील - स्त्री०** பொறி; ஆணி
**खीली - स्त्री०** வெற்றிலைப்பீடா
**खीस - स्त्री०** கோபம்; வெட்கம்; நஷ்டம்; —**निपोरना -** கிண்டல் செய்ய
**खीसा - पु०** பெரிய பை; ஜேபி
**खुंदाना - स०** குதிரையைத் தாவச்செய்ய; அல்லது மிதிக்கச் செய்ய
**खुक्ख / खुक्खा वि०** காலியான; உலர்ந்த
**खुखड़ी - स्त्री०** கூர்க்கச் சிப்பாய்களின் வளைந்த கத்தி
**खुगीर - पु०** சேணம்; —**की भर्ती -** உபயோகமில்லாத பொருள்களின் சேமிப்பு
**खुचर / खुचुर स्त्री०** வீண்பழி
**खुजलाना - अ०** அரிக்க; **स०** சொறிய
**खुजली - स्त्री० खुजलाहट** அரிப்பு; நமைச்சல்; சொறி சிரங்கு
**खुजाना - स० दे० खुजलाना**
**खुटक - स्त्री०** பயம், கவலை
**खुटका - पु० दे० खटका**
**खुटकना - स०** முனையை ஒடிக்க
**खुटचाल - स्त्री०** பொல்லாத்தனம்; கெட்ட நடத்தை
**खुटचाली - वि०** பொல்லாத; தீய நடத்தையுள்ள
**खुटपन - पु०** குற்றம் குறை; பொல்லாத்தனம்
**खुटाई - स्त्री०** குற்றம்; குறை
**खुट्टी - स्त्री०** 'டு' விடுதல்
**खुट्ठी - स्त्री०** புண் காய்ந்து ஏற்படும் பொருக்கு
**खुतबा - पु०** புகழ்ச்சி; கட்டியங் கூறுதல்; —**पढा जाना -** பதவியேற்பு அறிக்கை
**खुतूत - पु० (ख़त का बहु०)** கடிதங்கள்
**खुत्थी - स्त्री०** நிலத்தின் தாளடி; இடுப்பில் கட்டிக்கொள்ளும் நீளமான பணப்பை
**खुद - अव्य० स्वयं** தானே; —**आराई - स्त्री०** தன்னைத் தானே அலங்கரித்துக் கொள்ளல்; —**काश्त -** சொந்த நிலத்தில் தானே சாகுபடி செய்பவன்; சொந்த வெள்ளாமை; சொந்தக்காரனாலேயே

उழப்படும் நிலம் ;—**कुशी** - தற்கொலை; —**गरज्ज, परस्त** - சுயநல முள்ள ; —**नुमा** - தற்பெருமை செய்து கொள்பவன்; —**परस्ती** - **मतलबी** சுயநலம்; —**ब-खुद** - தானாகவே; சுயமாக ; — **मुख़्तार, सर** - சுதந்திர முள்ள ; —**राय** - பிறர் பேச்சை மதிக்காமல் தன் னிஷ்டப்படி நடப்பவன் ; —**सिताई** - தற்புகழ்ச்சி

**खुदरा** - **पु०** சில்லரைச்சாமான் கள் ; —**फ़रोश** - சில்லரை வியாபாரி

**खुदा** - **पु०** கடவுள் ;—**का कार-ख़ाना** - பிரபஞ்சம்; உலகம்; —**की राह** - கடவுளின் பிரீதிக்காக ; —**तर्स** - கட வுளிடம் பய பக்தியுள்ள; தர்மத்திற்குப் பயப்படு கிற; —**दाद** - கடவுள் அரு ளிய ; இயற்கையான ; — **परस्त** - பக்தன்; ஆஸ்திகன்; —**वंद** - மகாராஜா (மரி யாதைவிளி) ; —**हाफ़िज़** - கடவுள் காக்கட்டும்

**खुदाई** - **स्त्री०** தோண்டுதல்; வெட்டுதல் ; தோண்டும் கூலி

**खुदाई-स्त्री०** சிருஷ்டி ; தெய்வத் தன்மை ; படைப்பு

**खुदी** - **स्त्री०** அகங்காரம்

**खुद्दी** - **स्त्री०** அரிசி, பருப்பு வகைளின் நொய்; குருணை

**खुनकी** - **स्त्री०** குளிர்ச்சி

**खुनस** - **स्त्री०** கோபம் ; சினம்

**खुनसी** - **वि०** கோபமுள்ள

**खुफ़िया** - **वि०** ரகசியமான ; —**पुलिस** - ரகசியப் போலீஸ்

**खुभना** - **स०** குத்த ; அழுத்த ; புதைக்க

**खुमान** - **वि०** சிரஞ்ஜீவியான ; ஆயுஷ்மானான

**खुमार** - **पु०** / **खुमारी** - **स्त्री०** } குடிவெறி; இரவில் விழிப்பதால் ஏற்படும் களைப்பு

**खुरंड** - **पु०** காயம் ஆறிய பின் ஏற்படும் பொருக்கு

**खुर** - **पु०** குளம்பு

**खुरखुरा** - **वि०** கரடுமுரடான; சொறசொறப்பான

**खुरखुराना** - **अ०** 'கர்புர்' என்று மூச்சு வர ; கரடுமுரடாகத் தென்பட

**खुरचन** - **स्त्री०** துருவி எடுத்த பொருள்

**खुरचना** - **स०** துருவ ; (தேங்காய் முதலியன) சுரண்ட

**खुरजी - स्त्री०** பெரிய பை

**खुरदरा - वि० दे० खुरखुरा**

**खुरपा - पु०** புல் செதுக்கும் ஆயுதம்; உழவாரம்

**खुरमा - पु०** பேரீச்சம் பழம்; ஒரு வித மிட்டாய்

**खुरशीद - पु०** சூரியன்

**खुराक - स्त्री०** உணவு

**खुराकी - स्त्री०** சாப்பாட்டுப் பணம்

**खुराफ़ात - स्त्री०** சச்சரவு; திட்டுதல்; உளறல்; வீண் வம்பு

**खुरी - स्त्री०** குளம்படி

**खुर्द - वि०** சிறிய; **—बीन** - சிறு பொருள்களைப் பெரிதாகக் காட்டும் யந்திரம் **—बुर्द** - தவருன வழியில் சம்பாதித்த பணம்; நஷ்டம்; வீண் செலவு; **—महल** - காமக் கிழத்தி வசிக்கும் இடம்

**खुर्दा - पु० खुदरा** தட்டு முட்டுச் சாமான்கள்; **—फ़रोश** - தட்டு முட்டு சாமான் வியாபாரி

**खुर्राट - वि०** வயதான; தந்திரசாலியான; அனுபவமுள்ள

**खुर्राटा - वि० दे० खर्राटा**

**खुलना - अ०** திறக்கப்பட; புறப்பட; ரகசியம் வெளிவர; **—खुलकर** சங்கோசமின்றி; பயமில்லாமல்; தடையின்றி

**खुला - पु०** தங்குதடையற்ற; தெரிந்த

**खुलासा - वि०** வெளிப்படையான; தெளிவான; **पु०** சாராம்சம்

**खुल्क - पु०** நல்லொழுக்கம்

**खुल्लमखुल्ला - क्रि०** வெளிப்படையாய்; பொதுப்படையாய்

**खुवारी - स्त्री०** குற்றம்; நாசம்

**खुश - वि०** சந்தோஷமான; **—इलहान** - இனிமையாகப் பாடுகிற; **—क़िसमत** - பாக்கியவான்; **—ख़बरी - स्त्री०** சுபசமாசாரம்; மகிழ்ச்சிச் செய்தி; **—ख़त** - அழகாய் எழுதுகிற; **पु०** அழகான எழுத்து; **—दिल** - மனமகிழ்வுள்ள; **—नवीस** - நன்ருய் எழுதுபவன்; **—नसीब** - பாக்கியசாலி; **—नुमा** - பார்ப்பதற்கு அழகான; நேர்மையுள்ள; **—नूद** - சந்தோஷமுள்ள; **—बू - स्त्री०** நல்லவாசனை; **—मिज़ाज** - இனிமையான

சுபாவமுள்ள ; —**हाल** - சுகமாக இருக்கிற ; ஐசுவரியமுள்ள
**खुशामद - स्त्री॰** முகஸ்துதி
**खुशामदी - वि॰** முகஸ்துதி செய்கிற ;—**टट्टू** - முகஸ்துதிசெய்து பிழைப்பவன்
**खुशी - स्त्री॰** சந்தோஷம்
**खुश्क - वि॰** உலர்ந்த ; ரஸிகத் தன்மையற்ற ; —**साली** - பஞ்சம் ; மழையின்மை
**खुश्की - स्त्री॰** வறட்சி ; தலம்
**खुसर - पु॰** மாமனர்
**खुसुर-खुसुर - पु॰** குசு குசு வென்று பேசுதல் ; மெதுவாகப்பேசுதல்
**खुसूसन - क्रि॰** முக்கியமாக ; விசேஷமாக
**खुसूसियत - स्त्री॰** விசேஷத் தன்மை ; தனிச் சிறப்பு
**खूँखार** } **वि॰** பயங்கரமான
**ख़ूँख़्वार** } (மிருகம்); ரத்தவெறி பிடித்த ; இரக்கமற்ற
**खूँट - पु॰** நுனி ; ஓரம் ; **स्त्री॰** காதில் உள்ள அழுக்கு
**खूँटा - पु॰** } மாடு கட்டும்
**खूँटी - स्त्री॰** } முளை
**खूँदना - अ॰** குதிக்க ; தாவ ; நசுக்க
**खूँरेज़ी - स्त्री॰** ரத்தம் சிந்துதல் ; ரத்தக்களரி
**ख़ून - पु॰** ரத்தம் ; கொலை ; —**ख़राबा** - படுகொலை ; —**उबलना** - கோபத்தால் முகம் சிவக்க ;—**का प्यासा**- கொலை செய்யும் விருப்பம் உள்ள ; —**सिर पर चढ़ना** - கொலை அல்லது தீங்கு செய்ய முயற்சிக்க ; —**के घूँट पीना** - அவச்சொல்லைப் பொறுக்க
**खूनी - वि॰** கொலை செய்கிற ; கொடூரமான ; **पु॰** கொலையாளி
**खूब - वि॰** உத்தமமான ; **क्रि॰** நன்ருய் ;—**रू** - அழகான ; —**सूरत** - அழகான ; அழகான உருவமுள்ள
**खूबी - स्त्री॰** நன்மை ; குணம்; சிறப்பு
**खूसट - वि॰** கிழடு தட்டிய ; தளர்ச்சியடைந்த ; ஊக்கமில்லாத ; ரசிகத் தன்மையற்ற ; **पु॰** ஆந்தை
**खेचर - पु॰** பறவை ; கிரகம் ; மேகம் ; **वि॰** வானத்தில் சஞ்சரிக்கிற
**खेटक** } **पु॰** சிறு கிராமம்
**खेड़ा** }
**खेत - पु॰** வயல் ; யுத்தகளம்
**खेतिहर - पु॰** குடியானவன் ; உழவன்

**खेती** - स्त्री॰ விவசாயம் ;பயிர்;
—**बारी** -விவசாயம்; பயிர்த் தொழில்
**खेद** - पु॰ துக்கம்
**खेदना** - स॰ துரத்த
**खेदा** - पु॰ காட்டு மிருகங்களை விரட்டி வளைத்து வேட்டையாடுதல்
**खेना** - स॰ துடுப்பால் படகு ஓட்ட ; கடத்த; கழிக்க
**खेप** - स्त्री॰ ஒரே நடையில் கொண்டு போகப்படும் பொருள் ; தூக்கு சுமை
**खेपना** - स॰ நேரம் போக்க ; கடத்த
**खेम** - पु॰ க்ஷேமம்
**खेमा** - पु॰ கூடாரம் ; டேரா
**खेल** - पु॰ விளையாட்டு
**खेलना** - अ॰ விளையாட ; நடிக்க
**खेलवाड़** - पु॰ விளையாட்டு ; தமாஷ் ; வேடிக்கை
**खेलाड़ी** - वि॰ दे॰ **खिलाड़ी**
**खेवट** - पु॰ படகோட்டி
**खेवा** - पु॰ படகுக் கூலி ; படகேறி நதியைக் கடத்தல் ; தடவை ; படகோட்டல்
**खेसारी** - स्त्री॰ மட்டரகமான பருப்பு
**खेह** - स्त्री॰ தூசி ; சாம்பல்

**खैंचना** - स॰ दे॰ **खींचना**
**खैर** - पु॰ கத்தைக் காம்பு
**ख़ैर** - अव्य॰ நல்லது ; பரவாயில்லை ; இருக்கட்டும் ; स्त्री॰ நன்மை ; நேர்மை ;
—**आफ़ियत** - குசலோபரி ;
—**ख़्वाह** - க்ஷேமம் அல்லது நன்மையை விரும்புகிற ;
—**बाद** - **कुशल हो** சௌக்கியமாக இரு (பிரியும் பொழுது சொல்வது) ;
—**मक़दम** - **स्वागत** நல்வரவு (வரவேற்பின் போது கூறுவது)
**ख़ैरात** - स्त्री॰ தானம்
**ख़ैरियत** - स्त्री॰ க்ஷேமம்
**खोंच** - स्त्री॰ சிராய்த்தல் ; முள் முதலியவற்றில் சிக்கித் துணி கிழிதல் ; पु॰ ஒரு பிடி சோறு
**खोंची** - स्त्री॰ ஒரு பிடி அன்னம் ; பிச்சை
**खोंटना** - स॰ காய்கறி முதலியவற்றின் மேல் பாகத்தைத் திருகியெடுக்க ; சுரண்ட
**खोंडर** - पु॰ மரப் பொந்து ; குழி
**खोंता** - पु॰ பறவைக்கூடு
**खोंसना** - स॰ செருக
**खोई** - स्त्री॰ கரும்புச் சக்கை

**खोंडा** - वि० முன்பல் உடைந்த; துண்டிக்கப் பட்ட அங்கங்கள் உடைய

**खोऊ** - वि० வீண் செலவு செய்கிற

**खोखला** - वि० பொந்தான

**खोगीर** - पु० **कुगीर** சேணம்

**खोज** - स्त्री० தேடுதல்; ஆராய்ச்சி; அடையாளம்

**खोजना** - स० தேட; ஆராய

**खोजा** - पु० அந்தப்புரத்து அலியான வேலைக்காரன்; மதிப்பிற்குறிய தலைவன்

**खोट** - स्त्री० குற்றம்; தோஷம்

**खोटा** - वि० தோஷமுள்ள

**खोड़रा** - பழைய மரத்திலிருக்கும் பெரிய பொந்து

**खोदना** - स० தோண்ட; செதுக்க

**खोदबिनोद** - स्त्री० **छानबीन** ஆராய்ந்து பரீட்சித்தல்

**खोदाई** - स्त्री० दे० **खुदाई**

**खोना** - स० இழக்க

**ख़ोन्चा** - पु० தெருத் தெரு வாய் மிட்டாய் விற்பவன் உபயோகிக்கும் பெரிய தட்டு; தட்டுக்கூடை

**खोपड़ा** - पु०
**खोपड़ी** - स्त्री० } மண்டை ஓடு; தலை

—**खा जाना** - வீண் அரட்டை அடிக்க

**खोया** - पु० திரட்டுப்பால்

**ख़ोर** - वि० சாப்பிடுகிற [உ-ம் **नशाख़ोर** - போதைப் பொருள் உட்கொள்ளுபவன்]; स्त्री० குளித்தல்

**खोरा** - पु० கிண்ணம்

**ख़ोराक** - पु० दे० **खुराक**

**खोल** - पु० **गिलाफ़** உறை; மூடி

**खोलना** - स० திறக்க

**ख़ोली** - स्त्री० மூடி

**खोह** - स्त्री० குகை

**ख़ौफ़** - पु० பயம்; —**ज़दा** - பயந்த; —**नाक** - वि० பயங்கரமான

**खौर** - पु० திலகம்; பொட்டு

**खौलना** - अ० கொதிக்க; உணர்ச்சி பொங்க

**खौलाना** - स० கொதிக்க வைக்க; உணர்ச்சியூட்ட

**ख्यात** - वि० பிரசித்திபெற்ற

**ख्याति** - स्त्री० பிரசித்தி; புகழ்

**ख़्याल** - पु० எண்ணம்; நினைவு; தியானம்; கொள்கை

**ख़्याली** - वि० கற்பனை செய்யப் பட்ட; தீர்மானித்த; எண்ணமுள்ள; —**पुलाव पकाना** - ஆகாசக் கோட்டைக் கட்ட

**ख़्वाजा** - **पु०** எஜமானன்; மேன்மையுள்ளவன்; முஸ்லிம் துறவி; அந்தப்புரத்து அலியான வேலைக்காரன்.

**ख़्वाब** - **पु०** கனவு

**ख़्वाह** - **अव्य०** அல்லது; **वि०** விரும்புகிற; **—म-ख़्वाह** - இஷ்டப்பட்டாலும் சரி, படாவிட்டாலும் சரி

**ख़्वाहाँ** - **वि०** விரும்புகிற

**ख़्वाहिश** - **स्त्री० इच्छा** விருப்பம் **—मंद** - **वि०** விரும்புகிற

## ग

**गंग** / **गंगा** - **स्त्री०** கங்கை நதி

**गंगाल** - **पु०** கங்காளம்

**गंगालाभ** - **पु०** மரணம்

**गंज** - **पु०** வழுக்கைத் தலை; கடைத்தெரு; குவியல்; பொக்கிஷம்

**गंजन** - **पु०** அவமதிப்பு; கஷ்டம்

**गंजा** - **वि०** வழுக்கைத் தலையுள்ள; **स्त्री०** குடிசை; ரத்தினச் சுரங்கம்

**गंजी** - **स्त्री०** பனியன்; குவியல்

**गंजीफ़ा** - **पु०** சதுரங்க ஆட்டம்

**गंजेड़ी** - **वि०** கஞ்சா குடிக்கிற

**गंठकटा** - முடிச்சுமாறி; திருடன்

**गंठजोड़ा** / **गंठबंधन** - **पु०** விவாகத்தில் மணமக்களின் வஸ்திரங்களைச் சேர்த்து முடிபோடல்

**गंड** - **पु०** கன்னம்; முடிச்சு; **—स्थल** - **कनपटी** பொட்டு

**गंडा** - **पु०** முடிச்சு; தாயத்து; **—तावीज़** - மந்திரம்; தாயத்து

**गँड़ासा** - **पु०** வைக்கோல், தட்டை முதலியவற்றை வெட்டும் ஆயுதம்

**गंडेरी** - **स्त्री०** சிறு கரும்புத் துண்டு

**गंदगी** - **स्त्री०** அழுக்கு; அசுத்தம்

**गंदला** / **गंदा** - **वि०** அழுக்கான; அசுத்தமான

**गंदुम** - **पु०** கோதுமை

**गंदुमी** - **वि०** கோதுமை நிறமான

**गंध** - **स्त्री०** வாசனை; லவலேசம்; சிறிதளவு

**गंधबिलाव** - **पु०** புனுகுப்பூனை

**गंधर्व** - **पु०** சங்கீதத்தில் தேர்ந்த ஒரு தேவஜாதி; பாடகன்; **—विद्या** - சங்கீதக்கலை

**गंधी** - **पु०** வாசனைத் திரவிய வியாபாரி; **वि०** வாசனையுள்ள

**गंभीर** - **वि०** அழகான; அடர்த்தியான; ரகசியமான; கம்பீரமான

**गँव** - **स्त्री०** தருணம்; யுக்தி

**गँवई** - **स्त्री० दे० गाँव**

**गँवरमसला** - **पु०** நாட்டுப்புறப் பேச்சு

**गँवाना** - **स०** இழக்க

**गँवार** - **पु०** நாட்டுப்புறத்தான்; முட்டாள்

**गँवारी** - **स्त्री०** கிராமியத் தன்மை; முட்டாள்த் தனம்; **वि०** நாட்டுப் புறத்து

**गँवारू** - **वि०** நாட்டுப்புறத்து

**गई करना** - **अ०** விடுவிக்க; மன்னிக்க

**गई-बहोर** - **वि०** இழந்த பொருளை மீட்டுத் தருகிற

**गऊ** - **स्त्री०** பசு

**गगन** - **पु०** ஆகாயம்; **—चर** - வானத்தில் சஞ்சரிக்கிற; பறவை

**गगरा** - **पु०** குடம்

**गच** - **पु०** காங்கிரீட்; காங்கிரீட் தரை; **—कारी** - காங்கிரீட்வேலை

**गछरंगा** - **पु० कौडियाला** மீன் கொத்திப் பறவை

**गज** - **पु०** யானை

**गज़** - **पु०** கஜம் (இரண்டு முழம்)

**गज़क** - **स्त्री०** ஒருவித எள்ளுருண்டை; சிற்றுண்டி

**गज़ब** - **स्त्री०** ஆபத்து; அநியாயம்; கோபம்; **—टूटना** - ஆபத்து நேர; **—नाक** - மிகக்கோபமுள்ள

**गजरा** - **पु०** அடர்த்தியாகக் கட்டிய பூமாலே; பட்டுத் துணி

**ग़ज़ल** - **स्त्री०** பார்ஸி உருது ஜாவளி

**गजी** - **स्त्री०** முரட்டுத் துணி; பெண் யானை

**गटकना** - **स०** விழுங்க; பறிக்க; சாப்பிட

**गटपट** - **स्त्री०** நெருங்கிய தொடர்பு; சேர்க்கை

**गट्टा** - **पु०** மணிக்கட்டு; ஒருவித மிட்டாய்; முடிச்சு

**गट्ठर** - **पु०** பெரிய மூட்டை

**गट्ठा** - **पु०** விறகுக்கட்டு; புல்கட்டு

**गठन** - **स्त्री०** கட்டுக்கோப்பு; கட்டமைப்பு

**गठना** - **अ०** சௌகர்யமாய் அமைய; அதிக சிநேகம் உண்டாக; ஒன்று சேர

**गठरी** - स्त्री० மூட்டை ;—**मारना** - மூட்டை அடிக்க; திருட ; ஏமாற்றிப்பணம் பறிக்க

**गठित** - वि० சேர்ந்த ; அமைந்த

**गठिया** - स्त्री० சாக்குப் பை ; மூட்டை ; வாதரோகம்

**गठीला** - वि० பல முடிச்சுக்க ளடங்கிய; கணுக்க ளுள்ள ; பலமான ; கட்டுக்கோப்பான

**गड़** - पु० மறைவு ; அகழி ; மேடு ; இடைவெளி

**गड़गड़ा** - पु० ஒருவித ஹுக்கா; ஒருவகை வண்டி

**गड़गड़ाना** - स० கர்ச்சிக்க ; உரக்க சப்திக்க

**गड़गड़ी** - स्त्री० **डुग्गी** உடுக்கை

**गड़ना** - अ० நுழைய ; குத்த ; புதைக்கப்பட ; **गड़ जाना** - வெட்கப்பட

**गड़पना** - स० விழுங்க ; ஜீரணமாக்க

**गड़प्पा** - पु० பள்ளம் ; ஏமாறும் இடம்

**गड़बड़** - पु० ஏற்றத்தாழ்வு ; ஒழுங்கின்மை ; குழப்பம்; சச்சரவு

**गड़बड़ाना** - अ० கலந்து போக; குளறுபடியாக ; **स०** குழப்பம் உண்டாக்க

**गड़बड़िया** - वि० குழப்பம் உண்டாக்குகிற

**गड़बड़ी** - स्त्री०दे० **गड़बड़**

**गड़रिया** - पु० ஆட்டிடையன்

**गड़हा** - पु० दे० **गड्ढा**

**गड़ा** - पु० குவியல்

**गड़ाना** - स० குத்த ; புதைக்க

**गड़ारी** - स्त्री० பாத்தி ; வட்டமான கோடு

**गडुई** - स्त्री० கிண்டி

**गडुवा** - पु० பெரிய கிண்டி

**गड्ड** - पु० அடுக்கு ; குவியல் ; பள்ளம் ; கட்டு

**गड्ढा** - पु० பள்ளம்

**गढंत** - वि० கற்பனை செய்த ; இட்டுக்கூறிய

**गढ़** - पु० கோட்டை;—**जीतना** - மிகக்கடினமான காரியத்தைச் செய்ய

**गढ़न** - स्त्री० அமைப்பு ; உருவம் ; சேர்க்கை

**गढ़ना** - स० உண்டாக்க ; உருவம் கொடுக்க ; பொய்க் கதைகள் கட்ட

**गढ़वाल** - पु० கோட்டைகொத்தளங்கள் உள்ளவர்

**गढ़ाई** - स्त्री० அமைத்தல் ; அமைப்புக் கூலி

**गढ़ाना** - स० அமைக்கச் செய்ய ; **अ०** கஷ்டமாகத் தோன்ற ; அருவருக்க

**गढ़िया - पु०** அமைப்பவன்
**गढ़ी - स्त्री०** சிறு கோட்டை
**गण - पु०** கூட்டம்; **—तंत्र, राज्य** - குடியாட்சி; **—पूर्ति**- கூட்டம் கூட்ட வேண்டிய அங்கத்தினர்களின் தொகை; 'கோரம்'
**गणक - पु०** ஜோசியன்; கணக்கன்
**गणन - पु०** எண்ணுதல்; எண்ணிக்கை
**गणना - स्त्री०** எண்ணிக்கை
**गणनीय - वि०** எண்ணத் தகுந்த; மதிக்கத்தக்க
**गणिका - स्त्री०** வேசி
**गणित - पु०** கணக்கு
**गण्य - वि०** எண்ணக்கூடிய; மதிக்கத்தக்க; **—मान्य** - மரியாதை செய்யத்தக்க; கனவானுன
**गत - वि०** கழிந்த; இல்லாத; **स्त्री०** நிலைமை; போக்கு; கதி; **पु०** வாத்தியங்களின் 'கதி' (கத்து)
**गतका - पु० दे० गदका**
**गतांक - वि०** பிரயோசனமில்லாத; **पु०** பத்திரிகையின் முந்தின இதழ்
**गतानुगतिक - वि०** பழைய வழி முறைகளை அப்படியே பின்பற்றுகிற
**गति - स्त्री०** நடை; நிலைமை; கதி; எட்டுதல்; **—विधि - स्त्री०** நடைமுறை; நடவடிக்கை
**गत्ता - पु० दफ़्ती** அட்டை
**गत्तालख़ाता - पु०** வசூலிக்க முடியாத கடன் பாபத்து
**गद - पु०** வியாதி; விஷம்; தொனி
**गदका - पु०** சிலம்பத்தடி; சிலம்ப விளையாட்டு
**ग़दकारा - वि०** மிருதுவான
**ग़दर - पु०** கலகம்; கிளர்ச்சி; போராட்டம்
**गदराना - अ०** பழுக்க ஆரம்பிக்க; யௌவனத்தால் அங்கங்கள் வாளிப்படைய; கண்புளிச்சை வெளிவர
**गदहपन - पु०** முட்டாள் தனம்
**गदहा - पु०** வைத்தியன்; கழுதை; முட்டாள்
**गदा - पु०** கதாயுதம்; பிச்சைக்காரன்
**गदाई - वि०** அற்பமான; உபயோகமற்ற; **स्त्री०** பிச்சையெடுத்தல்
**गद्गद - वि०** அதிக அன்பு அல்லது சந்தோஷத்தால் மெய்மறந்த; உணர்ச்சி வசப்பட்ட

**गद्दर** - **वि०** பாதி வெந்த

**गद्दा** - **पु०** **गदेला** மெத்தை

**ग़द्दार** - **वि०** பெரிய துரோகியான ; பெரிய கலகக் காரனை

**गद्दी** - **स्त्री०** சிறு மெத்தை ; சிங்காசனம் ; **नशीन** - பட்டத்திற்கு வந்த ; —**नशीनी**-பட்டாபிஷேகம்

**गद्य** - **पु०** வசன நடை

**गधा** - **पु०** கழுதை ; **गधे पर चढ़ना** - மிகவும் அவமானப் பட ; **गधे का हल चलना** - முற்றிலும் அழிந்து போக

**गनगौर** - **स्त्री०** சித்திரை மாதத்து சுக்கிலபக்ஷ திருதியை

**ग़नी** - **पु०** பெரிய பணக்காரன் ; திருப்தியுள்ளவன்

**ग़नीम** - **पु०** விரோதி ; கொள்ளைக்காரன் ; **ग़नीमी युद्ध** - கொரில்லாப் போர் முறை

**ग़नीमत** - **स्त्री०** கொள்ளையில் கிடைத்த பொருள் ; சந்தோஷப்பட வேண்டிய விஷயம் ; நன்மை

**गन्ना** - **पु०** கரும்பு

**गप** / **गपशप** - **स्त्री०** வதந்தி ; வம்பளப்பு ; 'சரடு' —**उड़ाना**- பொய் பேச

**गपकना** - **स०** சட்டென்று விழுங்க

**गपड़चौथ** - **पु०** அர்த்தமற்ற பேச்சு ; **वि०** அர்த்தமற்ற

**गपोड़ा** - **पु०** பொய்ப் பேச்சு

**गप्प** - **स्त्री०** **दे०** **गप**

**गप्पा** - **पु०** மோசம் ; பொய்

**गप्पी** - **वि०** 'சரடு' விடுகிற

**गप्फा** - **पु०** பெரிய கவளம் ; நிகர லாபம்

**गफ़** - **वि०** அடர்த்தியான

**ग़फ़लत** - **स्त्री०** கவனக்குறைவு ; பிசகு ; அஜாக்கிரதை

**ग़फ़ूर** - **वि०** மன்னிக்கிற ; இரக்கமுள்ள

**ग़फ़्फ़ार** - **वि०** மிக்க தயவுள்ள

**ग़बन** - **पु०** ஒப்படைத்த பணத்தை அல்லது பொருளைக் கையாடல்

**गबरू** - **वि०** யௌவனமான ; கபடமற்ற; **पु०** சேணியன்

**गब्बर** - **वि०** கர்வமுள்ள ; வீண் பிடிவாதமுள்ள

**गम** - **स्त्री०** நுழைதல் ; அடைதல் ; எட்டுதல் ; செல்கை

**ग़म** - **पु०** துக்கம் ; கவலை ; —**ख़ोर** - பொறுமையுள்ள ; —**ग़लत** - துக்கத்தைப் போக்கும் காரியம் ; விளையாட்டு ; தமாஷ் ; —**ग़ीन** -

துயரமுள்ள ; உற்சாக மற்ற ;—ज़दा, रसीदा - துக்க முள்ள ; —नाक - வருந்து கிற ; துக்கமான

गमक - स्त्री० நல்ல வாசனை ; எதிரொலி ; वि० அடை விக்கிற ; அறிவிக்கிற ; पु० மிருதங்கத்தின் 'கமகம்'

गमकना - अ० வாசனை கமழ

गमछा - पु० துண்டு ; மேல் துணி

गमन - पु० போதல் ; வழி

गमला - पु० பூந்தொட்டி

ग़मी - स्त्री० துக்க காலம் ; மரணத்தால் ஏற்பட்ட துக்கம் ; மரணம்

गम्मत - स्त्री० விநோதம்

गम्य - पु० அறியத் தகுந்த ; அடையத்தக்க ; சாத்திய மான

गयंद - पु० பெரிய யானை

गय - पु० யானை ; வீடு ; ஆகாயம் ; செல்வம்

गया-गुज़रा, गया-बीता - वि० கெட்ட நிலை மையடைந்த ; அற்பமான ; மட்டமான

ग़र - पु० நோய் ; நஞ்சு

गर - अव्य० दे० अगर

गरक़ - वि० நஷ்டமான ; மூழ்கிப்போன

गरचे - अव्य० (अगरचे) यद्यपि இருந்தபோதிலும்

गरज - स्त्री० கர்ஜனை

ग़रज़ - स्त्री० கருத்து ; தேவை ; விருப்பம்; क्रि० கடைசியில்; கருத்து என்னவென்றால்; —मंद - சுயநலமுள்ள

गरजना - अ० கர்ஜிக்க

ग़रज़ी, ग़रज़ू - वि० அவசியமான ; விரும்பிய

गरदन - स्त्री० கழுத்து

गरदनियाँ - स्त्री० 'கல்தா' கொடுத்தல் ; கழுத்தைப் பிடித்து வெளியேற்று தல்

गरदा - पु० தூசி

गरदान - वि० அலைந்து திரிந்து கடைசியில் தன் இடம் வருகின்ற; சுற்றித்திரிகிற

गरब - पु० கர்வம் ; யானையின் மதம்

ग़रब - पु० மேற்கு

गरम - वि० சூடான ; தீவிர மான ; ஊக்கம் நிறைந்த ; गरमागरम - சுடச்சுட ; गरमागरमी - வாதவிவாதம் ; ஆவேச நிலை ; கொதிப் பேற்படுதல்

गरमाना - अ० சூடாக ; கோபிக்க ; स० சூடாக்க

**गरमी** - स्त्री० சூடு ; தீவிரம் ; கோபம் ; கோடை

**गरल** - पु० விஷம்

**गराँ** - वि० **भारी** கனமான ; அதிக விலையுள்ள ; பிரிய மில்லாத

**गराड़ी** - स्त्री० ராட்டினம் ; கிணற்று ராட்டை

**गरानी** - स्त्री० கிராக்கி ; வருத் தம் ; கனம் ; அஜீர்ணம்

**गरिमा** - स्त्री० பெருந்தன்மை ; மகிமை ; கர்வம் ; அஷ்ட சித்திகளில் ஒன்று

**गरियार** - वि० சண்டித்தன முள்ள ; சோம்பலான

**गरिष्ठ** - वि० மிகக் கனமான ; மிகச் சிறந்த ; சீக்கிரம் ஜீர்ணமாகாத

**गरी** - स्त्री० கொப்பரை

**गरीक़** - वि० மூழ்கிய ; ஆழ்ந்த

**ग़रीब** - वि० எளிய ; ஏழை யான ; —**नवाज़, परवर** - ஏழைகளை ஆதரிக்கிற (மரியாதைச் சொல்)

**ग़रीबी** - स्त्री० ஏழ்மை ; தரித் திரம் ; எளிமை

**गरु** / **गरुआ** } वि० கனமான ; கௌர வமுள்ள

**गरुआई** - स्त्री० பெருந்தன்மை

**गरू** - वि० கனமான

**ग़रूर** - पु० கர்வம்

**ग़रूरा** / **ग़रूरी** } वि० கர்வமுள்ள ; செருக்குள்ள

**गरेबान** - पु० சட்டைக் கழுத்து

**गरेरना** - स० சூழ ; தடுக்க

**गरैयाँ** - पु० கழுத்துத்தும்பு

**गरोह** - पु० கூட்டம் ; குழு

**ग़र्क़** - वि० மூழ்கிய ; சிந்தனையி லாழ்ந்த

**ग़र्ज़** - स्त्री० दे० **ग़रज़**

**गर्जन** - पु० கர்ஜனை

**गर्त** - पु० குழி ; புற்று ; பொந்து ; சமாதி

**गर्द** - स्त्री० தூசி ;—**ख़ोर, ख़ोरा** - காலைத் துடைக்கும் பாய்

**गर्दभ** - पु० **गधा** கழுதை

**गर्दिश** - स्त्री० சுற்றுதல் ; விபத்து ; மாருட்டம்

**गर्भ-पात** - पु० கருச்சிதைவு

**गर्भित** - वि० நிறைந்த ; உள் ளடங்கிய

**गर्रा** - वि० அரக்கு நிறமுள்ள

**गर्व** - पु० கர்வம் ; அகங்காரம்

**गर्वी** / **गर्वीला** } वि० கர்வங்கொண்ட

**गर्हण** - पु० நிந்தை ; புகார்

**गर्हणीय** - वि० நிந்திக்கத்தக்க

**गर्हित** - वि० நிந்திக்கப்பட்ட

**गर्ह्य** - वि० நிந்திக்கத்தக்க

**गल** - पु० **गला** கழுத்து

**गलका** - पु० नखोरी நகச்சுற்று

**ग़लत** - वि० பிசகான ; பொய்யான ; —**नामा** - பிழைத் திருத்தம் ; —**फ़हमी** - பிரமை ; தப்பெண்ணம்

**ग़लती** - स्त्री० பிசகு ; தப்பு

**गलना** - अ० உருக ; கரைய ; வீணாக

**गलफाँसी** - स्त्री० கழுத்துச் சுருக்கு ; பந்தனம் ; கட்டு

**गलफूला** - वि० கன்னங்கள் உப்பிய

**गलबाँही** - स्त्री० கழுத்தில் கை போட்டுக்கொள்ளுதல்

**गलमुँदरी** - स्त्री० வம்பளப்பு

**गलमुच्छा** - पु० கிருதா

**गला** - पु० கழுத்து ; குரல் ; **गलेबाज़** - நல்ல குரலுள்ள ; —**घोटना** - மூச்சுவிட முடியாமல்படி கழுத்தை இறுக்க ; —**फाड़ना** - தொண்டை கிழியும்படிக் கத்த ; —**बैठना** - தொண்டை கட்ட ; **गले पड़ना, गले का हार होना** - விடாமல் பின்தொடர

**गलाना** - स० உருக்க ; கரைக்க; நஷ்டமாக்க

**गलित** - वि० கரைந்த ; விழுந்து போன

**गली** - स्त्री० சந்து ; —**गली फिरना** - தெருத் தெருவாய் அலைய

**ग़लीचा** - पु० ஜமக்காளம் ; கம்பளம்

**ग़लीज़** - वि० **गंदा** அழுக்கான ; पु० குப்பை கூளம்;—**ख़ाना**- குப்பைத்தொட்டி ; குப்பைக்குழி

**गल्प** - पु० स्त्री० தற்புகழ்ச்சி ; சிறுகதை ; வம்பளப்பு

**गल्ला** - पु० இரைச்சல் ; கூட்டம் ; குழப்பம்

**ग़ल्ला** - पु० தானியம் ; மாம்பழக் குவியல் ; அன்றாட வியாபாரத் தொகை ; கால்நடை மந்தை

**गवँ** - स्त्री० பிரயோஜனம் ; —**से** - சமயம் பார்த்து

**गवन** - पु० புறப்பாடு ; பிரயாணம்

**गवाक्ष** - पु० சிறு ஜன்னல்

**गवारा** - वि० பிரியமான

**गवाह** - पु० சாட்சி

**गवाही** - स्त्री० சாட்சியம்

**गवेषणा** - स्त्री० **खोज** தேடுதல் ; ஆராய்தல்

**गवेषी** - वि० தேடுகிற ; ஆராய்கிற ; ஆர்வமுள்ள

**गवैया** - पु० பாடகன்

**गव्य** - वि॰ பசுவிலிருந்து உண்டான (பஞ்ச கவ்யம்)
**ग़श** - पु॰ மூர்ச்சை
**ग़श्त** - पु॰ உலாவுதல்
**ग़श्ती** - वि॰ உலாவுகிற; —**चिट्ठी** - சுற்றறிக்கை
**गसीला** - वि॰ சேர்க்கப்பட்ட; அடர்த்தியான
**गस्सा** - पु॰ கவளம்
**गह** - स्त्री॰ பிடிப்பு; கைப்பிடி
**गहगहा** - वि॰ சந்தோஷமான
**गहगहाना** - अ॰ சந்தோஷத்தால் பூரிக்க
**गहन** - वि॰ ஆழமான; அடர்த்தியான; கடக்கமுடியாத
**गहना** - पु॰ நகை; **स॰** பிடிக்க
**गहनि** - स्त्री॰ பிடிவாதம்; பிடி
**गहबरना** - अ॰ பயப்பட
**गहर** - स्त्री॰ நேரம்; **वि॰** ஆழமான
**गहरना** - स॰ நேரமாக்க; சண்டை பிடிக்க; கோபங் கொள்ள
**गहरा** - वि॰ ஆழமான; கம்பீரமான; —**हाथ मारना** - விலையுயர்ந்த பொருளையோ அல்லது பெருந்தொகையையோ கைப்பற்ற
**गहराई** - स्त्री॰ ஆழம்
**गहवारा** - पु॰ **पालना** தொட்டில்; வளர்க்குமிடம்
**गहीला** - वि॰ கர்வமுள்ள
**गहेला** - वि॰ பிடிவாதமுள்ள; கர்வியான; முட்டாளான
**गहैया** - वि॰ பிடித்துக் கொள்கிற; ஒப்புக்கொள்கிற
**गह्वर** - वि॰ ஆழமான; மறைவான; **पु॰** குகை; இருண்ட மறைவிடம்; பள்ளம்; வளை
**गाँज** - पु॰ குவியல்; குப்பை
**गाँजना** - स॰ குவியலாக்க
**गाँजा** - पु॰ கஞ்சா
**गाँठ** - स्त्री॰ கணு; முடிச்சு; மூட்டை; —**गोभी** - நூல்க்கோல் என்னும் கிழங்கு; —**बाँधना, लगाना** - ஞாபகத்தில் வைத்துக்கொள்ள; —**का** - சொந்தமான; —**का पूरा** - ஐசுவரியமுள்ள; (**मन में**)—**पड़ना** - மனஸ்தாபம் உண்டாக
**गाँठना** - स॰ முடிபோட; சேர்க்க
**गांडर** - स्त्री॰ ஒருவிதப் புல்
**गांडा** - पु॰ கரும்புத் துண்டு
**गांभीय** - पु॰ கம்பீரம்; ஆழம்
**गाँव** - पु॰ கிராமம்
**गाँस** - स्त्री॰ விரோதம்; தடை; முடிச்சு; சுருக்கு; மேற்பார்வை; அதிகாரம்

**गाँसना** - स० குத்த ; கோக்க
**गाँसी** - स्त्री० அம்பு அல்லது ஈட்டியின் முனை
**गागर** / **गागरी** } स्त्री० दे० गगरा
**गाछ** - पु० மரம் ; செடி
**गाज** - स्त्री० கர்ஜனை ; மின்னல்; पु० நுரை
**गाजना** - अ० கர்ஜிக்க ; சந்தோஷப்பட
**गाजर** - स्त्री० சீமை முள்ளங்கி; —**मूली समझना** - துச்சமாக நினைக்க
**गाजा-बाजा** - पु० பல ரக வாத்தியங்கள்
**गाज़ी** - पु० மதத்திற்காக யுத்தம் செய்யும் (இஸ்லாமிய) வீரன்
**गाड़** - स्त्री० பள்ளம்
**गाड़ना** - स० புதைக்க
**गाड़र** - स्त्री० செம்மறியாடு
**गाड़ी** - स्त्री० வண்டி ; —**वान** - पु० வண்டி ஓட்டுபவன்
**गाढ़** - वि० அதிகமான ; அடர்த்தியான ; கஷ்டமான ; ஆழமான ; पु० சங்கடம் ; தறி ; —**पड़ना** - கேடு உண்டாக
**गाढ़ा** - वि० அடர்த்தியான ; கெட்டியான ; पु० முரட்டுத் துணி ; மதயானை
**गाढ़े की कमाई** - கஷ்டப்பட்டு சம்பாதித்த பணம்
**गात** / **गात्र** } पु० சரீரம் ; உடல் ; அங்கம்
**गाथा** - स्त्री० துதி; புகழ்க்கதை; பாடல் ; கதை
**गाद** - स्त्री० அடிக் கசண்டு
**गादा** - पु० பாதி பழுத்த தானியம்
**गाध** - वि० ஆழமில்லாத
**गान** - पु० பாட்டு
**गाना** - स० பாட ; पु० பாட்டு
**ग़ाफ़िल** - वि० **बेख़बर** கவனமில்லாத ; தன்னை மறந்த
**गाभा** - पु० **कोंपल** துளிர்
**गाभिन** } वि० கர்ப்பமான ;
**गाभिनी** } स्त्री० கர்ப்பவதி
**गाम** - पु० **गाँव** கிராமம்
**गामी** - वि० போகிற
**गाय** - स्त्री० பசு
**गायक** - पु० பாடகன்
**गायन** - पु० பாட்டு; பாடுதல்
**ग़ायब** - बि० மறைந்த
**ग़ायबाना** - क्रि० மறைவில் ; ஆள் எதிரே இல்லாத போது
**गार** - स्त्री० வசவு ; **प्रत्य०** செய்பவன் (**उदा० गुनहगार**)
**ग़ार** - पु० ஆழமான குழி ; குகை

**ग़ारत** - वि० நஷ்டமான; स्त्री० கொள்ளை

**गारद** - स्त्री० காவற்சேவகன் ; காவலாளி

**गारना** - स० பிழிய

**गारा** - पु० காரை

**गाल** - पु० கன்னம் ; —**बजाना, मारना** - தற்புகழ்ச்சி பேச

**गाला** - पु० பஞ்சுப்பட்டை

**ग़ालिब** - वि० **विजयी** ஜயிக்கிற

**ग़ालिबन** - क्रि० அநேகமாய் ; நிகழக்கூடியதாய்

**गाली** - स्त्री० வசவு ; தூஷணை ; —**गलौज, गुफ़्ता** - பரஸ்பர நிந்தனை

**गालू** - वि० அதிகமாகத் தற்புகழ்ச்சி செய்து கொள்ளுகிற

**गाव** - पु० பசு ; —**कुशी** - பசுஹத்தி ; —**दुम** - அடி பெருத்து நுனி சிறுத்த

**गावतकिया** - पु० பெரிய தலையணை

**गावदी** - वि० முட்டாளான

**गाह** - पु० வாடிக்கைக்காரன்; பிடிப்பு ; ஆழம் ; முதலை ; स्त्री० இடம் ; சமயம் ; தடவை ; —**ब गाह** - எப்போதாவது ; அந்த அந்த சமயத்தில் ; **गाहे-गाहे, गाहे-ब गाहे, गाहे-माहे** - எப்பொழுதாவது

**गाहक** - पु० வாங்குபவன் ; மரியாதை செய்பவன்

**गाहकी** - स्त्री० **बिक्री** விற்பனை

**गाहन** - पु० **स्नान** குளியல்

**गाहना** - अ० மூழ்கி ஆழம் பார்க்க ; கிரகித்துக் கொள்ள ; கடக்க

**गाहा** - स्त्री० கதை

**गाही** - स्त्री० ஒரே வகைப் பொருள்கள் ஐந்து கொண்டது (ஒரு கூறு)

**गिंजना** - अ० கலக்கப்பட

**गिचपिच, गिचिरपिचिर** - वि० தெளிவில்லாத

**ग़िज़ा** - स्त्री० போஜனம்; சாப்பிடக்கூடிய பொருள்

**गिटपिट** - स्त्री० அர்த்தமற்ற பேச்சு அல்லது சத்தம்

**गिट्टी** - स्त्री० ஜல்லிக்கல் ; **गिट्टियाँ जमाना** - ரோடுக்கு ஜல்லி போட

**गिड़गिड़ाना** - अ० கெஞ்ச

**गिद्ध** - पु० கழுகு

**गिनती** - स्त्री० எண்ணிக்கை ; —**के** - மிகக்குறைவான ; —**न होना** - எண்ணமுடியாத

**गिनना** - स० எண்ண ; கணக்கிட ; மதிப்பிட

**गिनाना - स०** எண்ணுவிக்க

**गिनी / गिन्नी - स्त्री०** 'கினி' என்னும் தங்க நாணயம்

**गिरगिट - पु०** ஓணான்; பச்சோந்தி

**गिरजा - पु०** மாதாகோவில்

**गिरदा - पु०** சுற்று; சுற்றளவு

**गिरना - अ०** விழ; சாய

**गिरफ़्त - स्त्री०** பிடிக்கப்படுதல்

**गिरफ़्तार - वि० क़ैद** கைது செய்யப்பட்ட

**गिरफ़्तारी - स्त्री०** கைதியாதல்

**गिरमिट - पु०** பெரிய தமூர்; ஒப்பந்தப் பத்திரம்

**गिरवी - स्त्री० रेहन** அடகு; பணயம்

**गिरह - स्त्री०** கணு; முடிச்சு; வீசம் கஜம்;—**कट** - ஜேபடித் திருடன்

**गिराँ - वि० दे० गराँ**

**गिरा - स्त्री०** வாக்குவன்மை; சரஸ்வதி; வாக்கு

**गिराना - स०** வீழ்த்த; தள்ள

**गिरानी - स्त्री० महँगी** கிராக்கி; அஜீர்ணம்

**गिरि - पु०** மலை

**गिरियाँ व जारी - पु० रोना-धोना** அழுதல்

**गिरों - वि०** அடகு வைத்த

**गिर्द - क्रि०** அக்கம் பக்கத்தில்

**गिर्दावर - पु०** அலைபவன்

**गिल - स्त्री०** காரை; சாந்து;—**कारी** - மணியாசு செய்தல்; காரைச் சாந்து பூசுதல்

**गिलट - पु०** வெள்ளி போன்ற ஒரு மலிவான தாது

**गिलटी - स्त्री०** கட்டி

**गिलना - स०** விழுங்க; மனத்தில் அடக்கிக்கொள்ள

**गिलबिलना - अ०** முணுமுணுக்க; தெளிவில்லாமல் பேச

**गिलम - स्त्री०** மெத்தை; **वि०** மென்மையான

**गिलहरी - स्त्री०** அணில்

**गिला - पु०** புகார்; இகழ்ச்சி

**गिलाफ़ - पु०** உறை; கூடு; ரஜாய்

**गिलाबा - पु०** காரை; சாந்து

**गिलास - पु०** டம்ளர்

**गिलौरी - स्त्री०** வெற்றிலைபீடா

**गिल्टी - स्त्री० दे० गिलटी**

**गींजना - स०** கசக்கிப்பாழாக்க

**गीत - पु० / गीति - स्त्री०** பாட்டு

**गीदड़ - पु०** நரி; பயங்கொள்ளி;—**भभकी** - போலிப் பயமுறுத்தல்

**गीदी - वि० डरपोक** பயங்கொள்ளியான

**गीध** - **पु० दे० गिद्ध**

**गीबत** - **स्त्री०** ஆஜரில்லாமை; கோள்ச் சொல்லுதல்; மறைமுகமாகக் கெடுதி செய்தல்

**गीर** - **स्त्री० वाणी** வாக்கு

**गीला** - **वि०** நனைந்த; ஈரமான

**गुँचा** - **पु० कली** மொட்டு

**गुंज** / **गुंजन** } **स्त्री०** ரீங்காரம்

**गुंजना** / **गुंजाना** } **अ०** ரீங்காரம் செய்ய; வண்டு முரல

**गुंजा** - **स्त्री०** குந்துமணி; அதன் கொடி

**गुंजाइश** - **स्त्री०** உள்ளடங்கி யிருக்கும் இடம்; வாய்ப்பு; சந்தர்ப்பம்

**गुंजान** - **वि०** அடர்த்தியான

**गुंजार** - **पु०** ரீங்காரம்

**गुंड़ा** - **वि०** போக்கிரி; **—पन** - போக்கிரித்தனம்

**गुंथना** - **अ०** கோக்கப்பட; தொடுக்கப்பட

**गुंधना** - **अ०** கூழ் செய்ய; பிசைய; முடி அலங்கரிக்க

**गुंफ** - **पु०** சிக்கல்; கொத்து

**गुंफन** - **पु०** சிக்கலாதல்

**गुंबज़** / **गुंबद** } **पु०** கும்மட்டம் போன்ற சிகரம்

**गुंबा** - **पु० सूजन** புடைத்தல்; வீக்கம்

**गुंभी** - **स्त्री० अंकुर** முளை; தளிர்

**गुइयाँ** - **पु०** தோழன்; **स्त्री०** தோழி

**गुग्गुल** - **पु०** குங்கிலியம்

**गुच्ची** - **स्त्री०** கோலி அல்லது கிட்டுப்புள் ஆட்டத்தின் குழி

**गुच्छ** / **गुच्छक** / **गुच्छा** } **पु०** கொத்து

**गुच्छेदार** - **वि०** கொத்தாயிருக்கிற

**गुज़र** - **पु०** நிர்வாகம்; உற்பத்தியாகும் இடம்; நுழைவு; **—बसर** - வாழ்க்கை

**गुज़रना** - **अ०** கழிய; கடந்து செல்ல; வாழ்நாட்கள் கழிய; **गुज़र जाना** - இறக்க

**गुज़रान** - **पु० दे० गुज़र**

**गुजरिया** - **स्त्री०** இடைச்சி; கோபிகைப்பெண்

**गुज़श्ता** - **वि०** கழிந்த

**गुज़ारना** - **स०** கழிக்க

**गुज़ारा** - **पु०** வாழ்க்கை; ஜீவனம்சம்; மாசூல்பெறும் இடம்

**गुज़ारिश** - **स्त्री० प्रार्थना** வேண்டுகோள்

**गुजी** - स्त्री० மூக்குச்சளி; காதுக் குறும்பி

**गुझिया** - स्त्री० சோமாசி

**गुट** - पु० दे० गुट्ट

**गुटकना** - स० விழுங்க; पु० புறுவின் சத்தம்

**गुटका** - पु० சிறு புத்தகம்

**गुटिका** - स्त्री० மாத்திரை; குளிகை

**गुट्ट** - पु० சேர்க்கை; சிறு கூட்டம்; —**बंदी** - தனக்குச் சாதகமான ஆட்களைச் சேர்த்தல்; —**बाँधना** - கூட்டம் சேர்க்க

**गुठली** - स्त्री० பழக்கொட்டை

**गुड़** - पु० வெல்லம்

**गुड़गुड़ाना** - अ० 'குடு குடு' என்று சத்தம் செய்ய; ஹுக்கா குடிக்க

**गुड़गुड़ी** - स्त्री० ஒரு வித ஹுக்கா

**गुड़िया** - स्त्री० பொம்மை **गुड़ियों का खेल** - சுலபமான வேலை

**गुड़ी** - स्त्री० காற்றாடி; முடிச்சு

**गुड्ची** - स्त्री० சீந்தில் கொடி; அமிர்தவல்லி

**गुड्डा** - पु० பெரிய காற்றாடி; —**बाँधना** - நிந்திக்க

**गुड्डी** - स्त्री० दे० गुड़ी

**गुण** - पु० குணம்; இயல்பு; கயிறு; —**कारक, कारी** - நல்ல பயன் தருகிற; —**ग्राही, ग्राहक** - குணங்களை ஏற்பவன்; —**गाना** - புகழ

**गुणक** - पु० பெருக்கும் எண்

**गुणन** - पु० दे० गुणा

**गुणनफल** - पु० பெருக்கிய தொகை

**गुणना** - स० பெருக்க

**गुणज्ञ** - वि० பிறர் குணத்தை அறிந்து கொள்ளுகிற

**गुणांक** - पु० பெருக்கப்படும் எண்

**गुणा** - पु० जरब பெருக்கல்

**गुणाढ्य** - वि० குணவானான

**गुणी** - पु० நற்குணமுள்ள

**गुत्थम-गुत्था** - पु० சிக்கல்; போராட்டம்

**गुत्थी** - स्त्री० முடிச்சு; சிக்கல்

**गुथना** - अ० கோக்கப்பட

**गुदगुदा** - वि० சதை நிறைந்த; மிருதுவான

**गुदगुदाना** - अ० கிசுகிசு மூட்ட

**गुदगुदी** - अ० கிசுகிசு; பூரிப்பு

**गुदड़ी** - स्त्री० கந்தை விரிப்பு; —**बाज़ार** - பழையசாமான்கள் விற்குமிடம்; —**का लाल** - தாழ்ந்த இடத்தில் காணப்படும் உயர்ந்த பொருள்

**गुदना** - पु० குத்தப்பட

**गुदा** - पु० மலத்துவாரம்

**गुदाज़** - वि० பருமனான ; பலமான ; மிருதுவான

**गुदाम** - पु० களஞ்சியம் ; பண்டங்களை வைக்கும் இடம்

**गुदारना** - स० படிக்க ; கேட்க

**गुदारा** - पु० நதியைக் கடத்தல்

**गुद्दी** - पु० பழச்சதை ; உள்ளங்கைச் சதை

**गुनगुना** - वि० दे० **कुनकुना**

**गुनगुनाना** - अ० முணுமுணுக்க ; மூக்கால் பேச

**गुनना** - स० எண்ண

**गुनह** / **गुनाह** - पु० பாவம் ; குற்றம் ; **—गार** - **गुनाही** பாவம் செய்த ; குற்றம் செய்த

**गुना** - पु० மடங்கு

**गुनिया** - वि० நற்குணமுள்ள ; पु० மூலமட்டம் (தச்சுக் கருவி) **ख़तकश**

**गुनी** - वि० दे० **गुणी**

**गुन्ना** - पु० அனுஸ்வாரம்

**गुपचुप** - क्रि० ரகசியமாய்

**गुप्त** - वि० மறைந்த ; ரகசியமான ; पु० ஒரு வைசிய ஜாதி ; பாரதத்தின் ஒரு பழைய அரச வம்சம் ; **—चर**-உளவாளி; ஒற்றன்; **—वेश** - மாறுவேடம்

**गुप्ती** - स्त्री० வெளியே தெரியாமல் கத்தி செருகப்பெற்ற கைத்தடி

**गुफा** - स्त्री० குகை

**गुफ़्तगू** / **गुफ़्तार** - स्त्री० **बातचीत** உரையாடல்

**गुबरैला** - पु० **गुबरैता** சாணி வண்டு; மலப்புழு

**गुबार** - पु० தூசு ; மனத்தில் அடக்கிக் கொண்டிருக்கும் கோபம், வெறுப்பு முதலியன ; **—निकालना** - மனக் கொதிப்பை வெளியிட

**गुब्बारा** - पु० புகைக் கூண்டு

**गुम** - वि० ஒளிந்துக்கொண்ட; கெட்டுப்போன ; இழக்கப்பட்ட ; **—नाम** - பிரசித்திபெறாத ; **—राह** - வழி தவறிய ; கெட்டநடத்தையுள்ள ; **—होना, सुम होना** - நஷ்டமடைய

**गुमटा** - पु० நெற்றியிலோ, மண்டையிலோ அடிபடுவதால் ஏற்படும் புடைப்பு அல்லது வீக்கம்

**गुमटी** - स्त्री० கோபுரம் ; ரயில் கேட்;'லெவெல் கிராஸிங்'

**गुमटीहा** - पु० ரயில் கேட்டுக் காரன்

**गुमना** - अ० காணாமற் போக

**गुमर** - **पु॰** கர்வம் ; பெருமை
**गुमान** - **पु॰** கர்வம் ; சந்தேகம்
**गुमानी** - **वि॰** கர்வமுள்ள
**गुमाश्ता** - **पु॰** ஏஜண்டு ; குமாஸ்தா
**गुम्मा** - **वि॰ मितभाषी** அளவாய்ப் பேசுகிற
**गुर** - **पु॰** யுக்தி ; குறுக்குவழி ; ரகசியம்
**गुरगा** - **पु॰ गुप्तचर** ஒற்றன் ; உளவாளி; வேலைக்காரன்
**गुरदा** - **पु॰** மூத்திரக்காய் ; தைரியம் ; துணிச்சல்
**गुरबत** - **स्त्री॰** அந்நிய நாட்டு வாசம் ; பிரயாணம் ; தாழ்மை
**गुरबा** - **पु॰ (ग़रीब का बहु॰)** ஏழைகள்
**गुरिया** - **स्त्री॰** ஜபமாலை ; மாலையின் மணி
**गुरु** - **पु॰** ஆசாரியர் ; பிருகஸ்பதி ; உபாத்தியாயர் ; **वि॰** கனமான ; —**वार** - வியாழக் கிழமை ; —**घंटाल** - அதிசாமர்த்தியசாலி; போக்கிரி
**गुरुआई** - **स्त्री॰** ஆசிரியத் தொழில்
**गुरुजन** - **पु॰** பெரியோர் ; மூத்தோர்
**गुरुता** - **स्त्री॰**, **गुरुत्व** - **पु॰** } கனமான தன்மை ; மேன்மை
**गुरुद्वारा** - **पु॰** சீக்கியர்களின் கோவில்
**गुरुमुखी** - **स्त्री॰** பஞ்சாபி மொழி எழுத உபயோகிக்கும் எழுத்து
**गुरूब** - **पु॰** அஸ்தமனம்
**गुरूर** - **पु॰ दे॰ ग़रूर**
**गुरेज** - **स्त्री॰ बचना** தப்பித்தல்
**गुरेरना** - **स॰** உற்று நோக்க
**गुर्ज** - **पु॰ गदा** கதாயுதம்
**गुर्राना** - **अ॰** உறும
**गुल** - **पु॰** ரோஜா ; மலர் ; சுடர் ; கன்னக் குழிவு ; புகையிலைக் கத்தை ; —**अब्बास** - அந்திமந்தாரை ; —**कंद** - குல்கந்து ; —**कारी** - கொடி வேலை ; —**खिलना** - விசித்திர சம்பவம் நடக்க; —**करना** - விளக்கை அணைக்க ; —**बकावली** - நந்தியாவட்டைப் பூ
**गुलगुल** - **वि॰** மிருதுவான
**गुलगुला** - **पु॰** ஒரு மிட்டாய்
**गुलगूना** - **पु॰** முகப்பவுடர்
**गुलचना** - **स॰** பரிவுடன் கன்னத்தைத் தட்ட
**गुलचीं** - **पु॰** பூத்தொடுக்கிறவன்

**गुलछर्रा** - **पु०** சிற்றின்ப வாழ்க்கை ; ஆடம்பரம்

**गुलज़ार** - **पु०** தோட்டம் ; **वि०** பசுமையான

**गुलता** - **पु०** கவண்கல்

**गुलदस्ता** - **पु०** பூச்செண்டு

**गुलदाउदी** - **स्त्री०** பனிக்காலத்தில் கொத்தாகப் பூக்கும் ஒரு செடி

**गुलदान** - **पु०** பூக்களைச் செருகி வைக்கும் பாத்திரம்

**गुलनार** - **पु०** மாதுளம்பூ ; அதன் சிவப்பு நிறம்

**गुलफ़ाम** - **पु०** ரோஜாநிறமானவன் ; மிக அழகானவன்

**गुलबदन** - **पु०** ஒருவிதப் பட்டுத் துணி ; **वि०** மிக அழகான

**गुलरू** - **वि०** ரோஜாப்பூப் போன்ற முகமுள்ள ; மிக அழகான

**गुलशन** - **पु०** தோட்டம்

**गुलशब्बो** - **पु०** ரஜனீகாந்தப்பூ

**गुलाब** - **पु०** ரோஜாப்பூ ; **—पाश** - பன்னீர்ச்செம்பு

**गुलाबी** - **वि०** ரோஜா நிறமான

**गुलाम** - **पु०** அடிமை ; வேலைக்காரன்

**गुलामी** - **स्त्री०** அடிமைத்தனம்

**गुलाल** - **पु०** ஹோலிப் பண்டிகையில் ஒருவர் மீது ஒருவர் தூவிக்கொள்ளும் சிவப்புப் பொடி

**गुलिस्ताँ** - **पु०** பூந்தோட்டம்

**गुलू** - **पु०** கழுத்து ; குரல் ; **—बंद** - பனிக்காலத்தில் தலை, காது, கழுத்து இவற்றைச் சுற்றிக் கட்டும் துணி ; கழுத்தில் அணியும் நகை

**गुलेल** - **स्त्री०** பறவைகளை வேட்டையாட மண்ணுருண்டைகளை வீசும் உண்டிவில் ; **—ची बाज़** - வேடன்

**गुलेला** - **पु०** பறவை வேட்டையில் உபயோகிக்கும் மண்ணுருண்டை

**गुल्फ** - **पु०** கணுக்கால்

**गुल्म** - **पु०** வயிறு சம்பந்தமான வியாதி ; குன்மம்

**गुल्मिनी** - **स्त्री०** படர்ந்த கொடி

**गुल्ली** - **स्त्री०** பழத்தின் கொட்டை ; கிட்டிப்புள் விளையாட்டின் ' புள் ' ; **—डंडा** - கிட்டிப்புள் விளையாட்டு

**गुवाक** - **पु०** பாக்கு மரம்

**गुसाँई** - **पु०** **दे०** **गोसाईं**

**गुस्ताख़** - **वि०** பெரியோரிடம் மரியாதையற்ற ; அதிகப் பிரசங்கியான

**गुस्ताख़ी - स्त्री०** அதிகப் பிரசங்கித்தனம்

**गुस्ल - पु०** ஸ்நானம் ; **—ख़ाना -** குளிக்கும் அறை

**गुस्सा - पु०** கோபம் ; **—उतरना -** கோபம் தணிய; **—पी जाना-** கோபத்தை அடக்கிக் கொள்ள

**गुस्सैल - वि०** முன்கோபியான

**गुहना - स० दे० गूँथना**

**गुहर - पु०** மறைவு ; மூடி

**गुहराना - स०** கூப்பிட; உரக்க விளிக்க

**गुहा - स्त्री०** குகை

**गुहार - स्त्री०** அபயக் குரல்; கூக்குரல்; உதவிக்காகக் கூப்பிடுதல்

**गुहिल - पु०** பணம் ; சொத்து ; நிதியம்

**गुह्य - वि०** மறைந்த; மறைக்க வேண்டிய ; ரகசியமான

**गूँगा - वि०** ஊமையான

**गूँज - स्त्री०** எதிரொலி; வண்டுகளின் ரீங்காரம்

**गूँजना - अ०** எதிரொலிக்க ; வண்டுகள் முரல

**गूँथना** / **गूँधना** } **स०** மாவு பிசைய ; சேர்க்க

**गूजर - पु०** இடையன்

**गूढ़ - वि०** ரகசியமான ; கடினமான ; பொருள் பொதிந்த

**गूथना - स०** நுழைக்க ; கோக்க ; சேர்க்க ; தைக்க

**गूदड़ - पु०** கந்தை ;**—का लाल -** குப்பையில் கிடக்கும் மாணிக்கம் (தாழ்ந்த இடத்திலிருக்கும் உயர்ந்த பொருள்)

**गूदा - पु०** பழச் சதை

**गूदिया - वि०** விருப்பமுள்ள ; உலோபியான

**गून - स्त्री०** படகு இழுக்கும் வடம் ; ஒரு வகைப் புல்

**गूनी - स्त्री०** சாக்குப்பை

**गूमड़ा - पु०** தலையில் அடிபடுவதால் ஏற்படும் புடைப்பு

**गूमड़ी - स्त्री०** பரு ; முடிச்சு

**गूलर - पु०** பெரிய பழங்களுள்ள ஒரு வகை அத்தி மரம் ; **—का फूल -** காண்பதற்கு அரிய ஆள் அல்லது பொருள்

**गृध्र - पु० गीध** கழுகு

**गृह - पु०** வீடு ; குடும்பம் ; **—स्थ -** குடும்பஸ்தன்; குடும்பி **—स्थी -** இல்லறம் ; குடும்பம் ; **—युद्ध - पु०** உள் நாட்டுக்கலகம் ; வீட்டுச்சண்டை

**गृहिणी - स्त्री०** வீட்டின் எஜமானி ; இல்லாள் ; வீட்டுக்காரி ; மனைவி

**गृही - पु०** குடும்பஸ்தன்; வீட்டுக்காரன்

**गृहीत - वि०** அங்கீகரிக்கப்பட்ட; ஏற்றுக்கொள்ளப்பட்ட

**गेंडना - स०** வயலுக்குக் கரை அல்லது வரப்பு கட்ட ; கோடிட ; சுற்ற

**गेंडरी**
**गेंडुरी** } **स्त्री०** சும்மாடு ; பிரிமணை

**गेंडुली - स्त्री०** பாம்புகள் மண்டலம் போட்டுப் படுத்திருப்பது

**गेंडा - पु०** காண்டா மிருகம் ; கரும்பின் தோகை ; கரும்பு

**गेंद - स्त्री०** பந்து

**गेंदा - पु०** பூச்செண்டு

**गेंदुवा -** தலையணை

**गेड़ना - स०** சுற்றிக் கோடு போட ; பிரதட்சிணம் செய்ய ; சுற்றிவர

**गेदा - पु०** இறக்கை முளைக்காத பறவைக்குஞ்சு

**गेय - वि०** பாடத் தகுந்த

**गेरुआ - वि०** காஷாய நிறமான

**गेरू - स्त्री०** காவிக்கல்

**गेसू - पु०** மயிர்க்கொத்து

**गेह - पु०** வீடு

**गेहनी**
**गेहिनी** } **स्त्री०** இல்லாள்

**गेही - पु०** குடும்பஸ்தன்

**गेहुँअन - पु०** நாகப்பாம்பு

**गेहुँआ - वि०** கோதுமை நிறமான

**गेहूँ - पु०** கோதுமை

**गैंड़ा - पु०** காண்டா மிருகம்

**ग़ैब - पु०** மறைந்து இருத்தல்; புலப்படாமை

**ग़ैबी - वि०** மறைந்த ; அறிமுகமில்லாத

**गैया - स्त्री० गाय** பசு

**ग़ैर - वि०** அந்நிய ; வேறுபட்ட ; **—आबाद -** மக்கள் வசிக்காத ; பாழடைந்த ; **—मज़रूआ -** உழப்படாத ; **—मनकूल -** ஸ்திரமான ; அகற்ற முடியாத ; **—मुमकिन -** நடக்கமுடியாத ; நிகழ இயலாத ;— **—मुनासिब -** உசிதமற்ற ; **—वाजिब -** யோக்கியதையில்லாத ; **—हाज़िर -** ஆஜரில்லாத ; முன்னிலையில்லாத

**ग़ैरत - स्त्री० लज्जा** வெட்கம் ; நாணம்

**निफरना** - अ० கடக்க; திறக்க; தூயதாக

**निफ़ाक** - पु० விரோதம்; பகை; பிளவு

**निबंध** - पु० கட்டுரை

**निबंधन** - पु० ஷரத்து; நிபந்தனை

**निबटना** - अ० நிறைவேற; நிச்சயிக்கப்பட; செலுத்தப்பட; ஓய்வுபெற

**निबटाना** - स० முடிக்க; நிறைவேற்ற; தீர்மானிக்க

**निबटारा** / **निबटाव** / **निबटेरा** - पु० காரிய பூர்த்தி; முடிவு; ஓய்வு; தீர்ப்பு; நிறைவேற்றல்; செயல் நிறைவு

**निबड़ना** - अ० दे० **निबटना**

**निबद्ध** - वि० தடைபட்ட; கட்டப்பட்ட; கோர்க்கப்பட்ட; அடைபட்ட

**निबरना** - अ० புறப்பட; விடுபட; முடிய; தெளிவு பெற

**निबल** - वि० வலி குன்றிய; பலமில்லாத

**निबह** - पु० திரள்; கூட்டம்

**निबहना** - अ० காப்பாற்றப்பட; காரியத்தை முடித்து ஓய்வு பெற; நிர்வகிக்கப்பட; சமாளிக்கப்பட

**निबाह** - पु० நிர்வாகம்; தப்பிக்கும் வழி; சமாளித்தல்

**निबाहना** - स० நடத்திவர; பரிபாலிக்க; சமாளிக்க

**निबिड़** - वि० அடர்த்தியான

**निबुकना** - अ० காரியத்தை முடித்து ஓய்வு பெற; தளையிலிருந்து விடுபட; ஓசைப்படாமல் செல்ல

**निबेड़ना** / **निबेरना** - स० விடுவிக்க; தீர்க்க; பிரித்தெடுக்க; முடிக்க; தீர்ப்பளிக்க

**निबेड़ा** - पु० விடுதலை

**निबौरी** / **निबौली** - स्त्री० வேப்பம் பழம்

**निभ** - वि० இணையான; போன்ற; पु० ஒளி; காந்தி

**निभना** - अ० दे० **निबहना**

**निभाना** - स० दे० **निबाहना**

**निभृत** - वि० அசையாத; ரகசியமான; ஜன நடமாட்டமில்லாத

**निभ्रांत** - वि० ஐயமற்ற; குழப்பமில்லாத

**निमंत्रण** - पु० அழைப்பு; —**पत्र** - पु० அழைப்பிதழ்

**निमंत्रित** - वि० அழைக்கப்பட்ட

**निमक** - पु० दे० **नमक**

**निमग्न** - वि० மூழ்கிய

**निमज्जन** - पु० மூழ்கிக் குளித்தல்; மூழ்குதல்

**निमज्जित** - वि० மூழ்கிய

**निमन** - पु० காட்சிக்கினிய ; அழகிய

**निमान** - वि० பள்ளம் ; தாழ் நிலம் ; சரிவு

**निमिख** - पु० दे० निमिष

**निमित्त** - पु० காரணம் ; கருவி

**निमिष, निमेष** - पु० நிமிடம் ; இமை கொட்டுதல் ; இமைக்கும் நேரம்

**निमीलन** - पु० கண்களை மூடுதல்

**निम्न** - वि० கீழுள்ள ; கீழான

**नियंता** - पु० சரிவர நடத்துபவன் ; அடக்கி ஆளுபவன் ; கட்டுப்படுத்துபவன்

**नियंत्रण** - पु० கட்டுப்பாடு ; ஒழுங்கு ; அடக்கு முறை

**नियत** - वि० நியமிக்கப்பட்ட ; தீர்மானிக்கப்பட்ட

**नियति** - स्त्री० செய்கடன் ; ஏற்பாடு ; முறைமை ; விதி ; அதிருஷ்டம் ; ஊழ்வினை

**नियम** - पु० ஒழுங்கு ; வழக்கம் ; வழிமுறை ; சட்டம் ; —**बद्ध** - वि० கட்டுப்பாட்டிற்கு அடங்கிய

**नियमन** - पु० ஒழுங்குபடுத்துதல் ; ஆட்சி ; அடக்குதல்

**नियमित** - वि० கட்டுப்பாட்டிற் கடங்கிய ; முறையான ; தீர்மானிக்கப்பட்ட

**नियर** - अव्य० சமீபத்தில் ; அருகில்

**नियराई** - स्त्री० அருகாமை ; சமீபம்

**नियराना** - अ० அருகே வர

**नियाज़** - पु० விருப்பம் ; பேட்டி ; காணிக்கை ; பிரார்த்தனை ; அருள் ; பெரியோர்களின் அறிமுகம்

**नियाम** - पु० ஒழுங்கு ; சட்டம் ; வாளுறை

**नियामक** - पु० சட்டம் செய்பவன் ; ஏற்பாடு செய்பவன் ; விதிப்பவன்

**नियामत** - स्त्री० அரிய பொருள் ; செல்வம்

**नियाय, नियाव** - पु० நியாயம் ; நீதி

**नियुक्त** - वि० நியமிக்கப்பட்ட ; அமர்த்தப்பட்ட

**नियुक्ति** - स्त्री० நியமனம் ; வேலையில் அமர்த்துதல்

**नियोजक** - पु० சேர்ப்பவன் ; वि० பொருத்துகிற ; வேலையில் அமர்த்துகிற

**नियोजन** - पु० வேலையில்

அமர்த்துதல்; புகுத்துதல்; கட்டுப்படுத்துதல்

**निरंकुश** - वि० பயமில்லாத; கண்டிப்பவர் இல்லாத

**निरंजन** - वि० தூய்மையான; குற்றமற்ற; पु० கடவுள்

**निरंतर** - वि० தொடர்ச்சியான; நிலையான; क्रि० தொடர்ந்து

**निरक्षर** - वि० எழுத்தறிவில்லாத; மூடனான

**निरक्षि** - वि० கண்கள் இல்லாத; குருடான; பொட்டையான

**निरखना** - स० பார்க்க; ஆழ்ந்து நோக்க

**निरत** - वि० ஈடுபட்ட; ஆழ்ந்த; पु० நாட்டியம்

**निरतिशय** - वि० மிகச்சிறந்த

**निरपराध** - वि० குற்றம் செய்யாத

**निरपेक्ष** - वि० பற்றுதலற்ற; நடுநிலையில் உள்ள

**निरभ्र** - वि० மேகமில்லாத

**निरमोल** - वि० விலை மதிக்க முடியாத; தலைசிறந்த

**निरय** - पु० நரகம்

**निरर्थक** - वि० அர்த்தமற்ற; பயனற்ற; பொருளில்லாத

**नरवधि** - वि० எல்லையற்ற

**निरवलंब** - बि० ஆதரவு அல்லது ஆதாரம் இல்லாத

**निरवार** - पु० விடுதலை

**निरस** - वि० சுவையற்ற

**निरसन** - पु० விலக்குதல்; அழித்தல்

**निरस्त्र** - वि० ஆயுதமற்ற

**निरहंकार** - वि० கர்வமற்ற

**निरा** - वि० வெறும்; கலப்பில்லாத; தனியான

**निराई** - स्त्री० களை எடுத்தல்; களை எடுக்கும் கூலி

**निराकरण** - पु० ஒதுக்குதல்; போக்குதல்; அழித்தல்; தீர்ப்பு

**निराकार** - वि० உருவமற்ற

**निरादर** - पु० அவமதிப்பு; மரியாதையின்மை

**निराना** - स० களையெடுக்க

**निरापद** - वि० கேடு இல்லாத

**निरामय** - वि० நோயற்ற

**निरामिष** - वि० மாமிசம் கலவாத; **—भोजी** - மாமிச உணவு புசிக்காத

**निरारा**, **निराला** - पु० தனி இடம்; वि० தனியான; அலாதியான; விசித்திரமான; அசாதாரணமான

**निराश**, **निरास** - वि० நம்பிக்கையிழந்த

निराशा - स्त्री० நம்பிக்கையிழத்தல்; ஏமாற்றம்

निराश्रय, निराश्रित - वि० புகல் இல்லாத; ஆதரவற்ற; திக்கற்ற

निराहार - वि० சாப்பிடாத

निरीक्षक - पु० மேற்பார்வையிடுபவன்; கண்காணிப்பாளன்

निरीक्षण, निरीक्षा - स्त्री० மேற்பார்வை; கண்காணிப்பு

निरीह - वि० விருப்பில்லாத

निरुक्ति - स्त्री० சொற்பிறப்பாராய்ச்சி

निरुत्तर - वि० பதிலில்லாத; விடையற்ற

निरुत्साह - वि० உற்சாகமற்ற

निरुद्यम - वि० வேலையில்லாத; முயற்சியில்லாத

निरुपम - वि० இணையற்ற

निरुपयोगी - वि० பயன்படாத

निरुपाय - वि० உபாயமற்ற

निरूपण - पु० நிரூபித்தல்; விளக்குதல்; விவரித்தல்

निरोग, निरोगी - वि० நோயற்ற

निरोध - पु० தடை; கட்டு

निरोधक, निरोधी - वि० தடை செய்கிற; தடுத்து நிறுத்துகிற

निर्ख - पु० दर விகிதம்; —नामा- பொருள் விலைப்பட்டியல்; —बंदी - விலைவாசியை நிர்ணயம் செய்தல்

निर्गत - वि० வெளிவந்த

निर्गम - पु० வெளிவருதல்

निर्गुण - वि० குணங்கள் இல்லாத पु० கடவுள்

निर्घात - पु० புயலோசை

निर्घृण - वि० அற்பனான

निर्घोष - पु० சத்தம்; இரைச்சல்; वि० சத்தமற்ற

निर्जन - पु० தனியான; மனிதசந்தடியில்லாத

निर्जीव - वि० உயிரற்ற; சக்தியற்ற; உணர்வற்ற

निर्झर - पु० நீரோட்டம்; சுனை

निर्झरिणी - स्त्री० நதி; புனல்

निर्णय - पु० நிச்சயம்; தீர்ப்பு

निर्णायक - पु० தீர்ப்பாளர்; —मत - தலைவரின் ஓட்டு

निर्णीत - वि० தீர்ப்பான; நிர்ணயிக்கப்பட்ட

निर्दय - वि० கருணையற்ற; தயவில்லாத

निर्दिष्ट - वि० நிச்சயிக்கப்பட்ட; குறிப்பிடப்பட்ட

निर्देश - पु० குறிப்பிடுதல்; நிச்சயித்தல்; வர்ணனை

निर्दोष, निर्दोषी - वि० குற்றமற்ற

निर्द्वन्द, निर्द्वन्द्व - वि० போட்டியில்லாத; கவலையற்ற

**निर्धन** - वि० ஏழையான
**निर्धारित** - वि० நிச்சயிக்கப் பட்ட ; தீர்மானித்த
**निर्निमेष** - क्रि० கண்கொட்டா மல் ; இமைக்காமல்
**निर्बंध** - पु० நிர்ப்பந்தம்; தடை; பிடிவாதம் ; वि० கட்டுப் பாடற்ற; கட்டவிழ்ந்த
**निर्भर** - वि० பொறுத்த ; அண் டியுள்ள ; நிரம்பியுள்ள
**निर्भीक** - वि० பயமற்ற ; அச் சமில்லாத
**निर्भ्रांत** - वि० மலைப்பில்லாத ; பிரமையில்லாத ; ஐயப் பாடில்லாத
**निर्मम** - वि० பற்றுதல் இல் லாத; நடுநிலைமையிலுள்ள
**निर्मल** - वि० அழுக்கில்லாத ; குற்றமில்லாத ; களங்க மற்ற
**निर्मली** - स्त्री० தேற்றாங் கொட்டை
**निर्माण** - पु० உண்டாக்குதல் ; உருவாக்கல் ; அமைப்பு
**निर्माता** - पु० உண்டாக்கு பவன் ; உருவாக்குபவன்
**निर्माल्य** - पु० பூஜையில் சமர்ப் பித்த வஸ்து ; நிர்மால்யம்
**निर्मित** - वि० அமைக்கப்பட்ட; உண்டாக்கப்பட்ட
**निर्मूल** - वि० வேரில்லாத; ஆதா ரம் அல்லது அடிப்படை இல்லாத ; நாசமான
**निर्मोह** / **निर्मोही** - वि० மோகம் அல்லது பற்றுதல் இல்லாத; தயை இல்லாத
**निर्यात** - पु० ஏற்றுமதி ;—**कर** - ஏற்றுமதி வரி ; —**शुल्क** - ஏற்றுமதிக் கட்டணம்
**निर्लज्ज** - वि० வெட்கமில்லாத
**निर्लिप्त** - वि० பற்றுதலில்லாத; குற்றமற்ற ; தூய்மை யான
**निर्लोभ** - वि० பேராசையற்ற
**निर्वाचक** - पु० தேர்ந்தெடுப்ப வன் ; —**नामावली** - வாக் காளர் பட்டியல்
**निर्वाचन** - पु० தேர்தல் ;—**क्षेत्र** - தேர்தல் தொகுதி
**निर्वाचित** - वि० தேர்ந்தெடுக் கப்பட்ட
**निर्वाण** - वि० அணைந்த ; அஸ்த மித்த ; पु० முக்தி ; சாந்தி
**निर्वासन** - पु० வெளியேற்று தல் ; நாடுகடத்தல்
**निर्वाह** - पु० நிர்வாகம் ; பரி பாலித்தல் ; நடத்துதல்
**निर्विकार** - वि० மாறுதலில்லாத
**निर्व्याज** - वि० கபடமற்ற
**निर्हेतुक** - वि० காரணமில்லாமல்

निलय - पुं० வீடு ; இடம்
निलहा - वि० நீல நிறமுள்ள
निवह - पुं० திரள் ; கூட்டம்
निवाज़ - वि० இரக்கமுள்ள ; தயவுள்ள
निवाड़ा - पुं० சிறு படகு
निवार - पुं० கட்டில் நாடா
निवारक - वि० போக்குகிற ; தடுக்கிற
निवारण - पुं० தடுத்தல் ; தீர்த்தல் ; போக்குதல்
निवाला - पुं० கவளம்
निवास - पुं० வசித்தல் ; வசிக்குமிடம் ; இருக்கை
निवासी - वि० வசிக்கிற
निवृत्त - वि० வேலையிலிருந்து விடுவிக்கப்பட்ட ;—होना - வேலையிலிருந்து ஓய்வெடுத்துக்கொள்ள
निवृत्ति - स्त्री० வேலையிலிருந்து நீக்கல் அல்லது ஓய்வு ; —वेतन - பென்ஷன் ; ஓய்வுச் சம்பளம்
निवेदक - पुं० கோருபவன் ; வேண்டுபவன் ; பணிவாகத் தெரிவிப்பவன்
निवेदन - पुं० கோரிக்கை ; வேண்டுகோள் ; பிரார்த்தனை ; பணிவாகத் தெரிவித்தல் ; சமர்ப்பணம்
निवेरा - वि० பொருக்கியெடுத்த ; புதிய
निवेश - पुं० கூடாரம் ; வீடு ; பிரவேசம் ; இடம் ; அலங்காரம் ; நிலைநாட்டல்
निशंक / निश्शंक - वि० பயமற்ற ; சந்தேகமற்ற ; अव्य० பயமின்றி ; சந்தேகமின்றி
निशब्द - वि० அமைதியான
निशांत - पुं० இரவின் முடிவு ; விடியற்காலம்
निशांध - वि० இரவில் கண் தெரியாத ; पुं० ஆந்தை
निशा - स्त्री० இரவு ; மஞ்சள் ; —कर, पति - சந்திரன் ; —चर - இரவில் நடமாடுபவன் ; அரக்கன்
निशाख़ातिर - स्त्री० தேற்றுதல்; ஆறுதல் கூறல்
निशात - वि० சாணை பிடிக்கப்பட்ட ; பளபளப்பாக்கப்பட்ட
निशान - पुं० அடையாளம் ; இருப்பிடம் ; கொடி ; சாணை பிடித்தல் ; —देही - அடையாளம் கண்டு பிடித்தல் ; —पट्टी - हुलिया உருவ அமைப்பு ; முக ஜாடை ; —उठाना, खड़ा करना - போராட்டத்தைத்

தலைமை தாங்கி நடத்த ; —ची - கொடி தூக்கிச் செல்பவன்

**निशाना** - पुं० குறி ; இலக்கு ; —बाँधना, साधना - குறி பார்க்க ; —मारना, लगाना - குறி பார்த்து அடிக்க

**निशानी** - स्त्री० நினைவுச் சின்னம்; குறி ; அடையாளம்

**निशि** - स्त्री० இரவு —दिन - இரவும் பகலும்; எப்போதும்

**निशित** - वि० கூர்மையான

**निशीथ** - पुं० நடு இரவு

**निश्चय** - पुं० தீர்மானம்

**निश्चयात्मक** - वि० நிச்சயமான; சந்தேகமில்லாத ; ஐயமற்ற

**निश्चल** - वि० அசையாத

**निश्चिंत** - वि० கவலையற்ற

**निश्चित** - वि० நிச்சயமான ; தீர்மானிக்கப்பட்ட

**निश्चेष्ट** - वि० அசைவற்ற ; செயலற்ற

**निश्छल** - वि० கபடமில்லாத ; நேர்மையான

**निश्रेयस** - पुं० முக்தி ; மோட்சம் ; மங்களம்

**निश्वास** - पुं० வெளி மூச்சு

**निश्शेष** - वि० மீதியில்லாத

**निषंग** - पुं० அம்பறாத்தூணி ; வாள்

**निषिद्ध** - वि० தடை செய்யப்பட்ட ; மட்டமான

**निषूदन** - पुं० அழித்தல் ; அழிப்பவன்

**निषेध** - पुं० தடை ; மறுத்தல்

**निष्कंटक** - वि० இடையூறில்லாத ; பகையற்ற

**निष्क** - वि० ஒரு பொன் நாணயம்

**निष्कपट** - वि० கபடமற்ற

**निष्कर्ष** - पुं० நிச்சயம் ; உண்மை ; சாரம் ; தீர்மானம் ; தெளிபொருள் ; தீர்ப்பு

**निष्कलंक** - वि० குற்றமற்ற

**निष्काम** - वि० இச்சையில்லாத; பலனை எதிர்பார்க்காத

**निष्कासन** - पुं० வெளியேற்றல்

**निष्क्रम** - वि० ஒழுங்கில்லாத

**निष्क्रमण** - वि० வெளியேறுதல்

**निष्क्रय** - पुं० சம்பளம் ; விற்பனை ; வாடகை ; பரிசு ; பதிலுதவி ; பிரதிபலன்

**निष्क्रिय** - वि० முயற்சியற்ற ; செயலற்ற ; —प्रतिरोध - சத்யாக்ரஹம்

**निष्ठ** - वि० ஊன்றிய ; ஈடுபட்ட ; ஆழ்ந்த

**निष्ठा** - स्त्री० நிஷ்டை ; நிலைத்திருத்தல் ; நம்பிக்கை ; தீவிர ஈடுபாடு

निष्ठुर - वि० கொடுமையான; கடினமான; இரக்கமற்ற; அன்பில்லாத

निष्णात - वि० தேர்ந்த ; அறிவு நிரம்பிய ; ஞானமுள்ள

निष्पक्ष - वि० ஒருதலைச் சார் பில்லாத; நடுநிலையிலுள்ள

निष्पत्ति - स्त्री० உற்பத்தி; முடிவு; விளைவு; ஆராய்வு

निष्पन्न - वि० முடிந்துபோன; உற்பத்தியான ; வெளி யான

निष्प्रभ - वि० ஒளியில்லாத

निष्प्रयोजन - वि० குறிக்கோள் இல்லாத ; வீணான ; லாப மற்ற ; பயனில்லாத

निष्फल - वि० வீணான

निसँठ - वि० ஏழையான

निसबत - स्त्री० சம்பந்தம் ; தொடர்பு ; கல்யாணப் பேச்சு

निसरना - अ० வெளியேற ; புறப்பட

निसर्ग - पु० இயற்கை குணம்; சுபாவம் ; உருவம் ; தியா கம் ; படைப்பு

निसस - वि० பிரக்ஞையற்ற ; மூச்சுப் பேச்சற்ற

निसान - पु० दे० निशान

निसार - पु० சமுதாயம் ; கூட் டம் ; அர்ப்பணம் செய் தல் ; वि० சாரமற்ற

निसि - स्त्री० இரவு ; —दिन, वासर - இரவும் பகலும் ; எப்போதும்

निसोठा, निसोठी - वि० சாரமற்ற

निसेनी, निसैनी - स्त्री० सीढ़ी ஏணி

निसोत - वि० சுத்தமான ; தூய

निस्तब्ध - वि० அசைவற்ற ; உணர்வற்ற ; ஜடமான ; சந்தடியற்ற

निस्तरण, निस्तार - पु० கரை சேருதல் ; முக்தி ; விடுதலை

निस्तेज - वि० பிரகாசமில்லாத; ஒளியிழந்த

निस्पृह - वि० ஆசையில்லாத

निस्फ़ - वि० பாதி

निस्फ़ानिस्फ़ - वि० சரிபாதி

निस्सार - वि० சாரமற்ற

निस्सीम - वि० எல்லையற்ற

निःस्वार्थ, निस्वार्थ - वि० சுயநலமற்ற

निहंग - वि० தனியான ; வெட்கமில்லாத

निहत - वि० எரியப்பட்ட ; கொல்லப்பட்ட ; அழிக் கப்பட்ட ; நஷ்டமான

**निहत्थ** } **निहत्था** } **वि०** ஆயுதமில்லாத; ஏழையான; துணை யற்ற

**निहाँ** - **वि०** மறைந்த

**निहाई** - **स्त्री०** கருமானின் பட்டரைக் கல்

**निहायत** - **वि०** மிகவும் அதிகமான

**निहार** - **पु०** மூடுபனி; பனிக் கட்டி

**निहारना** - **स०** ஆவலோடு பார்க்க; கவனமாய்ப் பார்க்க; உற்றுநோக்க

**निहाल** - **वि०** விருப்பங்கள் நிறைவேறிய; பூர்ணமாகத் திருப்தியடைந்த; —**होना** - மிகவும் மகிழ்ச்சி அடைய

**निहाली** - **स्त्री०** மெத்தை; சந்தோஷம்; மகிழ்ச்சி

**निहित** - **वि०** ஸ்தாபிக்கப் பட்ட; வைக்கப்பட்ட; அடங்கிய

**निहुरना** - **अ०** குனிய

**निहोरना** - **स०** பிரார்த்திக்க; தெரிவித்துக் கொள்ள; சமாதானப்படுத்த

**निहोरा** - **पु०** அருள்; வேண்டுகோள்; நம்பிக்கை; நன்றி; ஆதரவு; பணிவு; **क्रि० वास्ते** ஆக; பொருட்டு

**नींद** - **स्त्री०** தூக்கம்; கனவு; —**उचटना** தூக்கம் வராமலிருக்க; தூக்கம் கெட்டுப் போக

**नींव** - **स्त्री०** அஸ்திவாரம்; அடிப்படை; ஆதாரம்; அடிக்கல்

**नीक** } **नीका** } **वि०** நல்ல; அழகான

**नीकि** } **नीके** } **क्रि०** நன்றாய்

**नीच** - **वि०, पु०** அற்பன்; இழிந்தவன்

**नीचता** - **स्त्री०** அற்பத்தனம்; இழிவு

**नीचा** - **वि०** ஆழமான; தாழ்ந்த; அற்பமான

**नीचे** - **क्रि०** கீழே

**नीठि** - **स्त्री०** விருப்பமின்மை; **क्रि०** எப்படியாவது

**नीड़** - **पु०** பறவைக் கூடு

**नीत** - **वि०** கொண்டுவரப் பட்ட; சேர்க்கப்பட்ட; நிருவப்பட்ட

**नीति** - **स्त्री०** நல்லொழுக்கம்; ராஜதந்திரம்; நீதி; பழகும் முறை; உலக வழக்கு; ஆதாரக்கொள்கை; —**ज्ञ** - நீதியறிந்த

**नीप** - **पु०** கதம்பமரம்; மலையின் அடிபாகம்

**नीबू** - पु० எலுமிச்சம்பழம்

**नीम** - पु० வேப்பமரம்; वि० பாதி; —**आस्तीन** - அரைக் கைச் சட்டை; —**चा** - சிறு வாள்; —**जाँ** - குற்றுயிரான; —**टर** - அரை குறைப் படிப்புள்ள; —**निगाह** - ஓரப்பார்வை; —**पुख़्त, पुख़्ता** - பாதி பக்குவமான; —**बाज़** - பாதி திறந்ததும், பாதி மூடியதுமான; —**बिसमिल** - உயிர் போய்க் கொண்டிருக்கிற; படுகாயமடைந்த; —**हकीम** - அரைகுறை வைத்தியன்

**नीयत** - स्त्री० தீர்மானம்; உத்தேசம்; எண்ணம்; —**डिगना, बद होना** - கெட்ட எண்ணம் உதிக்க

**नीर** - पु० தண்ணீர்; —**ज** - தாமரை; முத்து; நீரில் உண்டாகும் பொருள்; —**द, धर** - மேகம்; —**धि, निधि** - கடல்

**नीरस** - वि० உலர்ந்த; ரசமற்ற; சுவையில்லாத

**नीरोग** - वि० நோயற்ற

**नील** - पु० அவுரி; நீல நிறம்; वि० நீல நிறமான

**नीलगाय** - स्त्री० ஒருவித மான்

**नीलम** - पु० நீல மணி

**नीला** - वि० நீல நிறமான

**नीलाम** - पु० ஏலம்; —**पर चढ़ना** - ஏலத்திற்கு வர

**नीलिमा** - स्त्री० நீல நிறம்

**नीलोत्पल** - पु० நீலத் தாமரை

**नीव** - स्त्री दे० **नींव**

**नीवी** - स्त्री० கொசுவம்; எக்குமுடிச்சு

**नीहार** - पु० பனி

**नीहारिका** - स्त्री० பனித்துளி

**नुक़्ता** - पु० புள்ளி; —**गीर** - குணத்தை அல்லது குற்றத்தை எடுத்துரைக்கிற; —**चीनी** - குற்றங்களைக் குறிப்பிடுதல்

**नुक़्ती** - स्त्री० லாடுப் பூந்தி

**नुक़रा** - पु० வெள்ளி; वि० வெண்மையான

**नुक़्स** - पु० குற்றம்; குறை

**नुक़्सान** - पु० தீங்கு; நஷ்டம்; —**उठाना** - நஷ்டமடைய

**नुकाना** - स० மறைக்க; ஒளிக்க

**नुकीला** - वि० கூர்மையான

**नुक्कड़** - पु० நுனி; முனை; கடைசிப் பாகம்

**नुचना** - अ० பிடுங்கப்பட

**नुजूम** - पु० நட்சத்திரங்கள்; சோதிடம்

**नुतफ़ा** - पु० **संतान** மக்கள் ; சுக்லம் ; **—ठहरना** - கரு வற்பட

**नुमाइंद** - पु० பிரதிநிதி

**नुमाइश** - स्त्री० பொருட்காட்சி; பகட்டு ; அழகு

**नुमाइशी** - वि० பகட்டான

**नुमायाँ** - वि० தெளிவாய்த் தெரிகிற

**नुसखा** - पु० மருந்துச்சீட்டு ; எழுதப்பட்ட காகிதம்

**नूत** / **नूतन** - वि० புதிய ; விசித்திரமான

**नून** - पु० உப்பு

**नूपुर** - पु० சிலம்பு

**नूर** - पु० ஒளி

**नूरा** - वि० பிரகாசமான

**नूरानी** - वि० பிரகாசமுள்ள ; அழகான

**नृत्य** - पु० நாட்டியம்

**नृप** / **नृपति** - पु० அரசன்

**नृशंस** - वि० கொடிய ; கொடுமைப்படுத்துகிற

**नेउरी** - स्त्री० லாடம்

**नेक** - वि० நல்ல ; கொஞ்சம் ; **—क़दम**-சுபமான வருகை ; **—ख्वाह** - நன்மை விரும்புபவன் ; **—चलन** - நன்னடத்தையுள்ள ; **—तर, तरीन** - மிகச் சிறந்த ; **—दिल** - நல்ல எண்ணமுள்ள; **—नाम** - புகழ்பெற்ற ; **—निहाद** - நன்னடத்தை உள்ள : **—नीयत** - நல்ல எண்ணமுள்ள ; நல்ல நடத்தையுள்ள ; **—बख्त** - கபடமற்ற ; கீழ்ப்படிதலுள்ள ; யோக்கியமான ; பாக்கியசாலியான

**नेकी** - स्त्री० நல்ல செயல் ; உதவி நன்மை; நேர்மை; **—बदी** - நல்லதும் பொல்லாததும்

**नेग** - पु० விவாக காலத்தில் வழங்கப்படும் வெகுமானம் ; அன்பளிப்பு ; மாமூல்

**नेगी** - पु० வெகுமானம் பெறுபவன்

**नेजा** - पु० ஈட்டி ; கொடி ; **—बरदार** - ஈட்டி அல்லது கொடி தாங்கிச் செல்லும் வீரன்

**नेड़े** - क्रि० **पास** அருகே

**नेत** - पु० தீர்மானம் ; திடசங்கற்பம்; ஏற்பாடு; மத்துக்கயிறு ; எண்ணம்

**नेता** - पु० தலைவன்

**नेती** - स्त्री० மத்துக் கயிறு

**नेत्र** - **पु०** கண் ; **—कड़वाना** - கண்கடுக்க

**नेनुआ** - **पु०** **घियातरोई** நெய்ப் பீர்க்கு

**नेपथ्य** - **पु०** நாடகத் திரையின் பின்புறம் ; திரை மறைவு

**नेफ़ा** - **पु०** நிஜாரில் நாடா நுழைக்கும் துவாரம்

**नेम** - **पु०** நியமம் ; கட்டுப் பாடு ; காலம் ; எல்லை

**नेमत** - **स्त्री०** அருமையான பொருள் ; நல்ல சாப் பாடு ; செல்வம்

**नेमि** - **स्त्री०** வண்டிக் குடம் ; உருளை ; கரை

**नेमी** - **वि०** நியமப்படி நடக் கிற ; **—धरमी** - நியம தர் மங்களைக் கடைப்பிடிப்ப வன் ; ஆசாரசீலன்

**नेरे** - **क्रि०** **पास** அருகே

**नेवज** - **पु०** நைவேத்தியம்

**नेवतना** - **स०** அழைக்க

**नेवता** - **पु०** **दे०** **न्योता**

**नेवरना** - **अ०** அப்புறப்படுத்த

**नेवल** / **नेवला** - **पु०** கீரிப்பிள்ளை

**नेवाजं** - **वि०** **दे०** **निवाज**

**नेवाड़ी** / **नेवारी** - **स्त्री०** முல்லை போன்ற பூ

**नेश** - **पु०** நுனி ; கொடுக்கு

**नेश्तर** - **पु०** ரண சிகிச்சைக் கத்தி

**नेस्त** - **वि०** இல்லாத ;**—नाबूद** - அழிவடைந்த

**नेस्ती** - **स्त्री०** இல்லாமை ; அழிவு ; ஏழ்மை

**नेह** - **पु०** சிநேகம் ; அன்பு

**नै** - **स्त्री०** மூங்கில் குழல் ; நதி

**नैचा** - **पु०** ஹுக்காவின் நீண்ட குழல்

**नैतिक** - **वि०** நீதி சம்பந்தமான

**नैन** / **नैना** - **पु०** கண் ; வெண்ணை; **—सुख** - வெண்மையும் மென்மையும் உடைய பருத்தித் துணி

**नैनू** - **पु०** பூ வேலை செய்யப் பட்ட துணி

**नैपुण्य** - **पु०** திறமை ; தேர்ச்சி

**नैमित्तिक** - **वि०** சகுனத்தால் அறியப்படுகிற ; ஏதோ ஒரு காரணம் பற்றிச் செய்யப்படுகிற ; தற் செயலாக ஏற்பட்ட ; **पु०** முக்கிய காரணத்திற்கா கச் செய்யப்படும் காரி யம் அல்லது சடங்கு

**नैया** - **स्त्री०** படகு

**नैरंग** - **पु०** / **नैरंगी** - **स्त्री०** கபடம் ; இந்திர ஜாலம் ; புரட்டு

**नैराश्य** - **पु०** நம்பிக்கையிழத் தல் ; நிராசை

**नैष्ठिक** - वि० நெறியுடன் இருக்கிற
**नैसर्गिक** - वि० இயற்கையான
**नैहर** - पु० பிறந்தகம்
**नोइनी** / **नोई** - स्त्री० பிணைகயிறு
**नोक** - स्त्री० நுனி; —**झोंक** - ஆடம்பரம்; புண்படுத்தும் வார்த்தை; —**दार** - கூரான; நெஞ்சைப் பிளக்கிற
**नोकना** - स० ஆசைப்பட; கவரப்பட
**नोकीला** - वि० दे० **नुकीला**
**नोच** - स्त्री० பிறுண்டுதல்; பறித்தல்; பலவந்தமாகப் பொருள் பெறுதல்; பிடுங்கியெடுத்தல்; —**खसोट** - स्त्री० கொள்ளை; பிய்த்துப் பிடுங்குதல்
**नोचना** - स० பிறுண்ட; பிடுங்க
**नोना** - पु० உப்பு மண்
**नोनिया** - पु० உப்பெடுக்கும் ஜாதி
**नोनी** - स्त्री० உப்பு மண்
**नौ** - स्त्री० கப்பல்; ஓடம்; वि० ஒன்பது; புதிய; —**उम्र** - யௌவனமான; —**दो ग्यारह होना** - ஓட்டமெடுக்க; கம்பி நீட்ட; —**व नौ** - முற்றிலும் புதிய; —**वारिद** - புதிதாய் வந்த; —**सिखा, सिखिया, सिखुवा** - கற்கத் தொடங்கியிருக்கிற; அரைகுறையான
**नौकर** - पु० வேலைக்காரன்; —**शाही** - உத்தியோக வர்கத்தார் நடத்தும் ஆட்சி முறை
**नौकरानी** - स्त्री० வேலைக்காரி
**नौकरी** - स्त्री० வேலை; உத்தியோகம்; சேவை
**नौका** - स्त्री० படகு
**नौजवान** - पु० இளைஞன்
**नौनिहाल** - पु० புதிய செடி; வாலிபன்
**नौबत** - स्त्री० முறை; நிலைமை; கெட்ட நிலை; மங்கள வாத்தியம்; முரசு; —**निशान** - முரசும் கொடியும்; —**ब नौबत** - வரிசைக் கிரமமாக; —**गुजरना** - சந்தர்ப்பம் நழுவிப்போக; —**झड़ना, बजना** - மகிழ்ச்சி கொள்ள; விழாக் கொண்டாட
**नौबती** - पु० முரசு அடிப்பவன்; காவற்காரன்
**नौरंग** - पु० ஔரங்கசீபு; புதிது
**नौलखा** - वि० ஒன்பது லக்ஷம் விலையுள்ள (மாலை)
**नौशा** - पु० மணமகன்

नौसत - पुं० சிங்காரம்.
नौसादर - पुं० நவச்சாரம்
नौसेना - स्त्री० கப்பல் படை
नौहड़ - पुं० புதிய மண் கலயம்
न्यस्त - वि० வைக்கப்பட்ட ; ஒப்படைக்கப்பட்ட
न्याय - पुं० நியாயம் ; நீதி ; —कर्ता நீதிபதி
न्यायाधीश - पुं० நீதிபதி ; தீர்ப்பு அளிப்பவன்
न्यायालय - पुं० நீதிமன்றம் ; கோர்ட்டு
न्यारा - वि० தூரமான ; தனியான ; விசித்திரமான ; அசாதாரணமான
न्यारे - क्रि० தூரத்தில் ; தனியாய் ; அலாதியாக
न्यास - पुं० அடகு வைத்தல் ; துறத்தல்; —कर्ता - டிரஸ்டு ஏற்படுத்துவன்
न्यून - वि० குறைந்த ; தாழ்வான ; உருக்குலைந்த
न्यूनता - स्त्री० குறைவு ; தாழ்வு
न्योछावर - स्त्री० दे० निछावर
न्योतना - स० விருந்து, உற்சவம் முதலியவைகளுக்கு அழைக்க ; அழைப்பு விடுக்க
न्योतहरी - पुं० விருந்தாளி ; அழைக்கப்பட்டவன்
न्योता, न्यौता - पुं० அழைப்பு
न्हाना - अ० குளிக்க

## प

पंक - पुं० कीचड़ சேறு
पंकज - पुं० தாமரை
पंकिल - वि० சேறுள்ள
पंक्ति - स्त्री० வரிசை ; —बद्ध - वि० வரிசையில் அடக்கப்பட்ட
पंख - पुं० சிறகு
पंखड़ी, पंखुड़ी - स्त्री० பூவின் இதழ்
पंखा - पुं० விசிறி
पंखी - पुं० பக்ஷி ; சிறு விசிறி
पँखुड़ा - पुं० தோளின் கீல்
पँखेरू - पुं० பட்சி ; பறவை
पंग, पंगा - वि० நொண்டியான ; மந்தமான ; தடைப்பட்ட
पंगत, पंगति - स्त्री० வரிசை ; விருந்து; சபை
पंगु, पंगुल - वि० நொண்டியான
पंच - वि० ஐந்து ; பொது மக்கள ; பஞ்சாயத்து ;—गव्य - பசுவின் ஐந்து பொருள்கள் ; பால், தயிர், நெய், சாணம், மூத்திரம் ; —नद - சத்லஜ், பியாஸ், ராவி, செனுப்,

जீலம் எனும் ஐந்து நதிகள் ; பஞ்சாப் பிரதேசம்; —नामा - பஞ்சாயத்தின் தீர்ப்பு ; —मेल - ஐந்து சாமான்கள் சேர்ந்த ;—हजारी - ஐயாயிரம் சிப்பாய்களுக்குத் தலைவன்

**पंचम** - वि० ஐந்தாவது ; நிபுணன் ; அழகான

**पंछा** - पु० தாவரங்களிலிருந்து சொட்டும் நீர்த்துளி ; நிறம் ; துவாலை

**पँछी** - पु० பறவை

**पंज** - वि० ஐந்து ; —गोश - ஐந்து கோணங்களுள்ள

**पंजर** - पु० எலும்புக்கூடு

**पंजरी** - स्त्री० பாடை

**पँजा** - पु० ஐந்து விரல்களின் சேர்க்கை ; பிடி ; செருப்பின் முன்பாகம் ; சீட்டின் ஐந்தாம்பந்து

**पंजारा** पु० பஞ்சடிப்பவன்

**पंजिका** - स्त्री० பஞ்சாங்கம்

**पँजेरा** - पु० உடைந்த பாத்திரங்களைப் பழுதுபார்ப்பவன்; கன்னான்

**पंडा** - पु० பூசாரி ; புரோகிதன்

**पंडाल** - पु० சபை மண்டபம் ; பந்தல்

**पंडिताऊ** - वि० அறிஞர் போலுள்ள

**पंडु** - वि० வெளுத்த ; பாண்டு ரோகமுள்ள

**पंथ** - पु० வழி ; நெறி ; நடத்தை ; சம்பிரதாயம் ; —गहना - நன்நெறியைக் கடைப் பிடிக்க;—दिखाना- வழிகாட்ட ; அறிவுறை சொல்ல

**पंथी** - पु० வழி நடப்பவன் ; நெறியைக் கடைபிடிப்பவன்

**पंथान** - पु० வழி

**पंद** - स्त्री० உபதேசம் ; அறிவுறை

**पंपाल** - वि० பெரும் பாவியான

**पँवरना** - अ० நீந்த ; ஆழம் அறிய

**पँवरि** - स्त्री० நிலைப்படி

**पँवरिया** - पु० வாயில் காப்போன் ; குழந்தை பிறந்தும் மங்கள கீதம் பாடும் ஒரு ஜாதி

**पँवाड़ा** - पु० வீண் வர்ணனை நிறைந்த கதை அல்லது பாட்டு

**पँसारी** - पु० பல சரக்கு வியாபாரி

**पँसेरी** - स्त्री० ஐந்து சேர் நிறுவை

**पइया दाना** } **पु०** சாவியாய்ப் போன நெல்;
**पैया दाना** } கருக்காய்; பதர்

**पकड़ - स्त्री०** பிடி; பிடிப்பு; **—धकड़ - स्त्री०** கைது செய்தல்; தடை; ஓடுகிறவனைத் துரத்திப் பிடித்தல்; **—में आना** - பிடியில் சிக்க; அடங்கி வர

**पकड़ना - स०** பிடிக்க; கைது செய்ய; நிறுத்த; அடக்க

**पकना - अ०** பழுக்க; பக்குவமாக; (சோறு) வேக

**पकवान - पु०** தின்பண்டம்

**पकाई - स्त्री०** சமையற் கூலி; சமையல் வேலை

**पकाना - स०** சமைக்க; பழுக்க வைக்க; பக்குவப்படுத்த

**पक्का - वि०** பழுத்த; முற்றிய; பக்குவமான; தேர்ச்சியுள்ள; திடமான; **—फ़र्श** - பெரிய விரிப்பு; **—मकान** - கட்டிட வீடு; **पक्की रसोई** -நெய்யில் தயார் செய்த உணவு; நன்றாய் சமைத்த உணவு

**पक्व - वि०** பக்குவமான

**पक्वता - स्त्री०** } பக்குவம்
**पक्वत्व - पु०** }

**पक्ष - पु०** பக்கம்; சிறகு; பக்ஷம்; **—पात** - ஓரவஞ்சனை; பக்ஷபாதம்; **— वात** - பக்கவாதம்; பார்சுவ வாயு

**पक्षी - पु०** பறவை; ஒரு தலையாகப் பேசுகிறவன்

**पख - स्त्री०** வீண் பேச்சு; சண்டை; பிடிவாதம்

**पख़ - स्त्री०** வீணுகக் குற்றம் கண்டுபிடித்தல்

**पखवारा - पु०** ஒரு பக்ஷம்; (15 நாட்கள் கொண்டது)

**पखान - पु०** கல்; பாறை

**पखारना - स०** அலம்ப; கழுவ

**पखाल - स्त्री०** தண்ணீர்ப் பை; துருத்தி

**पखावज - स्त्री०** சிறு மிருதங்கம்

**पखुरी - स्त्री० दे० पंखुडी**

**पखेरू - पु०** பறவை

**पग - पु०** காலடி; சுவடு

**पगडंडी - स्त्री०** ஒற்றையடிப் பாதை

**पगड़ी - स्त्री०** தலைப்பாகை

**पगतरी - स्त्री०** செருப்பு

**पगना - अ०** ஒட்ட; இணைய

**पगरा - पु०** காலடி; யாத்திரை ஆரம்பிக்கும் நேரம்; அதிகாலை

**पगला - वि०** கிறுக்குப்பிடித்த; பித்தனை; வெறி பிடித்த

**पगलाना** - अ० கிறுக்குபிடிக்க; பைத்தியம் பிடிக்க
**पगहा** - पु० **पघा** மாடு, கன்று களின் தும்பு
**पगा** - पु० துப்பட்டா
**पगाना** - स० மரியாதை செய்ய
**पगार** - पु० நடந்து கடக்கப் படும் ஆறு; நாற்புறச் சுவர்; துகைக்கப்பட்ட மண், காரை முதலியன
**पगाह** - स्त्री० அதிகாலே
**पगिया** - स्त्री० दे० **पगड़ी**
**पगुराना** - अ० அசை போட; மெள்ளமெள்ளப் பேச
**पचड़ा** - पु० சச்சரவு
**पचना** - अ० ஜீர்ணம் ஆக; துன்பப்பட
**पचाना** - स० ஜீர்ணமாக்க; பிறர் பொருளைக் கவர; நாசமாக்க
**पचौनी** - स्त्री० **आमाशय** இரை குடல்
**पच्चड़ / पच्चर** - पु० ஆப்பு; —**उड़ाना, मारना** - இடைஞ்சல் செய்ய
**पच्ची / पच्चीकारी** - स्त्री० கல் பதித்தல்
**पच्चीसी** - स्त्री० ஒரு விளையாட்டு
**पच्छिम** - पु० **पश्चिम** மேற்கு
**पच्छी** - पु० பறவை
**पछड़ना** - अ० சண்டையில் தோற்க; வீழ்ந்து விட; பின்தங்க
**पछताना** - अ० பச்சாத்தாபப் பட; இரங்க
**पछताव / पछतावा** - पु० பச்சாத்தாபம்; கழிவிரக்கம்
**पछनी** - स्त्री० கத்தரிக்கோல்; சிறு கத்தி
**पछलगा / पछलागा** - पु० பின் தொடர்ப வன்; சீடன்; தொண்டன்
**पछवत** - स्त्री० மறு போகம்
**पछवाँ / पछुवाँ** - वि० மேற்குத் திசையி லிருந்து வருகிற; —पु० மேற்காற்று
**पछुहिया** - वि० மேற்குப் பிர தேசத்து; மேற்குத் திசை யினுடைய
**पछाँह** - पु० மேல் நாடு
**पछाड़** - स्त्री० பிரக்ஞையற்று விழுதல்; —**खाना** - மூர்ச் சித்து விழ
**पछाड़ना** - स० இடித்துத்தள்ள; துணியை அடித்துத் துவைக்க
**पछाहीं** - वि० மேல் நாட்டைச் சேர்ந்த
**पछोड़ना** - स० தானியத்தை முறத்தால் புடைக்க

**पज़मुर्दा - वि०** வாடிய
**पजावा - पु०** செங்கல்ச் சூளை
**पटंबर - पु०** பட்டுத் துணி
**पट - पु०** துணி; கதவு; **वि०** குப்புறக் கிடக்கிற; —**पड़ना** - குறைந்துபோக; படுத்துப் போக; —**क्रि०** உடனே
**पटकना - स०** வேகமாய்க் கீழே போட; குஸ்தியில் வீழ்த்த
**पटका - पु०** இடுப்பில் அணியும் பெல்டு; ஒட்டியாணம்
**पटतर - पु०** சமநிலை; உபமானம்
**पटना - अ०** பள்ளம் நிரம்ப; மனம் ஒப்ப; கூறைவேய; கடன் அடைய
**पटपटाना - अ०** துடிக்க
**पटपर - वि०** சமானமான; —**पु०** மிகப் பாழான இடம்
**पटरा - पु०** பலகை; —**होना** - பாழாக; நாசமாக; —**कर देना** - அழிக்க; சிதைத்துவிட
**पटरानी - स्त्री०** பட்டத்து ராணி
**पटरी - स्त्री०** சிறு பலகை; எழுதும் பலகை; தெரு ஓரத்திலுள்ள நடை பாதை; தண்டவாளம்
**पटल - पु०** கூரை; திரை; புத்தகத்தின் பகுதி; அத்தியாயம்; குவியல்
**पटवारगरी - स्त्री०** கிராமக் கணக்கன் வேலை
**पटवारी - पु०** கிராமக் கணக்கன்
**पटवास - पु०** கூடாரம்
**पटसन - पु०** சணல்
**पटह - पु०** நகாரா; முரசு
**पटा - पु०** ஆசனம்; மணை; மரப்பலகை
**पटाका** / **पटाखा** } **पु०** பட்டாசு; அடி
**पटाना - स०** பரப்ப; தார்சு செய்ய; கடன் தீர்க்க; தண்ணீர் பாய்ச்ச
**पटाव - स्त्री०** பரப்புதல்; — வாசல் நிலையின் மேற்கட்டை
**पटिया - स्त्री०** கட்டில் சட்டம்; வகிடு; எழுதுபலகை; சரளைக்கல்
**पटीलना - स०** தோற்கடிக்க; பொய்யும் மெய்யுமான வார்த்தைகள் சொல்ல; ஏமாற்ற; சம்பாதிக்க; நீக்க
**पटु - वि०** திறமையுள்ள
**पटुआ** / **पटुवा** } **पु०** ஓர் வகைச் சணல்

**पटुका** - पुं० ஒட்டியாணம்; பெல்ட்

**पटुता** - स्त्री० } திறமை
**पटुत्व** - पुं० }

**पटेबाज़** - पुं० சிலம்பக்காரன்; துஷ்டன்

**पटेल** - पुं० கிராமத் தலைவன்

**पटेला** - पुं० பரம்புப் பலகை; பூமியைச் சமப்படுத்தும் பெரிய உருட்டுக் கல்

**पटोरी** - स्त्री० பட்டுத்துணி

**पटोहिया** - पुं० ஆந்தை

**पट्ट** - पुं० ஆசனம்; சாசனம் எழுதும் உலோகத் தகடு; वि० முக்கியமான

**पट्टन** - पुं० பட்டணம்; நகரம்

**पट्टा** - पुं० பட்டாப் பத்திரம்; நாயின் கழுத்துப் பட்டை; ஆசனம்; சேவகனின் வில்லை

**पट्टी** - स्त्री० கட்டிலின் நீளச் சட்டம்; துணியின் கரை; பங்கு; எழுது பலகை; கெட்ட உபதேசம்; சிப்பாய்கள் காலில் சுற்றிக் கொள்ளும் அகன்ற நாடா; —**दार** - பங்காளி

**पट्टू** - पुं० ஒருவிதக் கம்பளித் துணி; கிளி

**पट्ठा** - पुं० பயில்வான்; நன்கு வளர்ந்த மனிதன்

**पठन** - पुं० படித்தல்

**पठनीय** - वि० படிக்கத் தகுந்த

**पठान** - पुं० முஸல்மான்களின் ஒரு பிரிவினர்; ஆப்கானியர்கள்

**पठाना** - स० அனுப்ப

**पठार** - पुं० சமவெளி

**पठावन** - पुं० தூதன்

**पठित** - वि० படித்து முடித்த; எழுதப்படிக்கத் தெரிந்த; —**ग्रंथ** - पुं० விவரமாய்ப் படிக்கவேண்டிய முக்கியபாடப் புத்தகம்

**पड़त** } पुं० விகிதம்
**पड़ता** }

**पड़ताल** - स्त्री० சோதனை; விசாரணை; ஆராய்ச்சி

**पड़तालना** - स० சோதிக்க; விசாரிக்க; மேற்பார்வை செய்ய

**पड़ती** - स्त्री० **पगरती** தரிசு நிலம்

**पड़ना** - अ० விழ; படுக்க; தாழ்வுற; துன்புற; நோயுற

**पड़पड़ाना** - अ० துடிக்க

**पड़पोता** - पुं० கொள்ளுப் பேரன் (மகன் வழி)

**पड़वा** - स्त्री० பிரதமை; எருமைக் கன்று

**पड़ाव** - पुं० பிரயாணிகள் தங்குமிடம்

**पड़ोस - पु॰** அக்கம் பக்கம்

**पड़ोसी - पु॰** அக்கம் பக்கத்தி லிருப்பவர்

**पढ़ना - स॰** படிக்க ; கற்க

**पढ़वाना - स॰** படிக்கச் செய்ய ; பயில்விக்க

**पढ़ाई - स॰** படிப்பு ; கற்பித் தல் ; படிப்பினை

**पढ़ाना - स॰** கற்பிக்க

**पढ़ा-लिखा - वि॰** படித்த ; எழு தப் படிக்கத் தெரிந்த ; கற்ற

**पण - पु॰** சூதாட்டம் ; வாக் குறுதி ; பந்தயம்; கொடுக் கல் வாங்கல் ; மதிப்பு ; செப்புக்காசு; துதி; புகழ்; **—लगाना -** பந்தயம் வைக்க

**पण्य - वि॰** விற்பனைக்குத் தகுதி யான ; புகழத்தக்க ; **पु॰** விற்பனைப் பொருள் ; வியாபாரம்; விலை; கடை; **—शाला -** கடை ; கடை வீதி

**पतंग - पु॰** காற்றாடி ; விட்டில் பூச்சி ; பறவை ; சூரியன்

**पत - पु॰** எஜமானன் ; கண வன் ; **स्त्री॰** வெட்கம் ; மரி யாதை ; **—पानी -** கௌர வம்; வெட்கம்; **—उतारना -** இழிவு படுத்த

**पतझड़ - स्त्री॰** இலையுதிர் காலம்

**पतन - पु॰** வீழ்ச்சி ; அழிவு ; **—शील - वि॰** விழுகிற ; அழிந்து போகிற

**पतनोन्मुख - वि॰** விழப்போகிற; நாசத்தை முன்னோக் கியுள்ள

**पतला - वि॰** மெலிந்த ; கையா லாகாத ; அதிகத்திரவ மான

**पतलून - पु॰** நிஜார்

**पतवार - स्त्री॰** படகின் சுக் கான்

**पतवारी - स्त्री॰** கரும்புத் தோட் டம் ; படகோட்டி ; சுக் கான்

**पतवास - स्त्री॰** பறவைகள் அடையுமிடம்

**पता - पु॰** விலாசம் ; தகவல் ; முகவரி

**पताई - स्त्री॰** உலர்ந்த சருகு ; இலைகளின் குவியல்

**पताका - स्त्री॰ झंडा** கொடி ;**— उड़ाना -** உரிமை கொள்ள; வெற்றி பெற;**—गिरना -** தோல்வியுற

**पताकिनी - स्त्री॰** சேனை ; படை

**पताल - पु॰ दे॰ पाताल**

**पति - पु॰** கணவன் ; எஜமா னன் ; தலைவன்

पतित - वि० வீழ்ச்சியடைந்த; அற்பமான
पतियाना - स० நம்ப
पतियारा - पु० கணவனின் நண்பன்; நம்பிக்கை
पतीली - स्त्री० ஓர் வித ஆழமில்லாத பாத்திரம்
पतुरिया - स्त्री० வேசி
पतोह | पतोहू - स्त्री० நாட்டுப் பெண்; மருமகள்
पत्तर - पु० உலோகத் தகடு
पत्तल - स्त्री० சாப்பிடும் தையல் இலை
पत्ता - पु० இலை
पत्ति - पु० காலாட் படை; போர் வீரன்; படையின் சிறு பகுதி
पत्ती - स्त्री० சிறிய இலை; பகுதி; வியாபாரக்கூட்டு —दार - கூட்டாளி; பங்குதார்
पत्थ - पु० पथ्य பத்தியம்; நோயை நீக்கும் பொருள்
पत्थर - पु० கல்; ஆலங்கட்டி; बाज़ी - கல் வீச்சுப் பந்தயம்; —की लकीर - அழியாப் பொருள்
पत्थरचटा - पु० ஒரு வகைப் புல்; மீன்; பாம்பு; கஞ்சன்

पत्नी - स्त्री० மனைவி; முறைப்படி மணந்தவள்
पत्र - पु० இலை; செய்தித்தாள், தினசரிப் பத்திரிகை; —कार - பத்திரிகை நிருபர்; பத்திரிகை நடத்துபவர்; —पुष्प - சம்மானம்; சிறு அன்பளிப்பு; —व्यवहार - கடிதப் போக்கு வரத்து
पत्रा - पु० பஞ்சாங்கம்
पत्रिका - स्त्री० கடிதம்; பத்திரிகை; செய்தித் தாள்
पत्री - स्त्री० கடிதம்; தானியங்களின் முளை; पु० அம்பு; மரம்; பறவை
पथ - पु० வழி; —कर - சுங்கவரி; —गामी, चारी - வழிப்போக்கன்
पथराना - अ० உலர்ந்து கெட்டியாகி விட; புதுமை போய் விட; ஸ்தம்பிக்க
पथरी - स्त्री० சாணைக்கல்; மூத்திர வியாதி; கற் சட்டி
पथरीला - वि० கற்கள் நிரம்பிய
पथिक - पु० வழிப்போக்கன்
पद - पु० பதவி; பாதம்; கால்ச் சுவடு; —चर - கால் நடையாய்ச் செல்பவன்; —च्छेद - பதம் பிரித்தல்; —च्युत - பதவியிலிருந்து

விலக்கப் பட்ட ; —त्याग - வேலையை ராஜிநாமா செய்தல் ; —त्राण - செருப்பு ; —दलित - நசுக்கப் பட்ட ; அமுக்கப்பட்ட

**पदक** - पु० மெடல் ; பதக்கம்

**पदवी** - स्त्री० பட்டம் ; பதவி

**पदाधिकारी** - पु० உத்தியோகஸ்தன் ; மேலதிகாரி

**पदाना** - स० துன்புறுத்த ; தொந்தரவு கொடுக்க ; ஓடச்செய்ய

**पदार्पण** - पु० விஜயம் செய்தல் ; வருகை தருதல்

**पदावली** - स्त्री० கீர்த்தனங்கள்

**पदेन** - अव्य० பதவியின்காரணமாக

**पद्धति** - स्त्री० முறை ; வழி

**पद्म** - पु० தாமரை ; நவநிதிகளில் ஒன்று

**पद्मराग** - पु० மாணிக்கம்

**पद्य** - पु० கவிதை

**पधारना** - अ० எழுந்தருள ; வருகை தர

**पन** - पु० வாக்குத்தத்தம் ; தன்மையைக் குறிக்கும் விகுதி उदा० पागलपन

**पनकपड़ा** - पु० காயத்தின் மேல் கட்டப்படும் நீரில் நனைத்த துணி

**पनकाल** - पु० மழை மிகுதியால் ஏற்படும் பஞ்சம்

**पनघट** - पु० நீர்த் துறை

**पनच** - स्त्री० வில்லின் நாண்

**पनचक्की** - स्त्री० தண்ணீர் மோதுவதால் சுற்றும் இயந்திரம்

**पनडुब्बा** - पु० நீரில் மூழ்குபவன் ; மீன்கொத்திப் பறவை

**पनडुब्बी** - स्त्री० நீர் மூழ்கிக் கப்பல்

**पनपना** - अ० செழிப்படைய ; முன்னேற ; வளர ; நன்நிலை அடைய

**पनबट्टा** - पु० வெற்றிலைப் பெட்டி

**पनवाड़ी** - पु० வெற்றிலைத் தோட்டம் ; வெற்றிலை வியாபாரி

**पनस** - पु० பலாப்பழம்

**पनसारी** - पु० दे० पंसारी

**पनसेरी** - स्त्री० दे० पंसेरी

**पनहा** - पु० துணி, சுவர் முதலியவற்றின் அகலம் ; கருத்து ; துப்பறிபவன்

**पनहारा** - पु० தண்ணீர் நிரப்பும் வேலையாள் (स्त्री० पनहारिन)

**पनही** - स्त्री० செருப்பு

**पना** - पु० மாம்பழம், புளியம் பழம் முதலியவைகளிலி ருந்து தயாரிக்கப்படும் சர்பத்து அல்லது ரசம்

**पनाला** - पु० दे० **परनाला**

**पनाह** - स्त्री० அடைக்கலம்; புகலிடம்

**पनिहा** - वि० நீரில் வாழ்கிற; நீர் கலந்த

**पनीर** - पु० பாலாடைக் கட்டி; நீர் இறுத்த தயிர்

**पनीरी** - स्त्री० செடிகளின் நாற்று

**पनीला** - वि० நீர் கலந்த

**पनीहा** - पु० நீர்வாழ் பிராணி; நீரிலிருந்து உண்டாகும் பொருள்

**पन्नग** - पु० பாம்பு; மரகதம்

**पन्नगारि** - पु० கருடபட்சி

**पन्ना** - पु० மரகதம்; புத்தகம் முதலியவற்றின் ஒரு தாள்; ஒரு பட்டணம்

**पन्नी** - स्त्री० ஜிகினுத் தகடு; **—साज** - ஜிகினு வேலை செய்பவன்

**पपड़ा** - पु० } **पपड़ी** - स्त्री० } ரொட்டி முதலியவற்றின் மேலே இருக்கும் பொருக்கு; மரப்பட்டை

**पपनी** - स्त्री० **पलक** இமை

**पपीता** - पु० பப்பாளிப் பழம்

**पपीहा** - पु० சாதகப் பறவை

**पपैया** - पु० दे० **पपीता**; **पपीहा**

**पपोटा** - पु० கண்ணிமை

**पपोलना** - अ० பொக்கை வாயைக் குதப்ப

**पब्बय** - पु० மலை

**पय** - पु० பால்; நீர்

**पयद** - दे० **पयोद**

**पयस्विनी** - स्त्री० பசு; நதி

**पयान** - पु० பிரயாணம்; செல்கை

**पयाम** - पु० தூது; செய்தி

**पयार** } **पयाल** } पु० வைக்கோல்

**पयोद** - पु० மேகம்; முகில்

**पयोधर** - पु० கொங்கை; மேகம்; குளம்; மலை

**पयोधि** } **पयोनिधि** } पु० கடல்

**परंच** - अव्य० இன்னமும்; இருந்தபோதிலும்; ஆனல்

**परंतप** - वि० பகைவர்களை வருத்துகிற; புலன்களை வென்ற

**परंतु** - अव्य० ஆனல்

**परंदा** - पु० दे० **परिंदा**

**परंपरा** - स्त्री० பரம்பரை; வழக்கம்

**परंपरागत** - वि० பரம்பரையாய் நடக்கிற; சநாதனமான

**पर - वि०** பிறருடைய ; **अव्य०** ஆனால் ; மேல் ; **पु०** சிறகு; **—कट जाना -** வலி குன்றிப் போக

**परकटा - वि०** சிறகொடிந்த

**परकना - अ०** பழக்கம் ஏற்பட ; அசைய ; கூட

**परकाजी - वि०** பிறர்க்கு உதவி செய்கிற

**परकाना - स०** பழக்கம் ஏற் படுத்த

**परकर** } **परकाल** } **पु०** வட்டம் வரையும் கருவி

**परकाला - पु०** ஏணி; நிலைப்படி; தீப்பொறி ; கண்ணாடித் துண்டு ; **आफ़त का परकाला -** பேராபத்து விளைவிக்கக் கூடியவன்; பயங்கரமான வன்

**परकास - पु० दे० प्रकाश**

**परकासना - स०** பிரகாசிக்க ; வெளிப்படுத்த

**परकीय - वि०** பிறரைச் சேர்ந்த

**परकीया - स्त्री०** பிறன் மனை யாள் ; கணவனை விட்டு வேறொருவனிடம் கள்ளக் காதல் கொண்டாடுபவள்

**परकोटा - पु०** கோட்டைச் சுவர்

**परख - स्त्री०** சோதனை ; அடை யாளம் ; ஆராய்ச்சி

**परखना - स०** ஆராய ; சோ திக்க ; வரவை எதிர்ப் பார்க்க ; சரண் வேண்ட

**परखैया** } **परखवैया** } **पु०** ஆராய்பவன் ; பரீட்சை செய் பவன்

**परगन** } **परगना** } **पु०** பல கிராமங்கள் அடங்கிய பகுதி

**परघनी - स्त्री०** அச்சு ; வார்ப்பு

**परचना - अ० दे० परकना**

**परचा - पु०** காகிதத் துண்டு ; கடிதம் ; விளம்பரம் ; அறிமுகம்

**परचून - पु०** அரிசி, பருப்பு முத லிய மளிகைச் சாமான்

**परचूनी - पु०** மளிகைக் கடைக் காரன் ; **स्त्री०** மளிகைத் தொழில்

**परछना - स०** ஆலத்தி எடுத்து திருஷ்டி கழிக்க

**परछाईं - स्त्री०** நிழல் ; பிரதிபிம் பம் ; **—से डरना -** எடுத்த தற்கெல்லாம் பயப்பட

**परछिद्र - पु०** பிறருடைய குற் றங்கள்

**परजवट - पु०** வரி ; நிலவரி ; வாடகை

**परजौट - पु०** குத்தகை முறை ; குத்தகைத் தொகை

**परतंत्र - वि०** பிறருக்குக் கீழ்ப் பட்ட ; அடிமையான

**परत** - स्त्री० மடிப்பு

**परतला** - पु० வாளுரையுடன் கூடிய பட்டி அல்லது பெல்டு

**परती** - स्त्री० தரிசு நிலம்; தானியத்தைத் தூற்றப் பயன் படும் முறம்

**परत्व** - पु० பிறருடையதாயிருத்தல்

**परथन** - पु० ரொட்டி அல்லது அப்பளம் இடும்பொழுது தொட்டுக் கொள்ளும் மாவு

**परदा** - पु० பெண்களை அந்தப்புரத்தில் வைத்திருக்கும் வழக்கம்; மறைவு; திரை; படுதா; **—दार, नशीन** - படுதா மறைவில் வசிக்கிற; **—पोशी** - குற்றங்களை மறைத்தல்; **—फ़ाश** - குட்டு வெளியாதல்; குற்றம் வெளிப்படல்

**परदाज़** - पु० அலங்காரம்; பூவேலை; திருத்தம்

**परदाज़ी** - स्त्री० அலங்கரிக்கும் வேலை; பூவேலை செய்தல்

**परदादा** - पु० கொள்ளுப்பாட்டன் (தகப்பன் வழி)

**परदेश** - पु० அயல்நாடு

**परदेशी** - वि० அயல் நாட்டு

**परधाम** - पु० வைகுண்டம்

**परनाला** - पु० சாக்கடை

**परपंचक** / **परपंची** - वि० சண்டையிடுகிற; துஷ்டனான; வஞ்சகனான

**परपट** - पु० சமபூமி; மைதானம்

**परपराना** - अ० எரிச்சலெடுக்க

**परपाजा** - पु० दे० **परदादा**

**परपीड़क** - पु० பிறருக்குத் துன்பம் விளைவிப்பவன்

**परपोता** - पु० दे० **पड़पोता**

**परमधाम** / **परमपद** - पु० வைகுண்டம்; மோட்சம்

**परमान** - पु० பிரமாணம்; அளவு; எல்லை

**परमार्थी** - वि० உண்மையைத் தேடுகிற; முக்தியை நாடுகிற

**परला** - वि० அந்தப் பக்கத்திய; அடுத்த பக்கத்து; **परले पार होना** - கடைசி எல்லையை அடைய; முடிவடைய

**परवर** - पु० दे० **परवल**; वि० காப்பாற்றுகிற

**परवरदा** - वि० வளர்க்கப்பட்ட

**परवरदिगार** - पु० வளர்ப்பவன்; கடவுள்

**परवरिश** - स्त्री० காப்பாற்றுதல்; பேணி வளர்த்தல்

**परवल** - पुं० கோவைக்காய் போன்ற ஒரு காய்
**परवस्ती** - स्त्री० दे० **परवरिश**
**परवा** - स्त्री० பொருட்படுத்துதல்; விருப்பம்; கவலை; அக்கறை; பிரதமை
**परवानगी** - स्त्री० அனுமதி; மதிப்பு; உத்தரவு
**परवाना** - पुं० அனுமதிச் சீட்டு; விளக்குப் பூச்சி
**परवाह** - स्त्री० दे० **परवा**
**परवेज़** - पुं० வெற்றிகொண்டவன்
**परशु** - पुं० கோடரி; ஆயுதம்
**परसना** - स० தொட; பரிமாற
**परसाल** - पुं० சென்ற வருஷம்; வரும் வருஷம்
**परसों** - पुं० முந்தாநாள்; நாளை மறுநாள்
**परस्तिश** - स्त्री० பூஜை; —**गाह** - பூஜை செய்யுமிடம்
**परस्पर** - वि०, क्रि० தமக்குள்; ஒன்றுக்கொன்று; பரஸ்பரம்
**परहरना** - स० தியாகம் செய்ய
**परहेज़** - पुं० பத்தியம்; விலக்கு; —**गार** - பத்தியம் இருப்பவன்; குற்றங்களிலிருந்து விலகியிருப்பவன்
**परहेलना** - स० அவமதிக்க
**पराँठा** - पुं० **परौठा** நெய் தடவிச் சுடப்படும் சப்பாத்தி
**पराकाष्ठ** - स्त्री० கடைசி எல்லை; முடிவிடம்; உயர்வின் உச்சாணி இடம்
**पराक्रम** - पुं० பலம்; ஆண்மை
**पराक्रमी** - वि० பலமுள்ள; தைரியமுள்ள
**पराग** - पुं० மகரந்தம்; —**केसर**- பூத்தாது
**पराजय** - स्त्री० தோல்வி
**पराजित** - वि० தோற்கடிக்கப்பட்ட
**परात** - स्त्री० தாம்பாளம்
**परादन** - पुं० அரபிக் குதிரை
**पराधीन** - वि० பிறருக்கு அடிமையான
**पराना** - अ० ஓட; ஓடி ஒளிய
**पराभव** - पुं० தோல்வி; இகழ்ச்சி; அவமானம்
**पराभूत** - वि० தோற்கடிக்கப்பட்ட; அவமதிக்கப்பட்ட; நஷ்டமடைந்த
**परामर्श** - पुं० எண்ணம்; ஆலோசனை; யுக்தி
**परायण** - वि० ஈடுபட்ட; ஆழ்ந்த
**परायतत** - वि० दे० **पराधीन**
**पराया** - वि० பிறருடைய
**परास्त** - वि० தோற்கடிக்கப்பட்ட

**पराह्न** - पु० பிற்பகல்
**परिंदा** - पु० பறவை
**परिकथा** - स्त्री० உபகதை
**परिकर** - पु० பரிவாரம்; பணியாட்களின் கூட்டம்; தொடக்கம்; உதவியாளர்
**परिक्रम** - पु०
**परिक्रमा** स्त्री०
**परिक्रमण** - पु० } பிரதக்ஷிணம்; வலம் வருதல்
**परिखा** - स्त्री० அகழி
**परिखान** - स्त्री० வண்டிச்சுவடு
**परिगणन** - पु०
**परिगणना** - स्त्री० } எண்ணிக்கையில் சேர்த்தல்; ஏற்றுக்கொள்ளல்; மதித்தல்
**परिगत** - वि० சூழப்பட்ட; முற்றிலும் நிறைந்த; அறியப்பட்ட; அடையப்பட்ட; இறந்த
**परिगह** - पु० தோழர்; அண்டியிருப்பவர்
**परिगृहीत** - वि० ஒப்புக்கொண்ட; ஏற்கப்பட்ட; அடையப்பட்ட
**परिग्रह** - पु० பெறுதல்; விவாகம்; சூழப்படல்; தண்டனை
**परिघ** - पु० தடி; ஈட்டி; தடை; இரும்புத்தண்டு; நாசம்
**परिचय** - पु० அறிமுகம்; ஒன்று சேர்த்தல்; —**पत्र** - அறிமுகக் கடிதம்
**परिचर** - पु० வேலைக்காரன்; நோயாளிகளைக் கவனிப்பவன் (**स्त्री० परिचरी**)
**परिचर्या** - स्त्री० சேவை; தொண்டு; சிகிச்சை
**परिचायक** - पु० அறிமுகப்படுத்துபவன்; **वि०** அறிமுகப்படுத்துகிற
**परिचार** - पु० தொண்டு
**परिचारक** - पु० दे० **परिचर**
**परिचारिका** - स्त्री० வேலைக்காரி
**परिचालक** - पु० நடத்துபவன்
**परिचालन** - पु० நடத்துதல்
**परिचालित** - वि० நடத்தப்பட்ட
**परिचित** - वि० தெரிந்த; பழகிய; அறிமுகமான
**परिच्छद** - पु० மூடி; உடை; அரசனின் மெய்க்காவலன்
**परिछिन्न** - वि० எல்லையில் அடங்கிய; பிரிக்கப்பட்ட
**परिच्छेद** - पु० பிரிவு; அத்தியாயம்; புத்தகப் பகுதி
**परिछाहीं** - स्त्री० दे० **परछाईं**
**परिजन** - पु० பரிவாரம்; வீட்டு வேலைக்காரன்
**परिज्ञान** - पु० நிறைந்த அறிவு

**परिणत** - वि० வணங்கிய; மாறிய; ஜீர்ணமான

**परिणति** - स्त्री० மாறுதல்; கடைசிநிலைமை; விளைவு; முடிவு

**परिणय** - पु० விவாகம்

**परिणाम** - पु० மாறுதல்; விளைவு; முடிவு

**परिणीत** - वि० விவாகமான; முடிந்த

**परिणीता** - स्त्री० மணமானவள்

**परिताप** - पु० சூடு; துக்கம்; பச்சாத்தாபம்

**परितुष्ट** - वि० பூரண திருப்தியான; சந்தோஷமான; மகிழ்வுற்ற

**परितोष** - वि० பூரண திருப்தி; சந்தோஷம்; மகிழ்ச்சி

**परित्यक्त** - वि० விடப்பட்ட; விலக்கப்பட்ட

**परित्याग** - पु० விட்டு விடுதல்

**परित्याज्य** - वि० விட்டு விடத் தக்க; ஒழிக்கத் தகுந்த

**परित्राण** - पु० தப்பித்தல்; காப்பாற்றுதல்; அடைக்கலம்

**परिधान** - पु० ஆடை; ஆடையணிதல்; நாற்புறமும் சூழ்ந்திருத்தல்

**परिधि** - स्त्री० சுற்றளவு; மண்டலம்; துணி; வேலி

**परिपक्व** - वि० நன்றாய்ப் பக்குவமான; நன்றாய் ஜீர்ணமான; திறமை வாய்ந்த

**परिपंथी** - पु० பகைவன்; वि० வழி மறிக்கிற

**परिपाक** - पु० நல்ல சமையல்; நன்கு பக்குவமடைதல்; ஜீர்ணமாதல்; திறமை

**परिपाटी** - स्त्री० நியமம்; முறை; வழிமுறை; புள்ளியல்

**परिपुष्ट** - वि० நன்றாய்ப் போஷிக்கப்பட்ட; நன்றாய் வலுவடைந்த

**परिपूर्ण** - वि० முழுவதும் நிரம்பிய

**परिपोषण** - पु० நன்கு வளர்த்தல்; வலுவடையச் செய்தல்; பராமரிப்பு

**परिप्लुत** - वि० முழுகிய; நனைந்த पु० பாய்ச்சல்

**परिभव** / **परिभाव** - पु० அவமரியாதை; தோல்வி

**परिभाषा** - स्त्री० விளக்க உரை; அறிமுகக் குறிப்பு; குறிச்சொல்

**परिभूत** - वि० தோற்ற; அவமதிக்கப்பட்ட

**परिमर्ष** - पु० பொறுமை; கோபம்

**परिमल** - पु० வாசனை; நறுமணம்

**परिमाण** - पुं० அளவு; நிறுவை; சுற்றளவு

**परिमार्जन** - पुं० அலம்புதல்; அழகு செய்தல்; சுத்தம் செய்தல்

**परिमार्जित** - वि० கழுவப்பட்ட; அழகாக்கப்பட்ட; சுத்தமாக்கப்பட்ட; குற்றம் நீங்கிய

**परिमित** - वि० எல்லையில் அடங்கிய; ஏற்றத் தாழ்வு இல்லாத; குறைந்த

**परिमिति** - स्त्री० அளவு; நிறுவை; எல்லை

**परिमेय** - वि० அளக்கக்கூடிய; நிறுக்கக் கூடிய; கட்டுக்கடங்கிய

**परिरंभ** / **परिरंभण** - पुं० அணைத்துக் கொள்ளல்; தழுவுதல்

**परिरक्षण** - पुं० மேற்பார்வை; பாதுகாப்பு; வளர்ப்பு

**परिवर्तन** - पुं० மாறுதல்

**परिवर्तित** - वि० மாற்றப்பட்ட

**परिवर्ती** - वि० மாறும் சுபாவமுள்ள; மாற்றுகிற

**परिवर्द्धन** - पुं० விருத்தி; மேன்மை; ஆக்கம்

**परिवा** - स्त्री० பிரதமை

**परिवाद** - पुं० நிந்தனை; பொய்க் குற்றம் சாற்றுதல்; அபவாதம்

**परिवार** - पुं० குடும்பம்; குலம்; சட்டம்

**परिवृत** - वि० மூடப்பட்ட; சூழப்பட; முடிந்த; पुं० தழுவுதல்; நழுவுதல்

**परिवेद** - पुं० உண்மையறிவு

**परिवेष** / **परिवेषण** - पुं० சுற்றுச் சுவர்; கோட்டைச் சுவர்

**परिवेष्टन** - पुं० நாலா புறமும் சூழ்தல்; சுற்றிக்கொள்ளுதல்

**परिव्राज** / **परिव्राजक** - पुं० சன்னியாசி; துறவி

**परिशिष्ट** - वि० மிஞ்சிய; पुं० அனுபந்தம்

**परिशीलन** - पुं० ஆழ்ந்து படித்தல்; ஆராய்தல்

**परिशोध** - पुं० பூர்ண சுத்தி; நன்கு ஆராய்தல்; பூராக் கடன் தீர்ப்பு

**परिश्रम** - पुं० உழைப்பு; களைப்பு; ஆயாசம்

**परिश्रमी** - वि० உழைக்கிற

**परिश्रांत** - वि० மிகவும் களைத்த

**परिषद्** / **परिषद** - स्त्री० சபை; சமூகம்; पुं० அங்கத்தினர்

**परिष्कार** - पुं० சுத்தப் படுத்துதல்; சீர்படுத்துதல்

**परिष्कृत** - **वि०** சுத்தமாக்கப் பட்ட ; சீர்படுத்தப்பட்ட
**परिस्तान** - **पु०** கந்தர்வ லோகம்
**परिस्फुट** - **वि०** வெளிப்படையான ; நன்ருய் மலர்ந்த
**परिहरण** - **पु०** பலாத்காரமாய்ப் பிடுங்கிக் கொள்ளுதல் ; விட்டு விடுதல்
**परिहार** - **पु०** பரிகாரம்;மாற்று; விட்டு விடுதல் ; இகழ்ச்சி
**परिहास** - **पु०** சிரிப்பு ; கேலி
**परी** - **स्त्री०** கந்தர்வப் பெண் ; மிகவும் அழகானவள் ; —**जाद** - **वि०** மிக அழகான
**परीक्षक** - **पु०** பரீக்ஷை செய்பவன்
**परुष** - **वि०** கொடூரமான
**परे** - **पु०** அந்தப் பக்கம் ; **अव्य०** வெளியே ; மேலே; பிறகு
**परेई** - **स्त्री०** பெண் புரு
**परेखना** - **स०** சோதிக்க ; ஆராய
**परेवा** - **स्त्री०** ஆண் புரு ; தபால் சேவகன்
**परेशान** - **वि०** குழப்பமான ; திகிலடைந்த
**परेशानी** - **स्त्री०** குழப்பம்; திகில்
**परोक्ष** - **पु०** கண்களுக்குப் புலப்படாத ; அறியப் படாத ; மறைந்திருக்கிற
**परोसना** - **स०** பரிமாற
**परोसा** - **पु०** எடுப்புச் சாப்பாடு ; உறவினர் அல்லது தோழருக்கு அனுப்பப் படும் சாப்பாடு
**परौठा** - **पु०** **दे०** **पराँठा**
**पर्जन्य** - **पु०** மேகம் ; முகில் ; இந்திரன் ; விஷ்ணு
**पर्ण** - **पु०** இலை ; ஆலிலை
**पर्णकुटी** / **पर्णशाला** } **स्त्री०** குடிசை
**पर्यंक** - **पु०** கட்டில்
**पर्यंत** - **अव्य०** **तक** வரைக்கும்
**पर्यटन** - **पु०** சுற்றுதல் ; அலைதல் ; பிரயாணம்
**पर्यवसान** - **पु०** முடிவு ; விளைவு
**पर्याप्त** - **वि०** போதுமான
**पर्याय** - **पु०** ஒரே பொருளுள்ள சொல் ; வரிசை ; —**वाची** - ஒரே பொருளைத் தெரிவிக்கிற
**पर्यालोचन** - **पु०** / **पर्यालोचना** - **स्त्री०** } முழுவதும் நன்கு ஆராய்தல் ; தீர விசாரித்தல்
**पर्युपासन** - **पु०** சேவை ; தொண்டு ; உபாசனை
**पर्व** - **पु०** புண்ணிய காலம் ; திருவிழா ; பங்கு ; அத்தியாயம்
**पर्वत** - **पु०** மலை

**पर्वतीय** - वि० மலை நாட்டு
**पलंका** - स्त्री० வெகு தூரத்திய இடம்
**पलंग** - पु० கட்டில்
**पलंगपोश** - पु० கட்டில் விரிப்பு
**पलंगिया** - स्त्री० சிறு கட்டில்
**पल** - पु० நிமிஷம்; க்ஷணம்
**पलक** - स्त्री० கண் இமை; கணம்; —**बिछाना** - ஆதரவுடன் எதிர்கொண்டழைக்க; —**मारना** - கண் ஜாடை காட்ட; இமை கொட்ட; —**लगना** - தூக்கம் வர; —**दरिया** - वि० உதார குணமுள்ள
**पलका** - पु० கட்டில்
**पलटन** - स्त्री० சேனை; சேனையின் ஒரு பகுதி
**पलटना** - अ० புரள; மாற; திரும்ப; स० புரட்ட; திருப்பித்தர; மாற்ற
**पलटा** - पु० மாறுதல்; சிறு துடுப்பு; படகோட்டி உட்காருமிடம்; —**खाना** - நிலைமாற; —**लेना** - திருப்ப; திரும்பப் பெற; பழி வாங்க
**पलटाना** - स० திருப்பித்தர; மாற்ற
**पलड़ा** - पु० தராசுத் தட்டு
**पलथी** - स्त्री० சப்பளம்; —**मारकर बैठना** - சப்பளம் போட்டு உட்கார
**पलना** - अ० வளர்க்கப்பட; வலிவுபெற; தயாராக
**पलवाना** - स० வளர்க்கச் செய்ய; வளரவிட
**पलल** - पु० மாமிசம்; பிண்ணாக்கு
**पलवार** / **पलवारा** } पु० பெரிய படகு
**पलस्तर** - पु० காரைப்பூச்சு; பிளாஸ்திரி
**पलाना** - अ० ஓட; स० ஓட்ட; விரட்ட
**पलायन** - पु० ஓடுதல்; ஒளிதல்
**पलायमान** - वि० ஓடிக்கொண்டிருக்கிற
**पलायित** - वि० ஓடிவிட்ட
**पलाल** - पु० வைக்கோல்; சாரமற்றது
**पलाश** / **पलास** } पु० புரச மரம்; பலாச மரம்
**पलित** - वि० கிழமான; நரைத்த
**पलो** - स्त्री० கரண்டி; அகப்பை
**पलीत** - पु० பிசாசு; பூதம்; वि० அழுக்கான
**पलीता** - पु० திரி; वि० மிகக் கோபமான
**पलीद** - पु० பூதம்; वि० அசுத்தமான; அசிங்கமான

पलुआ - वि० வளர்க்கப்பட்ட

पलोटना - स० காலைப் பிடிக்க ; अ० துடிக்க

पल्लव - पु० கொழுந்து ; தளிர்

पल्लवित - वि० துளிர்த்த

पल्ला - पु० தூரம் ; தராசுத் தட்டு; வேஷ்டித் தலைப்பு; —छुड़ाना - தொடர்பை நீக்கிக்கொள்ள; —पड़ना - கிடைக்க ; பெற ; —पकड़ना - அடைக்கலம்புக ; —बाँधना - பொறுப்பில் விடப்பட ; —भारी रहना - ஒருவனுடைய கட்சி பலமாக இருக்க

पल्ली - स्त्री० சிறு கிராமம் ; குடிசை

पल्लेदार - पु० தானியம் சுமந்து செல்பவன் ; தானியம் அளப்பவன்

पवन - पु० காற்று ; சுவாசம் ; —चक्र - சுழற்காற்று ; சூறுவளி ; —चक्की - காற்றுடி யந்திரம்

पवाँरना } पवारना } स० எறிய ; தள்ள ; வீழ்த்த

पवाना - स० உண்ணச் செய்ய; ரொட்டி செய்விக்க

पवि - पु० இடி ; மின்னல்

पवित्र - वि० தூய்மையான ; பரிசுத்தமான

पशम - स्त्री० மிருதுவான கம்பளி; துச்சமான பொருள்

पशमीना - पु० மிருதுவான ரோமத்தால் நெய்த கம்பளம்

पशु - पु० மிருகம் ; விலங்கு ; பிராணி

पशुता - स्त्री० மிருகத்தன்மை

पश्चात् - अव्य० பின்னுல் ;பிறகு

पश्चात्ताप - पु० கழிவிரக்கம் ; பச்சாத்தாபம்

पश्चिम - पु० மேற்கு

पश्चिमी - वि० மேற்கு திசையைச் சேர்ந்த ; மேல்நாட்டு

पश्चिमोत्तर - पु० வடமேற்கு

पश्तो - स्त्री० ஆப்கானியர்கள் பேசும் மொழி

पसँघा - पु० தராசுக்கு எடை கட்டும் பொருள் ; தராசு முள்ளின் அசைவு; वि० மிகவும் குறைவாக ; —भी न होना-மிகவும் இழிவாகக் கருதப்பட

पसंद - वि० பிரியமான ; மனதுக்குப்பிடித்த

पसंदीदा - वि० பிரியப்பட்ட

पस - अव्य० பிறகு ; கடைசியில் ; அதனுல்

**पसर** - पुं० உள்ளங்கை கொள்ளும் அளவு ; பரப்பு

**पसरना** - अ० பரவ ; கால் நீட்டிப் படுக்க

**पसरहट्टा** - पुं० பலசரக்குக் கடைத் தெரு

**पसराना** - स० பரப்பச் செய்ய

**पसली** - स्त्री० விலா எலும்பு

**पसाउ** - पुं० அருள் ; பிரசாதம் ; கிருபை ; அநுக்கிரகம்

**पसाना** - स० கஞ்சி வடிக்கப் பட **अ०** சந்தோஷப்பட

**पसार** - पुं० பரப்பு ; விஸ்தீரணம் ; மாயா ஜாலம்

**पसारना** - स० பரப்ப

**पसाव** / **पसावन** - पुं० கஞ்சி

**पसीजना** - अ० மனம் உருக ; வியர்க்க

**पसीना** - पुं० வியர்வை

**पसूजना** - स० தைக்க

**पसेरी** - स्त्री० ஐந்து சேர் நிறுவை

**पसेव** - पुं० வியர்வை; பொருள்களிலிருந்து எடுத்த ரசம்

**पसोपेश** - पुं० முன்பின் யோசனை ; தயக்கம்

**पस्त** - वि० தோற்ற ; களைத்த; **—क़िस्मत** - துர்பாக்கியசாலி ; **—हिम्मत** - பயந்த

**पहचान** - स्त्री० அடையாளம் ; பரிசயம் ; அறிமுகம்

**पहचानना** - स० தெரிந்து கொள்ள

**पहटना** - अ० இடித்துத்தள்ள ; கூர்தீட்ட

**पहटा** - पुं० பரம்படிக்கும் பலகை

**पहनना** / **पहिनना** - स० அணிய ; உடுத்திக் கொள்ள

**पहनाई** - स्त्री० அணிவித்தல் ; அதன் கூலி

**पहनाना** - स० உடுத்த ; அணிவிக்க

**पहनाव** / **पहनावा** - पुं० ஆடை ; ஆடை அணியும் முறை

**पहर** - पुं० ஜாமம் ; மூன்று மணி நேரம்

**पहरना** - स० दे० पहनना

**पहरा** - पुं० பாரா ; காவல் ; நேரம்

**पहरावनी** - स्त्री० சிறியவருக்கு அன்பளிப்பாகக் கொடுக்கும் ஆடை

**पहरी** / **पहरू** - पुं० காவற்காரன்

**पहल** - पुं० காரிய ஆரம்பம் ; பக்கம் ; பஞ்சுப்பட்டை

**पहलवान** - पुं० பயில்வான் ; குஸ்தி பிடிப்பவன்

**पहला** - वि० முதலாவது

**पहलू** - पु० விலாப்பக்கம்; பக்கம்; பகுதி

**पहले** - क्रि० முதலில்; —**पहल** - முதன் முதலாக; எல்லா வற்றிற்கும் முதலில்

**पहलौंठा** | **पहलौठा** - त्रि० முதலில் பிறந்த; தலைச்சன்; (பையன்)

**पहाड़** - पु० மலை; —**उठाना** கஷ்டமான காரியத்தை ஏற்றுக் கொள்ள; —**टूट पड़ना**-எதிர்பாராத விபத்து நேர; பெரிய ஆபத்தில் சிக்கிக்கொள்ள; —**से टक्कर लेना** - வலியவனோடு போரிட

**पहाड़ा** - पु० பெருக்கல் வாய்பாடு; எண் வாய்பாடு; —**घोखना** - வாய்பாடு நெட்டுருப்பண்ண

**पहाड़िया** | **पहाड़ी** - वि० மலை நாட்டைச் சேர்ந்த; மலைவாசி; स्त्री० சிறியமலை; குன்று

**पहारू** - पु० दे० **पाहरू**

**पहिचान** - स्त्री० दे० **पहचान**

**पहित** | **पहिती** - स्त्री० வெந்த பருப்பு

**पहियाँ** - अव्य० அருகே; சமீபத்தில்

**पहिया** - पु० சக்கரம்

**पहिरावनी** - स्त्री० दे० **पहनावा**

**पहिले** - क्रि० दे० **पहले**

**पहीत** - स्त्री० பருப்பு

**पहुँच** - स्त्री० எட்டும் தூரம்; பிரவேசம்; வந்து சேர்ந்த தகவல்; வருகை; ரசீது

**पहुँचना** - अ० போய்ச் சேர; எட்ட

**पहुँचा** - पु० மணிக்கட்டு

**पहुँचाना** - स० சேர்ப்பிக்க

**पहुँची** - स्त्री० மணிக்கட்டில் அணியும் ஆபரணம்

**पहुना** - पु० दे० **पाहुना**

**पहुनाई** - स्त्री० விருந்துபசாரம்; விருந்து

**पहुमी** - स्त्री० பூமி; நிலம்

**पहेली** - स्त्री० புதிர்; விடுகதை

**पाँक** - पु० **कीचड़** சேறு

**पाँख** - पु० சிறகு; மழை பெய்வதற்கு முன்பு வீசும் காற்று

**पाँखी** - स्त्री० விட்டில் பூச்சி; பறவை

**पाँखुरी** - स्त्री० दे० **पंखड़ी**

**पांगुर** - वि० நொண்டியான

**पाँच** - वि० ஐந்து

**पाँजना** - स० சங்கிலி கோக்க

**पाँजर** - पु० दे० **पंजर**

**पांजी** - स्त्री० நடந்து கடக்கும் அளவுக்கு நதியின் நீர் வற்றிப்போதல்

**पांडु** - पुं० வெண்மை; பித்த பாண்டு என்னும் நோய்; वि० வெளுத்த

**पाँडुलिपि** - स्त्री० கையெழுத்துப் பிரதி

**पांडे** - पुं० புலவர்; வித்துவான்; வட இந்திய பிராம்மணர்; காயஸ்தர்களின் ஒரு பிரிவு

**पांतर** - पुं० பாழ்இடம்; மக்கள் வாழாத பகுதி

**पाँति** - स्त्री० पंक्ति வரிசை

**पांथ** - पुं० வழிப்போக்கன், யாத்திரிகன்; --निवास, शाला - சாவடி; சத்திரம்

**पाँय** - पुं० பாதம்; கால்

**पाँयचा** - पुं० கக்கூஸில் கால் வைக்கும் இடம்; பைஜாமாவின் அடிப்பாகம்

**पाँयता** - पुं० पायँता கட்டிலின் கால்மாடு; முட்டாள்; பாபி

**पाँव** - पुं० पाँव கால்; பாதம்; —पाँव - கால் நடையாய்

**पाँवरी** - स्त्री० ஏணிப்படி; படிக்கட்டு; செருப்பு; கூடம்

**पाँशु** - पुं० மண்; புழுதி; மணல்; எரு

**पाँसा** - पुं० சொக்கட்டான்; —उलटना - முயற்சி வீணாக

**पाँसुरी** - स्त्री० दे० पसली

**पाँहीं** - क्रि० दे० पास

**पाइट** - स्त्री० ஏணிச்சாரம்

**पाई** - स्त्री० தம்பிடி; கால் பங்கு

**पाक** - पुं० சமைத்தல்; சமையல்; ஜீரணம்; वि० பரிசுத்தமான; தூய —दामन - நன்னடத்தையுள்ள; குற்றமற்ற

**पाकठ** - वि० பழுத்த; அனுபவமுள்ள; வலுவான

**पाकर** - पुं० அத்திமரம்

**पाका** - वि० பழுத்த; சமைத்த; பக்காவான; पुं० புண்; கட்டி

**पाकी** - स्त्री० பரிசுத்தம்; वि० பரிசுத்தமான

**पाकीजग़ी** - स्त्री० பரிசுத்தம்

**पाकीज़ा** - वि० பரிசுத்தமான

**पाखंड** - पुं० ஏமாற்றம்; ஆடம்பரம்; பொய் நடத்தை; இழிந்த நடத்தை

**पाखंडी** - पुं० வஞ்சகன்; ஆஷாடபூதி; வேஷம் போடுபவன்

**पाख** - पुं० ஒரு பக்ஷம்; சிறகு

**पाखर** - स्त्री० கோணிப்பை; யானைக்கு அணிவிக்கும் இருப்புக்கவசம்

पाखा - पु० மூலை ; ஓரம்
पाखान - पु० கல் ; பாறை
पाख़ाना - पु० மலம் ; மலம் கழிக்குமிடம்
पाग - स्त्री० தலைப்பாகை; சர்க்கரைப் பாகு ; ஜீரா
पागना - स० ஜீராவில் தோய்த்தெடுக்க ; अ० மிகவும் நேசிக்க; அன்பில் ஈடுபட
पागल - वि० பைத்தியம் பிடித்த ; —ख़ाना - பைத்திய ஆஸ்பத்திரி ; —पन - पु० பைத்தியம் ; மூளைக்கோளாறு
पागा - पु० குதிரைக் கூட்டம்
पागुर - पु० (மிருகங்கள்) அசை போடுதல்
पाचक - वि० ஜீரண சக்தியை வளர்க்கிற
पाचन - पु० ஜீரணம்
पाछ - स्त्री० மரம் அல்லது மிருகத்தைக் கத்தியால் கீறிய காயம் ; पु० - பின்புறம் ; பின்பாகம்
पाछना - स० அம்மை குத்த ; கீற
पाछिल - वि० दे० पिछला
पाछे - वि० दे० पीछे
पाजामा - पु० நிஜார்
पाजी - पु० காலாட்படை வீரன் ; வாயிற்காப்போன் ; वि० போக்கிரியான ; துஷ்டனான
पाजेब - स्त्री० சலங்கை
पाटंबर - पु० பட்டாடை
पाट - पु० பட்டு ; சிம்மாசனம் ; அகலம் ; துணி ; பலகை
पाटच्चर - पु० திருடன்; கள்வன்
पाटन - स्त्री० கூரை ; வீட்டிலுள்ள சாமான்கள் வைக்கும் அட்டம்
पाटना - स० பள்ளத்தை நிரப்ப; நிரவ ; கூரை வேய ; கடனடைக்க ; திருப்தி செய்விக்க
पाटला - पु० உயர்ந்த தங்கம்
पाटव - पु० திறமை ; உற்சாகம்
पाटा - पु० உட்காரும் பலகை; பிரம்படிக்கும் பலகை
पाटित - वि० கூரை வேய்ந்த
पाटी - स्त्री० வழக்கம் ; நியமம்; पु० மாணவர் எழுதும் பலகை ; கட்டிலின் நீளச் சட்டம் —पढ़ना - பாடம் படிக்க ; கல்வி பெற ; —पारना - வகிடு எடுக்க
पाठ - पु० பாடம் ; படித்தல் ; —क्रम - பாடத் திட்டம் ; —शाला - स्त्री० பள்ளிக்கூடம்

**पाठक** - पुं० படிப்பவன் ; கற்பிப்பவன் ; ஆசிரியன்

**पाठन** - पुं० படிப்பித்தல்

**पाठा** - पुं० பலசாலி ; கொழுத்தவன்; கொழுத்த மிருகம்

**पाठी** - पुं० படிப்பவன்

**पाठीन** - पुं० ஒரு வகை மீன்

**पाठ्य** - वि० படிக்கத் தகுந்த ; கற்பிக்கப்படுகிற ;—**पुस्तक** - स्त्री० பாடப் புத்தகம்;—**क्रम** -பாடத்திட்டம்

**पाड़** - पुं० வேட்டியின் கரை; தூக்குமரப் பலகை ; கிணற்றை மூடிவைக்கும் மரச்சட்டம்

**पाढ़** - पुं० வயலில் காவலாளி உட்காரும் பரண்

**पाणि** - पुं० கை ; —**ग्रह, ग्रहण** - விவாகம் ; திருமணம்

**पात** - पुं० விழுதல் ; வீழ்த்துதல் ; அழிவு ; இலை

**पातक** - पुं० பெரும் பாவம் ; தீச்செயல்

**पातकी** - वि० கொடிய பாவியான

**पातर** - स्त्री० தைத்த இலை ; **वि०** மெல்லிய ; தேய்ந்த ; நுண்ணிய

**पाताया** / **पाताबा** } पुं० மேஜோடு

**पातार** / **पाताल** } पुं० பாதாள லோகம் ; குகை ; வடவாக்கினி

**पाती** - स्त्री० கடிதம் ; இலை ; மரியாதை

**पातुर** - स्त्री० வேசி ; விபசாரி

**पात्र** - पुं० பாத்திரம் ; தகுதியுள்ளவன் ; நடிகன் ; நடிகை ; இலை

**पाथ** - पुं० நீர் ; தீ ; சூரியன் ; உணவு ; ஆகாயம் ; வழி ; பாதை ; —**नाथ** - கடல்

**पाथना** - स० தட்டி அமுக்கி உருவாக்க ; செங்கல், ஓடு முதலியன தயார் செய்ய; அடிக்க

**पाथर** - पुं० दे० पत्थर

**पाथेय** - पुं० வழிச் சாப்பாடு ; கட்டுச்சோறு; வழிச் செலவு

**पाथोधि** - पुं० சமுத்திரம் ; கடல்

**पाद** - पुं० பாதம் ; சுலோகத்தில் ஒரு வரி ; கால்ப் பங்கு ; அபானவாயு ; —**टीका** - குறிப்புரை ; —**त्राण** - செருப்பு ; —**पीठ** - ஆசனம் ; கால்ப் பீடம்

**पादना** - अ० குசுவிட ; காற்று விட

**पादप** - पुं० மரம் ; உட்காரும் பலகை

पादरी - पु० கிருஸ்துவப் பாதிரி

पादपीठ - पु० உட்காரும் மணை

पादाक्रांत - वि० காலால் நசுக்கப்பட்ட ; அழிக்கப்பட்ட

पादाति } पु० காலாட்படை
पादातिक } வீரன்

पादुका - स्त्री० பாதக்குறடு

पाद्य - पु० கால் அலம்பும் நீர்

पान - पु० குடித்தல் ; வெற்றிலை ; —गोष्ठी - குடிகாரக் கூட்டம், —दान - வெற்றிலைப்பெட்டி

पाना - स० அடைய ; அனுபவிக்க ; அறிய

पानागार - पु० குடிகாரர்கள் கூடுமிடம் ; கள்ளுக்கடை

पानिप - पु० ஒளி ; நீர்மை ; அழகு

पानी - पु० நீர் ; மரியாதை ; கௌரவம்; முலாம் ; ஒளி; —का बतासा, बुलबुला - நிலையற்ற; நீர்க்குமிழி; மூட்ட; —उतरना - அவமானப்பட; —उतारना - அவமானப் படுத்த; —देना - தர்ப்பணம் செய்ய ; நீர்பாய்ச்ச ; —पानी होना - வெட்கமடைய; —पी-पीकर कोसना - நன்றுய்ச் சபிக்க ; —फेरना - நாசமாக்க ; —में आग लगाना - சண்டை மூட்ட

पानीदार - वि० துணிவுள்ள ; கௌரவமுள்ள ; ரோஷமுள்ள ; பிரகாசமுள்ள

पानीदेवा - वि० தர்பணம் செய்கிற

पानीय - पु० ஜலம் ; वि० குடிக்கத் தகுந்த ; காக்கத் தகுந்த

पाप - पु० பாவம் ; தீமை ; —मोल लेना - வேண்டுமென்றே சண்டையில் ஈடுபட

पापड़ - पु० அப்பளம்; —बेलना - கடுமையாக உழைக்க ; துன்பத்தில் வாழ்நாட்களைக்கழிக்க

पापोश - पु० செருப்பு

पाबँद - वि० கட்டப்பட்ட ; கைதியான ; கட்டுப்பாட்டிற்கு அடங்கிய

पाबँदी - स्त्री० கட்டுப்பாட்டிற்கு அடங்கியிருத்தல் ; கட்டுப்பாடு ; கைது

पाबोसी - स्त्री० பெரியோர் பாதத்தை முத்தமிடுதல்

पामर - वि० துஷ்டனான ; முட்டாளான; கீழோனான

**पामाल** - वि० காலால் நசுக்கிய; வீணான ; வீணாக்கிய

**पायँ** / **पाय** } पु० பாதம் ; கால்

**पायँता** - पु० கால் மாடு ; கால் பக்கம்

**पायंदाज** - पु० கால் மிதி

**पायक** - पु० ஓடுபவன்: தூதன்: வேலைக்காரன் ; காலாட் படை வீரன்

**पायख़ाना** - पु० दे० **पाख़ाना**

**पायजामा** - पु० நிஜார்

**पायट** - स्त्री० வீடு கட்டுவதற்குக் கட்டப்படும் 'சாரம்'

**पायतख़्त** - पु० தலைநகர்

**पायतन** - पु० கட்டிலின் கால் மாடு

**पायताबा** - पु० மேஜோடு

**पायदार** - वि० கெட்டியான ; உறுதியான

**पायमाल** - वि० दे० **पामाल**

**पायरा** - पु० குதிரைச் சவாரி செய்பவன் கால் வைத்துக் கொள்ளும் இடம்

**पायल** - स्त्री० சலங்கை

**पाया** - पु० கட்டில், மேஜை முதலியவற்றின் கால் ; கம்பம்; பதவி; படிக்கட்டு

**पायी** - वि० குடிக்கிற

**पारंगत** - वि० கரை கடந்த ; பூராவும் கற்ற ; கற்றுத் தேர்ந்த

**पार** - पु० கரை ; நதியின் அக்கரை ; —**उतरना** - வெற்றியடைய ; முடிக்க ; விடுபட ; —**करना** - நதியைக் கடக்க ; முடிக்க ; பொறுத்துக்கொள்ள ;—**पाना** - வெற்றி அல்லது விடுதலை பெற ; கரைகாண ; —**लगना** - ஆற்றைக் கடந்து செல்ல ; நிர்வாகம் செய்ய —**होना** ; வேலையைச் செய்து முடிக்க ; விடுதலையாக ;

**पारख** - स्त्री० பரீட்சை ; பரிசோதனை ; ஆராய்ச்சி

**पारखी** - पु० பரீட்சிப்பவன்

**पारग** - वि० கடந்து செல்லுகிற ; காரியத்தை நிறைவேற்றுகிற ; நன்றாய் அறிந்த ; திறமை வாய்ந்த

**पारचा** - पु० துண்டு ; பாகம் ; ஒருவிதப் பட்டுத்துண்டு

**पारद** - पु० பாதரஸம்

**पारदर्शक** - वि० ஒளி ஊடுருவிச் செல்லக்கூடிய

**पारदर्शी** - वि० முற்றிலும் கண்டறிந்த ; கரை கண்ட ; தீர்க்கதரிசியான

**पारधी** - **पु०** வேட்டையாடுபவன் ; கொலையாளி

**पारना** - **स०** போட ; அச்சில் வார்த்தெடுக்க ; தூங்கச் செய்ய ; காக்க ; வீழ்த்த; கிடத்த; **अ०** முடிய; இயல

**पारस** - **पु०** இரும்பைப் பொன்னுக்கும் சக்தியுள்ளதாகச் சொல்லப்படும் ஒரு கல் ; மிக உபயோகமுள்ள பொருள் ; பரிமாறப்பட்ட உணவு ; **क्रि०** அருகிலுள்ள

**पारसा** - **वि०** நன்னடத்தையுள்ள ; தூய்மையான

**पारसी** - **वि०** பாரசீக தேசத்திய ; **पु०** பாரசீகன்

**पारसाई** - **स्त्री०** நன்னடத்தை; தூய்மை

**पारसाल** - **पु०** சென்ற வருஷம்

**पारा** - **पु०** பாதரஸம் ; கரை ; கற்சுவர் ; **वि०** மிகப் பெரிய; எல்லாவற்றிக்கும் மேலான

**पारावत** - **पु०** புரு ; குரங்கு ; மலை

**पारावार** - **पु०** இருகரை ; கடல் ; எல்லை

**पारि** - **स्त्री०** எல்லை ; பக்கம் ; நதிக்கரை ; தேசம்

**पारितोषिक** - **पु०** வெகுமதி

**पारिभाषिक** - **वि०** அர்த்தத்தை விளக்குகிற

**पारिवारिक** - **वि०** குடும்ப சம்பந்தமான

**पारिश्रमिक** - **पु०** உழைப்புக் கூலி ; ஊதியம்

**पारी** - **स्त्री०** **बारी** முறை; யானை கட்டும் சங்கிலி

**पार्थक्य** - **पु०** தனிமை ; பிரிவு ; வேறுபாடு

**पार्थिव** - **पु०** அரசன்; **वि०** பூமி சம்பந்தமான ; பூமியிலிருந்து உண்டான

**पार्श्व** - **पु०** பக்கம் ; விலாப் பக்கம் ; **—वर्ती** - பக்கத்திலிருப்பவன்

**पार्षद** - **पु०** சபையின் உறுப்பினன் ; தொண்டன் ; அமைச்சன் ; பக்கத்திலிருப்பவன்

**पाल** - **पु०** காப்பாற்றுபவன் ; கப்பலின் பாய்மரம் ; பந்தலின் மேற்புறத்தை அழகுபடுத்தும் வண்ணத் துணி ; **स्त्री०** பழங்களை கனியவைக்கும் முறை ; மேடு ; வரப்பு ; கரை

**पालक** - **पु०** பரிபாலிப்பவன் ; சுவீகாரப் புத்திரன் ;

செம்பசலைக் கீரை; கட்டில்

**पालकी** - **स्त्री॰** பல்லக்கு

**पालतू** - **वि॰** வளர்க்கப்பட்ட

**पालन** - **पु॰** வளர்த்தல்; சொல் தவறுமை

**पालना** - **स॰** வளர்க்க; **पु॰** தொட்டில்; தூணி

**पाला** - **पु॰** பனி; தொடர்பு; நடத்தை; சேர்கை விளையாட்டில் இருதரப்பினரும் சந்திக்கும் எல்லைக்கோடு; முக்கிய இடம்; தானியக் குதிர்; —**पड़ना** - பனிபெய்ய

**पालागन** - **स्त्री॰** நமஸ்காரம்; தண்டனிடுதல்

**पालित** / **पालू** } **वि॰** வளர்க்கப்பட்ட

**पावँ** - **पु॰** பாதம்; —**अड़ाना** - அனுவசியமாகத் தலையிட; —**धरती पर न रखना** - மிகவும் கர்வப்பட; —**फूँक-फूँककर चलना** - ஒரு காரியத்தை மிகக் கவனமாகச் செய்ய; முன்னெச்சரிக்கையுடன் நடக்க; —**भारी होना** - கர்ப்பவதியாக

**पावँड़ा** - **पु॰** மரியாதைக்காக விரிக்கும் நடை பாவாடை

**पावँर** - **वि॰** துஷ்டனான; அற்பமான

**पाव** - **पु॰** கால் பங்கு; பாதம்

**पावक** - **पु॰** தீ; நன்னடத்தை; சூடு; வன்னிமரம்; **वि॰** தூய்மையாக்குகிற

**पावदान** - **पु॰** கால் வைப்பதற்கான இடம்

**पावन** - **वि॰** பரிசுத்தமான; புனிதமான; **पु॰** தீ; நீர்

**पावना** - **पु॰** கிடைக்க வேண்டிய பணம்; ஆகாரம்

**पावस** - **स्त्री॰** மழைக்காலம்

**पाश** - **पु॰** வலை; சுருக்குத் துண்டு; கட்டு

**पाशक** - **पु॰** சொக்கட்டான் ஆட்டம்

**पाशव** / **पाशविक** } **वि॰** மிருக சம்பந்தமான; மிருகத்தனமான; கொடூரமான

**पाश्चात्य** - **वि॰** மேற்குத் திசையைச் சேர்ந்த

**पाषंड** - **पु॰** **दे॰** **पाखंड**

**पाषाण** - **पु॰** கல்; **वि॰** குரூரமான; கடுமையான

**पासंग** - **पु॰** **दे॰** **पसंघा**

**पास** - **पु॰** பக்கம்; **अव्य॰** கிட்ட, பக்கத்தில்; அதிகாரத்தில்; —**न फटकना** - அருகில் கூடவராதிருக்க; —**बैठना** - தொடர்பு கொள்ள

**पासनी** - स्त्री० அன்னப் பிராசனம்; குழந்தைக்கு முதன் முதலில் அன்னமூட்டும் மங்களச் சடங்கு

**पासबान** - पु० காவலாள் ; **स्त्री०** வைப்பாட்டி

**पासा** - पु० சொக்கட்டான் ; **—पलटना** - நிலை மாற ; **—फेंकना** - அதிருஷ்டப் பரீட்சை செய்ய

**पासी** - पु० வலை வீசிப் பறவை பிடிப்பவன் ; கள் இறக்கும் ஜாதி ; **स्त्री०** சுருக்கு

**पाहन** - पु० **पत्थर** கல்

**पाहरू** - पु० காவற்காரன்

**पाहिं** - अव्य० **पास** அருகில்

**पाहि** - अव्य० காப்பாற்று !

**पाहुना** - पु० விருந்தாளி ; மருமகன்

**पाहुर** - पु० காணிக்கை ; அன்பளிப்பு

**पिंग** - वि० மஞ்சளான ; பழுப்பு நிறமான

**पिंगल** - पु० யாப்பு நூல் ; वि० மஞ்சளான

**पिंजड़ा** - पु० கூண்டு ; உடல்

**पिंजर** - पु० கூண்டு ; எலும்புக் கூடு ; தங்கம்

**पिंजरापोल** - पु० மாட்டுக் கொட்டில் ; பயனற்ற கால் நடைகளைப் பராமரிக்கக்கட்டப்படும் இடம்

**पिंड** - पु० உருண்டை ; குவியல் ; தேகம் ; சிராத்த பிண்டம் ; **—छूटना** - தொடர்பு விட்டுப் போக

**पिंडज** - पु० கர்ப்பத்திலிருந்து பிறக்கும் உயிரினங்கள்

**पिंडली** - स्त्री० கெண்டைக்கால்

**पिंडी** - स्त्री० சிறு உருண்டை ; பலிபீடம் ; கர்ஜூர் பழம்

**पिअराई** - स्त्री० மஞ்சள் நிறம்

**पिअरी** - स्त्री० விவாஹத்தில் மணமகனுக்குத் தரப்படும் மஞ்சள் நிற ஆடை

**पिउ** - पु० **पति** கணவன்

**पिक** - पु० குயில்

**पिघलना** - अ० உருக

**पिघलाना** - स० உருக்க

**पिचकना** - अ० உப்பியிருந்த இடம் சுருங்க

**पिचकाना** - स० உப்பியிருந்த இடத்தைச் சுருக்க

**पिचकारी** - स्त्री० பீச்சாங்குழல்

**पिचु** - पु० பருத்தி

**पिचुमंद** - पु० வேப்பமரம்

**पिच्छक** - पु० வால் ; வாலின் தோகை

**पिच्छल** - वि० வழுக்குகிற; வாலுள்ள; கொண்டையுள்ள; வடிகஞ்சி

**पिछड़ना** - अ० பின் தங்க

**पिछलगा** | **पिछलगू** पु० விடாது பின் தொடர்பவன்; சேவகன்; பின் செல்பவன்

**पिछला** - वि० பின்புறத்து; கழிந்த; கடந்த

**पिछवाड़ा** - पु० வீட்டின் பின் புறம்; புழக்கடை

**पिछाड़ी** - स्त्री० பின் பாகம்

**पिछौरा** - पु० துப்பட்டி

**पिटंत** - स्त्री० அடித்தல்

**पिटना** - अ० அடிபட

**पिटाई** - स्त्री० அடித்தல்; அடி; அடிக்கும் கூலி

**पिटारा** - पु० முடைந்த மூங்கிற் பெட்டி

**पिट्टस** - स्त्री०. சோகத்தால் மாரடித்துக்கொள்ளல்

**पिट्टू** - वि० வழக்கமாக அடி வாங்குகிற; மிகவும் பிரியமான

**पिट्ठू** - पु० பின் செல்பவன்; முகஸ்துதி செய்பவன்

**पितराइँध** | **पितराई** स्त्री० பாத்திரங்களில் களிம்பேறுதல்

**पिता** - पु० தந்தை

**पितामह** - पु० தந்தைவழிப் பாட்டன்

**पित्त** - पु० பித்தம்; —**गरम होना** - சீக்கிரம் கோபம் கொள்ள

**पित्ता** - पु० பித்தாசயம்; —**पानी करना** - மிகவும் கடுமையாக உழைக்க

**पित्ती** - स्त्री० வேர்க்குரு

**पिदर** - पु० பிதா; தந்தை

**पिद्दी** - स्त्री० சிறுபறவை; மிகச் சிறிய பொருள்

**पिधान** - पु० திரை; மூடி; கத்தியின் பிடி

**पिनकना** - अ० தூங்கிவிழ

**पिनपिनाना** - अ० மூக்கினால் அழ; சிணுங்கி அழ

**पिनहाँ** - वि० மறைந்த

**पिपासा** - स्त्री० பேராசை; தாகம்; வேட்கை

**पिपासु** - वि० வேட்கையுள்ள; தாகமுள்ள; பேராசை பிடித்த

**पिपोलिका** - स्त्री० எறும்பு

**पिप्पली** - स्त्री० திப்பிலி

**पिय** | **पिया** पु० தலைவன்; கணவன்; அன்பன்

**पियक्कड़** - पु० குடியன்

**पियराई** - स्त्री० மஞ்சள் நிறம்

पियराना - अ० மஞ்சளாக
पियल्ला - पु० கைக்குழந்தை
पियादा - पु० காலாட்படை
पियारा - वि० பிரியமான
पियूष - पु० दे० पीयूष
पिराना - अ० வலிக்க ; நோக
पिरीत / पिरीता - वि० அன்புள்ள
पिरोना - स० மணிகளைக் கோக்க; மாலை தொடுக்க ; ஊசியின் காதில் நூலைக் கோர்த்தெடுக்க
पिलकना - अ० தள்ள ; விழச் செய்ய
पिलना - अ० ஈடுபட; எண்ணெ யெடுப்பதற்கு அரைக்கப் பட ; வேகமாகப் பாய ; குனிய ; சண்டைபோட
पिलपिला - वि० மிருதுவும் ஈர மும் உள்ள
पिलपिलाना - स० பிழிய
पिलाना - स० குடிக்கச் செய்ய
पिल्ला - पु० நாய்க்குட்டி
पिल्लू - पु० அழுகின பழங்கள் அல்லது புண்களில் உள்ள புழு
पिशंक - पु० மஞ்சள் நிறம்
पिशित पु० மாமிசம்
पिशुन - पु० கோள் சொல் பவன் ; செய்நன்றி மறத் தல் ; वि० இழிந்த; வஞ்சக னை ; மூடனை
पिष्ट - वि० பிசையப்பட்ட
पिष्टपेषण - पु० சொன்ன தையே திருப்பிச் சொல் லுதல்
पिसनहारी - स्त्री० மாவரைத்து வாழ்பவள்
पिसना - अ० அரைபட ; அடங் கிப்போக ; கஷ்டப்பட ; களைத்துப்போக
पिसाई / पिसौनी - स्त्री० மாவு அரைத்தல்; அரைப்புக் கூலி
पिसान - पु० आटा மாவு
पिसी - स्त्री० வெள்ளைக் கோதுமை
पिस्ता - पु० பிஸ்தாக்கொட் டை ; இதன் மரம்
पिस्तौल - स्त्री० கைத்துப்பாக்கி
पिस्सू - पु० நாய், பசு முதலிய வைகளின் மேலிருக்கும் ஒரு பூச்சி ; தெள்ளுப் பூச்சி
पिहकना - अ० दे० पीकना
पिहानी - स्त्री० மூடி
पिहित - वि० மறைக்கப்பட்ட
पींजना - स० பஞ்சு அடிக்க
पी - पु० கணவன் ; காதலன்
पीक - स्त्री० வெற்றிலை
पीकदान - पु० வெற்றிலை எச்சில் உமிழும் பாத்திரம்

**पीकना** - अ० குயில் கூவ

**पीका** - पु० தளிர்

**पीचना** - स० அழிக்க

**पीछा** - पु० பின்புறம்; —**करना** - சுயநலத்திற்காக ஒருவர் பின்னல் சுற்ற; தொந்தரவு செய்ய; துரத்திக் கொண்டே ஓட; —**दिखाना** - புறமுதுகு காட்ட, ஓட; —**देना** - சிறிதளவு உதவி செய்து விட்டுப் பின்வாங்க; பின்தொடர

**पीछू** - क्रि० दे० **पीछे**

**पीछे** - क्रि० பிறகு; பின்னல்; கடைசியில்; பின்புறம்; —**पड़ना** - குறிப்பிட்ட வேலையைச் செய்யும்படி அடிக்கடி சொல்ல; குறிப்பிட்ட வேலையை நிறைவேற்ற; நிச்சயிக்க; —**लगना** - பின் தொடர

**पीटना** - स० அடிக்க; தாக்க; புடைக்க; தட்டி நீட்ட; पु० அழுகை; துக்கம்; விபத்து

**पीठ** - पु० ஆசனம்; **स्त्री०** முதுகு; பறவைகளின் மேல் பாகம்; —**दिखाना** - நட்பு அல்லது அன்பைத் துறந்துவிட; —**ठोंकना** - தைரியம் சொல்ல; உற்சாகமூட்ட; —**पीछे** - ஒருவர் இல்லாத சமயத்தில்; ஒளிவு மறைவாக

**पीठा** - पु० ஆசனம்; பேடா என்னும் ஒருவகைத் தின்பண்டம்

**पीठिका** - स्त्री० சிறு ஆசனம்; பீடம்; பிரிவு; அத்தியாயம்

**पीठी** - स्त्री० நனைத்து அரைத்த உளுத்தம் பருப்பு

**पीड़क** - पु० துன்புறுத்துபவன்

**पीड़न** - पु० }
**पीड़ा** - स्त्री० } வேதனை; துன்பம்; வலி; நோய்

**पीड़ित** - वि० கஷ்டப்படுகிற; துன்புறுத்தப்பட்ட; நோயுற்ற

**पीढ़ा** - पु० ஆசனம்

**पीढ़ी** - स्त्री० தலைமுறை; மக்கள்

**पीत** - वि० குடிக்கப்பட்ட; மஞ்சளான

**पीतक** - पु० அரிதாரம்; அகர்; தேன்; சூரத்தாவாரை

**पीतम** - पु० **प्रियतम** காதலன்

**पीतल** - पु० பித்தளை

**पीन** - वि० பருத்த; நிறைந்த

**पीनक** - स्त्री० போதையால் ஆடி விழுதல்; தூங்கி விழுதல்

**पीनता** - स्त्री० பருமன்; நிறைவு

**पीनस** - पु० ஜலதோஷம் ; स्त्री० பல்லக்கு

**पीना** - स० குடிக்க ; அருந்த ; பொறுத்துக்கொள்ள ; புகை இழுக்க ; —**करना** - நன்றாகப் புடைக்க

**पीप** - स्त्री० சீழ்

**पीपर** | **पीपल** } पु० அரசமரம்; स्त्री० திப்பிலி

**पीपलामूल** - पु० திப்பிலி வேர்

**पीपा** - पु० பீப்பாய்

**पीब** - स्त्री० दे० पीप

**पीय** - पु० पिय கணவன் ; அன்பன்

**पीयूष** - पु० அமிர்தம் ; பால்

**पीर** - स्त्री० வேதனை ; அனுதாபம் ; पु० மகாபுருஷர் ; இஸ்லாமியத் துறவி ; சித்தர்

**पीरी** - स्त्री० கிழத்தன்மை ; பெருமை

**पील** - पु० யானை ; சதுரங்க ஆட்டத்தில் ஒரு காய் ; ஒட்டகம்;—**पाँव** - யானைக் கால் வியாதி ; —**पाल, वान-महावत** யானைப்பாகன்

**पीला** - वि० மஞ்சளான ; —**पड़ना, होना** - இரத்தக் குறைவால் உடல் இளைக்க ; நோய் அல்லது பயத்தால் முகம் வெளுத்துப்போக

**पीलिया** - पु० மஞ்சள் காமாலை

**पीवना** - स० दे० पीना

**पीवर** - वि० பருமனான ; கனமான ; पु० ஆமை

**पीवरी** - स्त्री० யுவதி ; பசு

**पीसना** - स० அரைக்க ; கடினமான வேலை வாங்க ; நசுக்க

**पीहर** - पु० பெண்ணின் பிறந்தகம்

**पुंगव** - पु० காளை; वि० உயர்ந்த ; உத்தமமான ; சிறந்த

**पुंज** - पु० சேர்க்கை ; குவியல்

**पुंस्त्व** - पु० ஆண்மை ; வீரியம்

**पुआ** - पु० पूआ ஜீராவில் தோய்த்த பூரி ; அதிரசம்

**पुआल** - पु० வைக்கோல்

**पुकार** - स्त्री० அழைப்பு ; கூப்பாடு ; பழிவாங்க அல்லது உதவ அழைத்தல் ; பெயர் சொல்லிக் கூப்பிடுதல் ; பிராது.

**पुकारना** - स० கூப்பிட ; அழைக்க

**पुखर** - पु० குளம் ; குட்டை

**पुखराज** - पु० புஷ்யராகம்

**पुख़्ता** - वि० திடமான ; பலமான ; தேர்ந்த ; —**मिज़ाज** - மன உறுதியுள்ள

**पुचकार** - स्त्री० दे० पुचकारी

**पुचकारना** - **स०** செல்லம் கொஞ்ச ; குலாவ

**पुचकारी** - **स्त्री०** செல்லம் கொஞ்சுதல் ; முத்தமிடுதல்

**पुचाड़ा** } **पु०** ஈரத்துணியால் துடைத்தல்; பொய்த்துதி
**पुचारा** }

**पुच्छ** - **स्त्री०** வால் ; பின்பாகம்

**पुच्छल** - **वि०** வாலுள்ள ; **—तारा** - வால் நட்சத்திரம்

**पुच्छल्ला** - **पु०** பெரிய வால் ; விடாமல் பின் தொடருபவன் ; பொய்ப் புகழ்ச்சி செய்பவன்

**पुछार** - **पु०** விசாரணை செய்பவர் ; மரியாதை செய்பவர் ; மயில்

**पुजना** - **अ०** பூஜிக்கப்பட

**पुजाना** - **स०** பூஜையில் ஈடுபடுத்த ; முடிக்க

**पुजापा** - **पु०** பூஜைப் பொருள்கள்

**पुजारी** } **पु०** பூசாரி ; பூஜை செய்பவன்
**पुजैया** }

**पुट** - **पु०** லேசாகத் தெளித்தல் ; சிறிய அளவில் சேர்த்தல் ; மறைப்பு ; பெட்டி ; மூடி

**पुटकी** - **स्त्री०** பொட்டலம் ; மூட்டை

**पुटपाक** - **पु०** மருந்தைப் புடம் போடுதல்

**पुट्ठा** - **पु०** புத்தகத்தின் அட்டை ; பிருஷ்டபாகம்

**पुड़िया** - **स्त्री०** பொட்டலம் ; பொட்டலம் கட்டிய (ஒரு வேளை) மருந்து ; சுரங்கம்

**पुतरी** - **स्त्री०** **दे०** **पुतली**

**पुतला** - **पु०** பொம்மை

**पुतली** - **स्त्री०** பொம்மை; கண் மணி ; நெசவு இயந்திரம் ; **—घर** - **पु०** நெசவாலை

**पुताई** - **स्त्री०** சுண்ணாம்பு, மண் முதலியவை பூசுதல் ; பூச்சுக் கூலி

**पुत्तलिका** - **स्त्री०** பொம்மை ; விழி ; மகள்

**पुत्र** - **पु०** மகன் ; **—वती** - மகனைப் பெற்றவள் ; **—वधू** - **स्त्री०** நாட்டுப்பெண் ; மருமகள்

**पुत्री** - **स्त्री०** பெண் ; மகள்

**पुदीना** - **पु०** புதினா இலை

**पुनः** - **अव्य०** மறுபடி ; பிறகு

**पुनरावृत्ति** - **स्त्री०** திரும்பச் செய்தல் அல்லது படித்தல்

**पुनरुक्ति** - **स्त्री०** சொன்னதைத் திருப்பிச் சொல்லுதல்

**पुनर्जन्म** - पु० மறு பிறப்பு
**पुनश्च** - अव्य० மறுபடியும்
**पुनि** - क्रि० பிறகு
**पुनीत** - वि० பவித்திரமான; புனிதமான
**पुन्न** - पु० புண்ணியம்
**पुपली** - स्त्री० மூங்கில் குழாய்; वि० பற்கள் இல்லாத
**पुर** - पु० நகரம்; வீடு; தோல் கமலே; वि० நிறைந்த
**पुरअसर** - वि० வேகம் அல்லது சக்தி நிறைந்த; செல்வாக்கு நிறைந்த
**पुरइन** - स्त्री० தாமரை; தாமரை இலே
**पुरखा** - पु० முதியோர்; முன்னோர்
**पुरजन** - पु० நகர மக்கள்
**पुरजा** - पु० துண்டு; பாகம்
**पुरबा** - स्त्री०. दे० **पुरवा**
**पुरबिया** - वि० கிழக்கத்திய
**पुरवा** - पु० கிராமம்; மண் கலயம்
**पुरवाई** / **पुरवैया** - स्त्री० கிழக்குக்காற்று
**पुरसाँ** - वि० கேட்கிற; விசாரிக்கிற
**पुरसा** - पु० நாலரை அல்லது ஐந்து முழ அளவு
**पुरसी** - स्त्री० கேட்டல்
**पुरस्कार** - पु० வெகுமதி; கௌரவம்; அன்பளிப்பு
**पुरस्कृत** - वि० கௌரவிக்கப்பட்ட; வெகுமதி பெற்ற
**पुरा** - पु० கிராமம்; अव्य० முன்னொரு காலத்தில்; முன்பு
**पुराकृत** - वि० பண்டைக்காலத்தில் செய்த
**पुराण** - पु० புராண நூல்; वि० பண்டைய; பழைய காலத்து
**पुरातत्व** - पु० பண்டைக்காலத்திய செய்தி; தொல்பொருள் ஆராய்ச்சி; —**विभाग** தொல் பொருள் ஆராய்ச்சிப் பிரிவு
**पुराना** - पु० பழைய
**पुरातन** / **पुरावृत्त** - वि० பழங்கால வரலாறு; தேச சரித்திரம்
**पुरी** - स्त्री० நகரம்; பட்டணம்
**पुरीष** - पु० மலம்; குப்பை
**पुरुष** - पु० மனிதன்; ஆத்மா; கணவன்; ஆண்
**पुरुषार्थ** - पु० ஆண்மை; சக்தி; திறமை; குறிக்கோள்
**पुल** - पु० பாலம்; அணே
**पुलक** - पु० மயிர்க்கூச்சல்
**पुलकना** - अ० மயிர் கூச்சல் ஏற்பட; மகிழ்ச்சி பொங்க

पुलकालि } स्त्री० சந்தோஷத்
पुलकावलि } தால் மயிர்க்கூச்
செறிதல்

पुलकित - वि० சந்தோஷத்தால் மயிர்க்கூச்செடுக்க

पुलटिस - स्त्री० புண்ணுக்கு வைத்துக் கட்டும் மாவு அல்லது மேல்ப்பூச்சு

पुलपुला - वि० அமுங்கக் கூடியதும் மிருதுவாயுமுள்ள

पुलपुलाना - स० மிருதுவாக அமுத்த ; अ० பயப்பட

पुलाव - पु० இறைச்சியுடன் சமைத்த சாதம் ; புலவு

पुलिंदा - पु० காகிதம், துணி இவைகளின் கட்டு ; மூட்டை

पुलिना - पु० தண்ணீருக்கு அருகில் ஏற்பட்ட திட்டு; மணற்கரை

पुवा - पु० दे० पूआ

पुश्त - स्त्री० முதுகு ; வம்ச பரம்பரை ; —नामा - पु० வமிசாவளி

पुश्ता - पु० சுவருக்கு ஆதாரமாகக் கொடுக்கப்படும் மண் சரிவு

पुश्ती - स्त्री० ஆதாரம் ; உதவி; பெரிய தலையணை

पुश्तैनी - वि० பாட்டன், முப்பாட்டன் காலத்திய; பரம்பரையான

पुष्कर - पु० தண்ணீர் ; குளம் ; தாமரை ; ஆகாயம்

पुष्कल - वि० மிக அழகான ; நிறைந்த ; पु० ஓர் அளவு

पुष्ट - वि० போஷிக்கப்பட்ட; புஷ்டியான ; வலுவான

पुष्टई - स्त्री० புஷ்டி மருந்து

पुष्टता - स्त्री० புஷ்டி ; வலிமை

पुष्टि - स्त्री० दे० पुष्टता ; ஒரு விஷயத்தைக் காரணம் கூறி ஆமோதித்தல்

पुष्टिकर } वि० புஷ்டியாக்கு
पुष्टिकारक } கிற ; சத்தைக்
தருகிற

पुस्तक - स्त्री० புத்தகம் ; நூல்

पुस्तकाकार - वि० புத்தக உருவில் வெளியான

पुस्तकालय - पु० நூல் நிலையம்

पुहुप - पु० பூ ; மலர்

पुहुमी - स्त्री० பூமி ; நிலம்

पूँछ - स्त्री० வால் ; பின் பாகம்

पूँजी - स्त्री० ஐசுவரியம்; முதல்; மூலதனம் ; குவியல் ; —पति - முதலாளி

पूगीफल - पु० பாக்கு

पूछ - स्त्री० வினவுதல் ; தேடுதல் ; —पाछ, ताछ - स्त्री० விசாரித்தல் ; விசாரணை

**पूछना - स०** வினவ; விசாரிக்க; கவனித்துக் கொள்ள

**पूजन - पु०** பூஜை ; மரியாதை

**पूजना - स०** பூஜிக்க ; மரியாதை செய்ய ; லஞ்சம் கொடுக்க ; **अ०** நிறைவேற

**पूजनीय - वि०** பூஜிக்கத்தக்க

**पूजा - स्त्री०** பூஜை; மரியாதை; உபசாரம் ; **—पाठ** - பூஜை, ஜபம் முதலியன

**पूजित - वि०** பூஜிக்கப்பட்ட

**पूज्य - वि० दे० पूजनीय**

**पूड़ी - स्त्री०** 'பூரி' என்னும் தின்பண்டம்

**पूत - वि०** சுத்தமான ; **पु०** மகன்

**पूती - स्त्री०** வெங்காயம் ; வெள்ளைப் பூண்டு

**पूनी - स्त्री०** பஞ்சுப் பட்டை ; பௌர்ணமி

**पूर - वि० दे० पूर्ण**

**पूरक - वि०** நிறைவாக்குகிற

**पूरण | पूरन } स०** நிரப்புதல்; முடித்தல்; **वि०** நிறைவேற்றுகிற

**पूरनपूरी - स्त्री०** ஓர் இனிப்புப் பண்டம்

**पूरना - स०** மறைக்க ; நிறைவேற்ற; **अ०** நிறைவேற

**पूरब - पु०** கிழக்கு

**पूरबल - पु०** பண்டைக்காலம் ; முன் பிறப்பு

**पूरबी - वि० दे० पूर्वी**

**पूरा - वि०** நிரம்பிய ; முடிந்த; **—करना** - பூர்த்தி செய்ய ; முடிக்க

**पूरित - वि०** நிறைந்த; திருப்தியான ; பூர்த்தியான

**पूरी - स्त्री० दे० पूड़ी**

**पूर्ण - वि०** நிறைந்த ; முடிந்த; **—विराम** - முற்றுப்புள்ளி

**पूर्णता - स्त्री०** நிறைவு

**पूर्व - पु०** கிழக்குத் திசை; **वि०** பழைய ; முந்திய ; **क्रि०** முதலில் ; முன்னால் ; **—वत्** முன்போல; **—वर्ती** - முன்னிருந்த ; **—वृत्त** - பழைய செய்தி; முந்திய சரித்திரம்

**पूर्वक - क्रि०** உடன்; பூர்வமாக; முன்னிட்டுக்கொண்டு

**पूर्वज - पु०** முன்னோர் ; அண்ணன்

**पूर्वापर - वि०** முன்பின்

**पूर्वी - वि०** கிழக்குத் திசையைச் சேர்ந்த

**पूला - पु०** தாள், தானியக் கதிர், புல், வைக்கோல் முதலியவைகளின் சிறு கட்டு ; பிரி

**पूषण** - **पु०** சூரியன்

**पूस** - **पु०** தை மாதம்

**पृथक्** - **वि०** தனியான ; —**करण** - தனிப்படுத்துதல் ; பிரித்து வைத்தல்

**पृथु** / **पृथुल** } **वि०** பெரிய ; கனமான ; விசாலமான

**पृथ्वी** - **स्त्री०** பூமி ; —**नाथ, पति, पाल** - அரசன்

**पृष्ट** - **पु०** கேட்கப்பட்ட ; வினவப்பட்ட

**पृष्ठ** - **पु०** முதுகு ; பின்புறம் ; புத்தகத்தின் பக்கம் ; —**पोषक** - முதுகு தட்டுபவன், 'ஆமாம்சாமி' ; உதவியாள்

**पेंग** - **स्त्री०** ஊஞ்சல் ஆடும் வீச்சுப் பாதை ; ஒரு பட்சி ; —**मारना** - வீசி ஊஞ்சலாட்ட

**पेंच** - **पु० दे० पेच**

**पेंडुकी** - **स्त्री०** ஒரு விதப் புரு ; பொற் கொல்லரின் ஊது குழல்

**पेंदा** - **पु०** அடிப் பாகம்

**पेखना** - **स०** பார்க்க ; விளையாட

**पेच** - **पु०** சுழலுதல் ; சிக்கல் ; தந்திரம் ; யந்திரத்தின் ஒரு பாகம் ; மடிப்பு ; திருகாணி ; குஸ்தியில் ஒரு பிடி

**पेचक** - **स्त्री०** நூல்க்கண்டு ; **पु०** ஆந்தை ; பேன்

**पेचकरा** - **पु०** ஸ்குரூ டிரைவர் ; திருப்புளி

**पेचवान** - **पु०** பெரிய ஹுக்கா ; ஹுக்காவின் வளைந்த குழல்

**पेचिश** - **स्त्री०** வயிற்றுக் கடுப்பு

**पेचीदगी** - **स्त्री०** சிக்கல்

**पेचीदा** / **पेचीला** } **वि०** திருகு மரையுள்ள ; சிக்கலான

**पेट** - **पु०** வயிறு ; கர்ப்பம் ; —**वाली** - கர்ப்பிணி ; —**काटना** - (சிக்கனத்திற்காக) வயிற்றுக்கு வஞ்சனை செய்ய ; —**का धँधा** - வயிற்றுப்பாடு ; ஜீவனம் ; —**की आग** - பசி ; —**चलना** - வயிற்றுப் போக்கு ஏற்பட ; —**दिखाना** - தன் ஏழ்மையை வெளிப்படுத்த ; தன் பசியைத் தெரிவிக்க ; —**पालना** - வயிறு வளர்க்க ; கஷ்ட ஜீவனம் நடத்த ; —**में चूहे दौड़ना** - பெரும் பசி எடுக்க ; —**में डालना** - தின்றுவிட ; ஏமாற்றித்

தனதாக்கிக் கொள்ள ;—**रखना** - கருத்தரிக்கச் செய்ய ; —**रहना** - கருத் தரிக்க ; —**से होना** - கர்ப் பவதியாக இருக்க

**पेटा - पु०** நடுப் பாகம் ; முழு விவரம் ; வட்டம் ; ரக சியம்

**पेटारा - पु० दे० पिटारा**

**पेटिका - स्त्री०** பெட்டி ; முடைந்த சிறு பெட்டி

**पेटी - स्त्री०** சிறு பெட்டி

**पेटू - वि०** அதிகமாய்ச் சாப் பிடுகிற

**पेठा - पु०** பூசனிக்காய் ; ஒரு இனிப்பு மிட்டாய்

**पेड़ - पु०** மரம்

**पेड़ा - पु०** பால் மிட்டாய்

**पेड़ी - स्त्री०** மரத்தின் அடிப் பாகம் ; மரங்களுக்காக வசூலிக்கப்படும் வரி ; மனித உடல்

**पेड़ू - पु०** வயிற்றின் கீழ்ப் பாகம்

**पेन्हाना - अ०** கறவைக்கு முன் சுரப்பு விட ; **स०** ஆடை உடுத்த

**पेय - पु०** பானம் ; **वि०** குடிக் கத்தக்க

**पेरना - स०** நசுக்கிச் சாறு பிழிய ; செக்கில் ஆட்ட ; துன்புறுத்த ; தாமதப் படுத்த

**पेलना - पु०** அமுக்கி உட் புகுத்த ; பலவந்தப்படுத்த

**पेला - पु०** தகராறு ; எதிர்ப்பு ; அமுக்கித்தள்ளல்

**पेवस - पु०** இளங் கன்றுப் பால் ; சீயம்பால்

**पेश - क्रि०** எதிரே ; —**आना** - நடந்துகொள்ள ; எதிரே வர ; நிகழ —**करना** - ஆஜ ராக்க ; —**बीनी** - தீர்க்க தரிசனம்

**पेशकार - पु०** கோர்ட்டில் ஒரு உத்யோகஸ்தர்

**पेशखेमा - पु०** முன்னணிப் படை ; சேனைக்கு முன் முதலிலேயே சென்று விடும் தளவாடம் ; காரி யத்தின் முன் அறிகுறி

**पेशगी - स्त्री०** முன்பணம்

**पेशगोई - स्त्री०** எதிர்காலத்தைப் பற்றி சொல்லுதல் ; முன் பாகவே சொல்லி வைத் தல்

**पेशतर - क्रि० दे० पेश्तर**

**पेशबंदी - स्त्री०** முன் எச்சரிக் கையுடன் செய்த ஏற் பாடு அல்லது யுக்தி

**पेशराज** - पु० கொத்தனர் ; கல் சுமக்கும் கூலியாள்

**पेशवा** - पु० தலைவன்

**पेशवाई** - स्त्री० பேஷ்வாப்பதவி; முன் சென்று வர வேற்றல்

**पेशावाज़** - स्त्री० நாட்டியப் பெண்கள் நடனமாடும் போது அணியும் ஆடை ; அல்லது சலங்கை

**पेशा** - पु० தொழில் —**कमाना** - வேசித் தொழில் நடத்த

**पेशानी** - स्त्री० நெற்றி ; விதி

**पेशाब** - पु० மூத்திரம்;—**करना** - சிறுநீர் கழிக்க —**ख़ाना** - சிறுநீர்கழிக்குமிடம்

**पेशावर** - पु० தொழிலாளி

**पेशी** - स्त्री० வழக்கு தாக்கல் செய்தல் ; வழக்கு விசாரணை ; முன்னிலையில் இருத்தல் ; வாளுறை

**पेशीन** - वि० பழமையான

**पेशीनगोई** - स्त्री० சோதிடம்

**पेश्तर** - क्रि० முதலில் ; முதலாவது

**पैंजनी** - स्त्री० கால் சலங்கை ; சிலம்பு

**पैंठ** - स्त्री० . சந்தை ; கடை ; அங்காடி

**पैंठौर** - पु० கடை ; கடைகளுள்ள இடம்

**पैंड़** - पु० காலடி ; பாதை

**पैंड़ा** - पु० வழி ; பாதை ; வகை ; நடத்தை ; குதிரை லாயம் ; —**मारना** - வழி மறித்துக் கொள்ளையிட

**पैंत** - स्त्री० பந்தயம்

**पैंताना** - पु० கட்டிலின் கால்ப் பக்கம்

**पैं** - अव्य० ஆனல் ; பிறகு ; பக்கம் ; நிச்சயம் ; மேல் ; இல் ; स्त्री० குற்றம்

**पैकर** - पु० பஞ்சு எடுப்பவன்

**पैकार** - पु० சிறு வியாபாரி

**पैग़ंबर** - पु० தேவதூதன்

**पैग़ाम** - पु० தூது ; செய்தி

**पैज** - स्त्री० பிரதிக்ஞை ; பந்தயம் ; போட்டி

**पैजामा** - पु० दे० **पायजामा**

**पैज़ार** - स्त्री० செருப்பு

**पैठ** - स्त्री० பிரவேசம்;போய்ச் சேருதல் ; அமிழ்தல் ; தலையீடு

**पैठना** - अ० நுழைய ; அமிழ

**पैठार** - पु० நுழைவு ; வழி ; பிரவேசம ; வெளிக் கதவு

**पैड़ी** - स्त्री० ஏறுவதற்கான படி

**पैतरा** - पु० குஸ்தி போடுகிற வர்களின் நடை முதலிய முன்னேற்பாடு ; போர் முறை

**पैतृक** - वि० முன்னோர்களுடைய

**पैदल** - वि० கால் நடையாய்ச் செல்லுகிற; क्रि० கால் நடையாய்; **—सेना** - காலாட்படை

**पैदा** - वि० பிறந்த; அடைந்த; உண்டான; சம்பாதித்த; स्त्री० வருவாய்; இலாபம்; **—होना** - பிறக்க; உண்டாக; **—करना** - பெற; உண்டாக்க; பயிராக்க; படைக்க

**पैदाइश** - स्त्री० உற்பத்தி; பிறவி

**पैदाइशी** - वि० பிறப்போடு ஏற்பட்ட; இயற்கையான

**पैदावार** - स्त्री० விளைச்சல்

**पैना** - पु० தார்க்குச்சி; वि० கூர்மையான; நுண்ணிய

**पैनाना** - स० கூராக்க; தீட்ட

**पैबंद** - पु० दे० पैवंद

**पैबंदी** - वि० दे० पैवंदी

**पैमाइश** - स्त्री० माप அளத்தல்; அளவு; நில அளவை

**पैमाना** - पु० அளவு; அளக்கும் கருவி

**पैमाल** - वि० அழிந்துபோன; சீரழிந்த; ஒடுக்கப்பட்ட

**पैयाँ** - स्त्री० பாதம்

**पैया** - पु० சாவியாய்ப்போன தானியம்; சாரமற்ற; பொருளற்ற

**पैर** - पु० பாதம்; காலடிச் சின்னம்; **—गाड़ी** - சைக்கிள் வண்டி; **—उखड़ना** - பின் வாங்க; தோற்க; **—जमना** - காலூன்றி நிற்க; நிலைபெற; **—डालना** - குறுக்கிட; **—तोड़ना** - நடந்து களைத்துப் போக; அதிகம் அலைய; **—धरना, रखना** - அடிவைக்க; நடக்க; **—फँसना** - சங்கடத்தில் மாட்டிக் கொள்ள; **—बढ़ाना** - நடக்க; எல்லை மீற; **पैरों चलना** - கால் நடையாகச் செல்ல

**पैरना** - अ० तैरना நீந்த

**पैरवी** - स्त्री० வழக்கு நடத்துதல்; பின்பற்றுதல்; முயற்சி; அலைச்சல்; முகஸ்துதி; **—कार** - வழக்கு நடத்துபவன்

**पैरा** - पु० உயரமான இடத்தின் மேல் ஏற கட்டப்படும் சாரம்

**पैराई** - स्त्री० நீச்சல்

**पैराक** - पु० நீந்துபவன்

**पैराव** - पु० நீந்திக்கடக்க கூடிய அளவு ஜலம்

**पैरी** - स्त्री० ஏணி ; ஒரு காலணி

**पैरो** - वि० பின்பற்றுகிற

**पैलगी** - पु० காலைத் தொட்டு நமஸ்காரம் செய்தல்

**पैवंद** - पु० ஒட்டு ; துணியின் ஒட்டு ;—**लगाना** - துணியில் ஒட்டுப்போட

**पैवंदी** - वि० ஒட்டுக்கட்டிய (செடி, துணி முதலியன)

**पैवस्त** - वि० உள்ளேயே பரவிய (திரவ பதார்த்தம்)

**पैशाची** - स्त्री० ஒரு பிராகிருத இனமொழி

**पैसना** - अ० உள்ளே நுழைய

**पैसरा** - पु० வியாபாரம் ; முயற்சி ; வீண்வம்பு

**पैसा** - पु० காலணா ; பணம் ; —**उड़ाना** - மிதமிஞ்சி செலவு செய்ய ; பணத்தை வீணாக்க ; திருட ; ஏமாற்றிப் பணம் பறிக்க ; —**खाना** - வஞ்சித்துப் பணம் பறிக்க ; —**लगाना** - முதலீடு செய்ய ; செலவு செய்ய

**पैसार** - पु० பிரவேசம் ; நுழையும் வழி ; அமிழ்தல்

**पैहारी** - वि० பால் மாத்திரம் குடித்து ஜீவிக்கிற

**पोंगा** - पु० குழல் ; **वि०** குழலான ; முட்டாளான

**पोंगी** - स्त्री० புல்லாங்குழல்

**पोंछन** - पु० துடைத்து எடுக்கும் அழுக்கு

**पोंछना** - स० துடைக்க ; **पु०** அழுக்கைத் துடைக்கும் துணி

**पोआ** - पु० பாம்புக்குட்டி ; பால் மணம் மாறாக் குழந்தை

**पोखर** / **पोखरा** } पु० நீர்க்குட்டை

**पोगंड़** - पु० ஐந்திலிருந்து பத்து வயதுக்கு உட்பட்ட வயது

**पोच** - वि० அற்பமான ; தாழ்வான

**पोची** - स्त्री० தாழ்மை ; கெடுதி

**पोट** - स्त्री० மூட்டை ; குவியல்

**पोटना** - स० ஒன்று சேர்க்க ; திரட்ட ; ஏமாற்ற

**पोटली** - स्त्री० சிறு மூட்டை

**पोटा** - पु० இரைப்பை; துணிச்சல் ; சாமர்த்தியம்; விரல் நுனி ; கண்ணிமை ; பறவைக் குஞ்சு

**पोढ़ा** - वि० புஷ்டியான ; கெட்டியான

**पोत** - पु० குஞ்சு ; குட்டி ; படகு; நிலவரி ; மணி ; முறை

**पोतदार** - स० பொக்கிஷதார் ; நாணயப் பரிசோதகன்

**पोतना** - स० பூச ; தேய்க்க ; மெழுக ; தேய்ப்புத்துணி

**पोतला** - पु० நெய்யில் வறுத் தெடுத்த ரொட்டி

**पोता** - पु० மகனின் மகன், பேரன் ; நிலவரி ; அண்ட கோசம் ; மெழுகுத் துணி

**पोती** - स्त्री० மகனின் மகள் ; பேத்தி ; பூச்சுமண்

**पोथा** - पु० காகித அடுக்கு ; பெரிய புத்தகம்

**पोथी** - स्त्री० புத்தகம்

**पोदना** - पु० குட்டையான மனிதன்; ஒரு சிறியபட்சி

**पोद्दार** - पु० दे० पोतदार

**पोना** - स० கையாலேயே ரொட்டி இட ; ரொட்டி சுட ; தொடுக்க

**पोपला** - वि० ஒட்டிய ; சுருங் கிய; பொக்கை வாயான; பல்லில்லாத

**पोपलाना** - अ० சுருங்கிப்போக; பொக்கையாக

**पोर** - स्त्री० விரலின் கணு ; கரும்பு, மூங்கில் முதலிய வற்றின் கணு ; முது கெலும்பு

**पोल** - पु० ஒன்றுமில்லாத இடம் ; ஓட்டை ; வெளிக் கதவு ; —**खोलना** - குற் றத்தை வெளியாக்க ; குட்டு வெளிப்படுத்த

**पोला** - वि० உள்ளே காலியா யிருக்கிற ; ஓட்டையான

**पोशाक** - स्त्री० ஆடை

**पोशीदगी** - स्त्री० ரகசியம் ; மறைவு

**पोशीदा** - वि० गुप्त மறைந்த ; இரகசியமான

**पोषक** - वि० வளர்க்கிற ; உப காரம் செய்கிற

**पोषण** - पु० வளர்த்தல்; புஷ்டி; பராமரிப்பு

**पोषित** - वि० வளர்த்த பரா மரிக்கப்பட்ட

**पोष्य** - वि० வளர்க்கத் தக்க ; —**पुत्र** - மகனைப் போல் வளர்க்கப் பட்டவன் ; சுவீகார புத்திரன்

**पोस** - पु० அன்பு ; வளர்த்தல்; உதவி

**पोसना** - स० பரிபாலிக்க ; வளர்க்க ; மறைக்க

**पोस्त** - पु० தோல் ; அபினிச் செடி ; மடிப்பு ; மரப் பட்டை

**पोस्ता** - पु० அபினிச் செடி

**पोस्ती** - पु० அபின் சாப்பிடு பவன்; சோம்பேறி

**पोहना** - स० மணிகள் கோக்க

**पौ** - स्त्री० தண்ணீர்ப் பந்தல்; கிரணங்களின் தோற்றம்; சொக்கட்டானில் ஒரு வகை ஆட்டம்; விடியற் காலை —**फटना** - பொழுது விடிய; கிழக்கு வெளுக்க; —**बारह होना** - பெரிய அதிருஷ்டம் வர; ஏராள லாபம் கிடைக்க

**पौआ** - पु० दे० **पौवा**

**पौढ़ना** - अ० ஆடி அசைய; படுக்க

**पौत्र** - पु० மகனின் மகன்; பேரன்

**पौद** - स्त्री०
**पौधा** - पु० } செடியின் சிறு கன்று; செடி

**पौन** - पु० காற்று; உயிர்; பூதம்; वि० முக்கால்; —**चलाना, मारना** - மந்திரம் போட

**पौना** - पु० முக்கால் வாய்பாடு; ஓர் வித கரண்டி

**पौनी** - स्त्री० விசேஷ நாட்களில் வேலை செய்து இனம் பெறும் நாவிதர், வண்ணார் முதலிய ஜாதியார்

**पौर** - स्त्री० வாயில்; वि० நகர சம்பந்தமான; நகரத்தி லுள்ள

**पौरिया** - पु० வாயிற் காப்போன்

**पौरी** - स्त्री० நிலைப்படி

**पौरुष** - पु० ஆண்மை; வீரம்; வலிமை; முயற்சி; ஆக்கம்; वि० ஆண் சம்பந்தமான

**पौवा** - पु० கால் சேர்; கால் சேர்ப் பாத்திரம்

**पौष्टिक** - वि० புஷ்டியளிக்கிற

**पौसला**
**प्याऊ** } पु० தண்ணீர்ப்பந்தல்

**प्याज़** - पु० வெங்காயம்

**प्यादा** - पु० காலாட்படை வீரன்; தூதன்; சதுரங்கத்தில் ஒரு காய்

**प्यार** - पु० அன்பு; சிநேகம்

**प्यारा** - वि० அன்பான; அன்பிற்குகந்த

**प्याला** - पु० கோப்பை; பேலா; பிச்சை ஓடு

**प्यास** - स्त्री० தாகம்; வேட்கை; விருப்பம்

**प्यासा** - वि० தாகங்கொண்ட

**प्योसर** - पु० சமீபத்தில் கன்று போட்ட பசுவின் பால்

**प्योसार** - पु० दे० **पीहर**

**प्रकट** - वि० வெளியான; பிரத்தியக்ஷமான ; தெளிவான

**प्रकर** - पु० கூட்டம் ; தொகுதி; உதவி ; நட்பு ; வழக்கம் ; கௌரவம்

**प्रकरण** - पु० அத்தியாயம் ; சந்தர்ப்பம் ; இடம் ; பகுதி ; அமைப்பு

**प्रकर्ष** - पु० சிறப்பு; இழுத்தல்; சக்தி ; பரப்பு ; சிறப்பியல்

**प्रकांड** - वि० மிகப் பெரிய ; தலைசிறந்த ; உத்தமமான पु० நடுமரம் ; மரக்கிளை ; தோள்ப்பட்டை

**प्रकार** - पु० விதம் ; வகை ; முறை; स्त्री० சுற்றுச்சுவர்

**प्रकाश** - पु० ஒளி ; வெளிச்சம்; வெளியாதல் ; வெயில்

**प्रकाशक** - पु० ஒளி உண்டாக்குபவர் ; பிரசுரிப்பவர் ; சூரியன்; புதிதாகக் கண்டு பிடிப்பவர்

**प्रकाशन** - पु० வெளியீடு ; வெளிப்படுதல்

**प्रकाशमान** - वि० பிரகாசிக்கிற; புகழுள்ள ; ஒளியுள்ள

**प्रकाशित** - वि० பிரகாசமான ; வெளியான ; பிரசுரமான

**प्रकृत** - वि० உண்மையான ; இயற்கையான ; தற்போதைய ; தொடங்கிய ; பெருமை பெற்ற

**प्रकृति** - स्त्री० சுவபாவம் ; இயற்கை ; மூலப் பகுதி

**प्रकृतिस्थ** - वि० இயற்கையான; மாயை; சுய நிலையிலுள்ள

**प्रकोप** - पु० கடுங்கோபம் ; படையெடுப்பு ; நோயின் சீற்றம் ; கலகம்

**प्रकोष्ठ** - पु० பெரிய முற்றம் ; வாயிலுக்குப் பக்கத்திலுள்ள அறை ; மணிக்கட்டிலிருந்து முழங்கை வரை உள்ள பகுதி

**प्रक्रिया** - स्त्री० அத்தியாயம் ; முறை ; செய்கை ; வகை ; தனி உரிமை ; உபாயம் ; சொல்லாட்சி முறை

**प्रक्षालन** - पु० நீரினால் கழுவுதல்; அலம்புதல்; அலம்பப் பயன்படும் நீர்

**प्रक्षिप्त** - वि० எறியப்பட்ட ; பின்பு சேர்க்கப்பட்ட

**प्रखर** - वि० தீவிரமான ; கூர்மையான ; கொடுமையான

**प्रख्यात** - वि० மிகப் பிரசித்தமான ; அதிகப் புகழ் பெற்ற ; சந்தோஷமான

**प्रख्याति** - स्त्री० பெரும் புகழ்

**प्रगट** - वि० दे० प्रकट
**प्रगति** - स्त्री० முன்னேற்றம்
**प्रगल्भ** - वि० கெட்டிக்காரனை ; திறமையாகப் பதிலளிக்கிற ; பெருந்தன்மையுள்ள ; முதிர்ந்த ; பயமற்ற
**प्रगाढ़** - वि० நனைக்கப்பட்ட ; மிதமிஞ்சிய ; ஆழமான ; கெட்டியான
**प्रगीत** - पु० பாட்டு; वि० பாடப்பட்ட
**प्रघट** - वि० दे० प्रकट
**प्रचंड** - वि० மிகத் தீவிரமான ; மிகக்கொடிய
**प्रचलन** - पु० பிரசாரம் ; நடைபெறுதல் ; இயங்குதல்
**प्रचलित** - वि० பழக்கத்திலிருக்கிற ; நடப்பிலிருக்கிற
**प्रचार** - पु० பரவச் செய்தல் ; பரப்புதல் ; பிரசாரம்
**प्रचारक** - पु० பிரசாரம் செய்பவன் ; பரப்புபவன்
**प्रचारित** - वि० பரப்பிய ; பிரசாரம் செய்யப்பட்ட
**प्रचुर** - वि० ஏராளமான ; அதிகமான
**प्रचेता** - पु० வருணன்
**प्रच्छन्न** - वि० மூடப்பட்ட ; மறைந்திருக்கிற ; போர்த்தப்பட்ட
**प्रजा** - स्त्री० பிரஜைகள் ; குடிகள் ; —**तंत्र, शासन, सत्ता** - குடியரசு ; மக்களாட்சி
**प्रज्ञ** - पु० சிறந்த அறிவாளி ; ஞானி
**प्रज्ञा** - स्त्री० உணர்வு ; அறிவு ; ஞானம் ; —**चक्षु** - पु० குருடன் ; वि० ஞானியான ; அறிவுள்ள
**प्रज्वलित** - वि० கொழுந்து விட்டு எரிகிற ; பிரகாசமான ; மிகத் தெளிவான
**प्रण** - पु० திட நிச்சயம் ; பிரதிக்ஞை ; வாக்குறுதி ; உறுதி
**प्रणत** - वि० நமஸ்கரித்த ; தாழ்மையான ; வணங்கப்பட்ட ; குனிந்த
**प्रणय** - पु० அன்பு ; காதல் ; வினயம் ; நம்பிக்கை
**प्रणयिनी** - स्त्री० காதலி ; மனைவி
**प्रणयी** - पु० காதலன் ; கணவன் ; அன்பன்
**प्रणव** - पु० ஓங்கார மந்திரம் ; கடவுள்
**प्रणाम** - पु० வணக்கம் ; நமஸ்காரம்
**प्रणाली** - स्त्री० வாய்க்கால் ; முறை ; வகை ; திட்டம் ; வழக்கம்

**प्रणीत - वि०** அமைக்கப்பட்ட; இயற்றப்பட்ட; திருத்தப் பட்ட; அனுப்பப்பட்ட

**प्रणेता - पु०** அமைப்பவன்; இயற்றுபவன்; செய் பவன்

**प्रताप - पु०** பெருமை; வீரம்; வலிமை; பராக்கிரமம்; சூடு; ஆண்மை

**प्रतापी - वि०** பராக்கிரமசாலி யான; ஆண்மையுள்ள; வீரனான

**प्रतारणा - स्त्री०** சூது; மோசடி

**प्रति - उप०** எதிரே; விரோத மாய்; பதிலாய்; ஒவ் வொரு; குறித்து, சம மான முதலிய அர்த்தங் களைக் காட்டும் வகைச் சொல்; **अव्य०** பக்கமாக; குறித்து; **स्त्री०** நகல்; பிரதி

**प्रतिकार / प्रतीकार पु०** பழி வாங்குதல்; நஷ்ட ஈடு; பதில் செய்தல்

**प्रतिकूल - वि०** விரோதமான; எதிரான; மாறுபட்ட

**प्रतिक्रिया - स्त्री०** பதிலுக்குப் பதில்; பழிக்குப்பழி; முயற்சி; உபாயம்; மாறு செயல்; ஒரு செயலின் பயனாக எழும் பிறிதொரு செயல்

**प्रतिग्रह - पु०** பெற்றுக் கொள் ளல்; ஏற்றுக்கொள்ளல்; பிடிப்பு; தானம்; தன் வயமாக்குதல்

**प्रतिघात - पु०** மோதல்; தடை; எதிர்ப்பு

**प्रतिघाती - पु०** எதிரி; எதிர்ப் பவன்

**प्रतिच्छाया - स्त्री०** பிரதிபிம்பம்; நிழல்

**प्रतिज्ञा - स्त्री०** பிரதிக்ஞை; உறுதி; சபதம்

**प्रतिद्वन्द्वी - पु०** போட்டி யிடுபவன்; விரோதி

**प्रतिध्वनि - स्त्री०** எதிரொலி

**प्रतिनिधि - पु०** உருவம்; பிரதி நிதி; பிறர் சார்பில் வேலை செய்பவன்

**प्रतिपक्षी - पु०** விரோதி; எதிரி

**प्रतिपदा - स्त्री०** பிரதமை திதி

**प्रतिपादन - पु०** நன்ருய் எடுத் துரைத்தல்; ஆதாரத்து டன் விளக்குதல்

**प्रतिफल - पु०** பிரதிபிம்பம்; முடிவு; பயன்

**प्रतिबंध - पु०** தடை; ஆக்ஷேபம்

**प्रतिभट - पु०** சமவலிவுள்ள வீரன்

**प्रतिभा - स्त्री०** மகிமை; மதி நுட்பம்; அறிவுத் திறன்; தோற்றம்

**प्रतिम** - वि० சமமான

**प्रतिमा** - स्त्री० விக்கிரகம்; சிலே

**प्रतियोगिता** - स्त्री० போட்டி ; பந்தயம் ; விரோதம்

**प्रतियोगी** - पु० பங்காளி ; பகைவன் ; போட்டியிடுபவன்

**प्रतिरूप** - पु० விக்கிரகம் ; படம் ; மறு உருவம் ; நகல் ; பிரதிநிதி

**प्रतिरोध** - पु० விரோதம்; தடை

**प्रतिलिपि**- स्त्री० நகல்; மறுபிரதி

**प्रतिलोम** - वि० தலைகீழான ; மாறுபட்ட ; எதிரிடையான

**प्रतिवाद** - पु० எதிர் வாதம்

**प्रतिशोध** - पु० பழிக்குப் பழி

**प्रतिष्ठा** - स्त्री० நிலை நிறுத்தல் ; கௌரவம் ; மரியாதை

**प्रतिष्ठित** - वि० கௌரவமுள்ள ; நிலை நாட்டப்பட்ட ; புகழுள்ள

**प्रतिस्पर्धा** - स्त्री० போட்டி

**प्रतिस्पर्धी** - पु० போட்டியிடுபவன் ; எதிராளி

**प्रतिहत** - वि० தடைபட்ட ; நீக்கப்பட்ட ; தோல்வியுற்ற ; நம்பிக்கை இழந்த

**प्रतिहार** / **प्रतिहारी** } पु० வாயிற் காப்போன் ; தடை

**प्रतिहिंसा** - स्त्री० பழி வாங்கல்; எதிர்த்தாக்குதல்

**प्रतीक** - पु० அடையாளம் ; எடுத்துக்காட்டு; உறுப்பு; பாகம் ; சங்கேதம்

**प्रतीक्षा** - स्त्री० எதிர்பார்த்தல் ; மரியாதை

**प्रतीची** - स्त्री० மேற்கு திசை

**प्रतीत** - वि० தெரிந்த ; பிரசித்தியான ; வணக்கத்திற்குறிய

**प्रतीति** - स्त्री० அறிவு ; நம்பிக்கை ; புகழ் ; உணர்வு

**प्रतीप** - वि० அனுகூலமில்லாத ; தலைகீழான ; அன்பில்லாத; அடம்பிடிக்கிற; पु० சந்தனுவின் தந்தை ; ஒரு பொருளணி

**प्रत्यंचा** - स्त्री० வில்லின் நாண்

**प्रत्यक्ष** - वि० பிரத்யக்ஷமான ; பார்க்கக்கூடிய ; புலன்களால் அறியக்கூடிய ; क्रि० எதிரே ; **—दर्शी** - சாட்சி ; நேரில் கண்டவன் ; **—प्रमाण** - காட்சியளவால் குறிப்பிடும் சான்று ; **—वादी** - நேரில் கண்டதைத் தவிர மற்றதை நம்பாதவன் ; உலகாயத வாதி

**प्रत्यभिज्ञा** - स्त्री० காட்சி ; மெய்யறிவு ; தெளிந்த அறிவு

**प्रत्यय** - **पु०** விகுதி (இலக்கணம்) ; நம்பிக்கை ; அறிவு

**प्रत्याशा** - **स्त्री०** நம்பிக்கை

**प्रत्युत** - **अव्य०** **बल्कि** ஆனால்

**प्रत्युत्तर** - **पु०** விடை; விடைக்கு மறு பதில்

**प्रत्येक** - **वि०** **हरेक** ஒவ்வொரு

**प्रथम** - **वि०** முதல் ; எல்லாவற்றிலும் சிறந்த ; —**पुरुष** - தன்னிலை (இலக்கணம்)

**प्रथा** - **स्त्री०** நியமம் ; பழக்க வழக்கம் ; மரபு

**प्रद** - **वि०** கொடுக்கிற (**उदा०** **आनंदप्रद** - மகிழ்ச்சியளிக்கிற

**प्रदत्त** - **वि०** கொடுக்கப்பட்ட

**प्रदर्शक** - **पु०** காண்பிப்பவன்

**प्रदर्शन** - **पु०** காண்பித்தல்

**प्रदर्शनी** - **स्त्री०** கண்காட்சி

**प्रदान** - **पु०** கொடுத்தல்; தானம்

**प्रदाह** - **पु०** சூடு ; எரிச்சல் ; அழிவு

**प्रदीप** - **पु०** விளக்கு ; தீபம்

**प्रदेश** - **पु०** நாட்டின் ஒரு பெரும் பகுதி ; மாநிலம்

**प्रदोष** - **पु०** சூரியாஸ்தமன வேளை; பிரதோஷ காலம்; —பெருங்குற்றம்

**प्रद्योत** - **पु०** கதிர் ; கிரணம் ; ஒளி ; பிரகாசம்

**प्रधान** - **वि०** முக்கியமான ; சிறந்த ; **पु०** பொறுப்பாளி ; தலைவன்

**प्रधानता** - **स्त्री०** முக்கியத்துவம் ; தலைமை ; சிறப்பு

**प्रपंच** - **पु०** உலகம் ; உலகவிஷயங்களின் தொந்தரவு ; ஆடம்பரம்; புரட்டு

**प्रपंची** - **वि०** வஞ்சனையுள்ள

**प्रपात** - **पु०** நீர்வீழ்ச்சி

**प्रपौत्र** - **पु०** பேரனின் பிள்ளை

**प्रफुल्ल** / **प्रफुल्लित** } **वि०** மலர்ந்த; திறந்த; சந்தோஷம் கொண்ட

**प्रबंध** - **पु०** கட்டு ; திட்டம் ; கட்டுரை ; ஏற்பாடு

**प्रबल** - **वि०** பலமுள்ள ; தீவிரமான ; முக்கியமான

**प्रबुद्ध** - **वि०** விழித்துக் கொண்ட ; பிரக்ஞை வந்த ; ஞானம் உதித்த

**प्रबोध** - **पु०** விழிப்பு ; ஞானம் ; எச்சரிக்கை ; உணர்வு மலர்ச்சி

**प्रभंजन** - **पु०** **आँधी** புயல்

**प्रभा** - **स्त्री०** பிரகாசம் ; சோபை ;—**कर** - சூரியன்; —**कीट** - மின்மினிப் பூச்சி

**प्रभात** - **पु०** அதிகாலை

**प्रभाती** - **स्त्री०** காலையில் பாடப்படும் ஒரு பாட்டு

**प्रभाव** - पु० असर செல்வாக்கு ; வல்லமை ; மகிமை

**प्रभु** - पु० தலைவன் ; அரசன் ; கடவுள்

**प्रभुता** - स्त्री० பெருமை ; அதிகாரம் ; ஆதிக்கம்

**प्रभूत** - वि० வெளிவந்த ; அதிகமான ; ஏராளமான

**प्रभेद** - पु० வித்தியாசம்

**प्रमत्त** - वि० போதையுள்ள ; பைத்தியமான ; தவறு செய்கிற

**प्रमदा** - स्त्री० யுவதி

**प्रमा** - स्त्री० உணர்வு; ஞானம்; தெளிந்த அறிவு ; அடிப்படை

**प्रमाण** - पु० ஒப்புக்கொள்ளக் கூடிய விஷயம் ; ருஜா ; எல்லை ; —**पत्र** - அத்தாட்சிப் பத்திரம்

**प्रमाणित** - वि० உண்மை வெளியான ; ருஜாவான ; அத்சாட்சி பெற்ற

**प्रमाद** - पु० மனதின் பலவீனம் ; பிரமை ; தவறு

**प्रमुख** - वि० முதல் ; முக்கிய

**प्रमुदित** - वि० சந்தோஷமான ; மகிழ்ச்சியுள்ள

**प्रमोचन** - पु० விடுவித்தல் ; விடுதலை ; வெளியீடு

**प्रमोद** - पु० பெரு மகிழ்ச்சி

**प्रयत्न** - पु० முயற்சி ; உழைப்பு

**प्रयास** - पु० முயற்சி ; உழைப்பு; கடுமையான வேலை

**प्रयाण** - पु० பிரயாணம் ; புறப்பாடு

**प्रयुक्त** - वि० உபயோகிக்கப்பட்ட ; செலுத்தப்பட்ட

**प्रयोग** - पु० உபயோகித்தல் ; பிரயோகம் ; செலுத்தல்

**प्रयोजन** - पु० காரியம் ; அர்த்தம் ; உத்தேசம் ; உபயோகம் ; பயன்

**प्रयोजनीय** - वि० காரியத்திற்கான ; உபயோகப்படும்படியான ; பயனுக்காக

**प्रलंब** - वि० தொங்குகிற ; நீண்ட ; சோம்பேறியான

**प्रलयंकर** - वि० பிரளயம் உண்டாக்குகிற

**प्रलय** - पु० பிரளயம் ; அழிவு ; சாவு ; பேச்சு மூச்சற்றுப்போதல்

**प्रलाप** - पु० வீண் பேச்சு ; உளறல் ; நொந்து கொள்ளல்

**प्रलेप** - पु० பூசுதல் ; பூச்சு

**प्रलोभ** } पु० பேராசை ; மனதைக் கவரும் பொருள்
**प्रलोभन** }

**प्रवंचना** - स्त्री० வஞ்சகம் ; கபடம் ; ஏமாற்றம்

**प्रवचन** - पु० விளக்கமான பேச்சு ; உபதேசம்

**प्रवर** - वि० சிறந்த ; உயர்ந்த ; எல்லாவற்றிற்கும் மேலான

**प्रवर्तक** - पु० நடத்துபவன்

**प्रवाद** - पु० சம்பாஷணை ; வதந்தி ; பொய்க் குற்றச்சாட்டு

**प्रवाल** - पु० பவழம்

**प्रवास** - पु० அயல் நாட்டு வாசம்

**प्रवासी** - वि० அயல் நாட்டில் வசிக்கிற

**प्रवाह** - पु० நீர்ப்பெருக்கு ; நீரோட்டம் ; தொடர்ச்சியாகக் காரியம் நடத்தல் ; பரம்பரை ; நிகழ்ச்சித் தொடர்

**प्रवाहिता** - वि० பிரவாகமாய் ஓடுகிற ; தடையில்லாமல் பாய்கிற

**प्रविष्ट** - वि० பிரவேசித்த ; நுழைந்த

**प्रवीण** - वि० சாமர்த்தியசாலியான ; கைதேர்ந்த ; திறமையுள்ள

**प्रवृत्त** - वि० தயாரான ; ஈடுபட்ட ; தொடங்கப்பட்ட

**प्रवृत्ति** - स्त्री० பற்றுதல் ; மனப்போக்கு ; ஈடுபாடு ; பழக்க வழக்கம் ; —मार्ग - पु० உலக விவகாரங்களில் ஈடுபாடு ; —विज्ञान - पु० புற உலக அறிவு

**प्रवेश** - पु० நுழைவு ; புகுதல் ; —पत्र - पु० நுழைவுச் சீட்டு ; —शुल्क - पु० நுழைவுக்கட்டணம்

**प्रवेश्य** - वि० நுழையத் தகுதியுடைய ; சேர்க்கத் தகுந்த ; पु० வெளியிலிருந்து வருகிற பொருள் ; இறக்குமதி ; —शुल्क - पु० இறக்குமதி வரி

**प्रव्रज्या** - स्त्री० துறவு ; நாடு துறத்தல் ; அலைவு

**प्रव्राजक** - पु० துறவி ; சந்நியாசி

**प्रशंसक** - वि० புகழுகிற ; முகஸ்துதி செய்கிற

**प्रशंसनीय** - वि० புகழத்தக்க

**प्रशंसा** - स्त्री० துதி ; புகழ்ச்சி

**प्रशस्त**, **प्रशस्य** - वि० புகழத்தக்க ; சிறந்த ; பிரபலமான

**प्रशस्ति** - स्त्री० புகழ் ; சாஸனப் பட்டயம் ; மெய்க் கீர்த்தி

**प्रशांत** - वि० அமைதியான ; —सागर - पु० பசிபிக் கடல்

**प्रशासक** - पुं० ஆட்சியாளன் ; ஆசிரியன்

**प्रशासन** - पुं० அரசாட்சி ; நல்லுரை

**प्रश्न** - पुं० கேள்வி ; —**पत्र** - கேள்வித்தாள்

**प्रश्नोत्तर** - पुं० வினு-விடை

**प्रश्रय** - पुं० ஆதாரம் ; உதவி ; அன்பு

**प्रश्वास** - पुं० வெளிவிடும் மூச்சு

**प्रष्टव्य** - वि० கேட்கத் தகுந்த

**प्रष्टा** - पुं० கேள்வி கேட்பவன்

**प्रसंग** - पुं० சம்பந்தம் ; சந்தர்ப்பம் ; சேர்க்கை ; —**वश** - சந்தர்ப்பத்தில் ; பேச்சுமத்தியில்

**प्रसन्न** - वि० சந்தோஷமான ; அநுகூலமான ; தூயதான

**प्रसन्नता** - स्त्री० மகிழ்ச்சி

**प्रसव** - पुं० மகப்பேறு ; பிறப்பு

**प्रसाद** - पुं० அருள் ; மகிழ்ச்சி ; நைவேத்தியம் ; மன அமைதி

**प्रसादी** - स्त्री० நைவேத்தியம்

**प्रसाधन** - पुं० அலங்காரம் ; ஜோடனே ; அழகுப் பொருள்கள் ; நகைநட்டு

**प्रसार** - पुं० பெருக்கம் ; விரிவு ; பரப்பு

**प्रसिद्ध** - वि० பிரசித்தி பெற்ற ; புகழ் உள்ள

**प्रसिद्धि** - स्त्री० கியாதி ; புகழ் ; வெற்றி

**प्रसुप्त** - वि० தூங்கிய ; ஆழ்ந்து உறங்கிய

**प्रसूत** - वि० பிறந்த

**प्रसूता** - स्त्री० जच्चा பிரசவித்தவள் ; वि० பிரசவித்த

**प्रसून** - पुं० புஷ்பம் ; மலர் ; பழம்

**प्रस्तर** - पुं० கல்

**प्रस्तार** - पुं० பரவுதல் ; விருத்தி

**प्रस्ताव** - पुं० பிரேரணே ; பிரஸ்-தாபம் ; (கொடுக்கவோ, செய்யவோ) முன்வருதல்

**प्रस्तावना** - स्त्री० ஆரம்பம் ; முன்னுரை ; முகவுரை

**प्रस्तावित** - वि० பிரஸ்தாபிக்கப்பட்ட ; தொடங்கப்பட்ட

**प्रस्तुत** - वि० சொல்லப்பட்ட ; முன் நிற்கின்ற ; தயாரான ; எடுத்துக்கொண்ட

**प्रस्थान** - पुं० செல்கை ; யாத்திரை ; புறப்படுதல்

**प्रस्वेद** - पुं० வியர்வை

**प्रहर** - पुं० மூன்று மணி கால அளவு ; யாமம்

**प्रहरी** - पुं० பாராக்காரன்; மணி அடிப்பவன்

**प्रहसन** - पुं० சிரிப்பு; கேலி; நகைச்சுவை நாடகம்

**प्रहार** - पुं० அடி; தாக்குதல்

**प्रहारी** - वि० அடிக்கிற

**प्रहेलिका** - स्त्री० पहेली புதிர்

**प्रांगण** - पुं० முற்றம்

**प्रांजल** - वि० கபடமற்ற; உண்மையான; சுத்தமான; அழகும் எளிமையும் நிறைந்த

**प्रांत** - पुं० மாகாணம்; எல்லை; மாநிலம்

**प्रांतर** - पुं० பாழ்வெளி; பொந்து; நடுப்பகுதி; நெடுஞ்சாலை

**प्रांतीय** - वि० மாகாணத்து; மாநிலத்து

**प्राकार** - पुं० வெளிச் சுவர்; கோவில் பிராகாரம்; விதம்; முறை

**प्राकृत**, **प्राकृतिक** - वि० இயற்கையான

**प्राची** - स्त्री० கிழக்கு

**प्राचीन** - वि० கிழக்கேயுள்ள; பண்டையக் காலத்திய

**प्राचीर** - पुं० வெளிச் சுவர்; மதில்; பிராகாரம்

**प्राच्य** - वि० கிழக்கே உண்டான; கீழை நாட்டு; பழைய காலத்து

**प्राज्ञ** - पुं० அறிவாளி; வித்துவான்; ஞானி

**प्राज्ञा** - स्त्री० அறிவு; ஞானம்; அறிவுள்ளவள்

**प्राण** - पुं० பிராணன்; உயிர்; காற்று — **घात** - கொலை; — **घातक**- கொலையாளி; — **त्याग**- உயிர் விடுதல்; தற்கொலை; — **दंड** - கொலை தண்டனை; — **धन** - மிகப் பிரியமான; — **धारी** - உயிருள்ள; பிராணி; உயிரினம்; — **नाथ** - மிக அன்பானவன்; கணவன்; — **प्रद** - உயிரளிக்கிற; — **पात** - கொலை; கொல்லுதல்

**प्राणांत** - पुं० மரணம்

**प्रात**, **प्रातःकाल** - पुं० விடியற்காலை; अव्य० காலையில்

**प्राथमिक** - वि० முதல்

**प्रादुर्भाव** - पुं० வெளியாகுதல்

**प्रादेशिक** - वि० குறிப்பிட்ட பிரதேசத்திலுள்ள; உள்நாட்டு; — **भाषा** - வட்டார மொழி; மாநிலமொழி

**प्राप्त** - वि० அடைந்த; கிடைத்த

**प्राप्ति** - स्त्री० கிடைத்தல்; லாபம்

**प्राप्य** - वि० அடையத்தக்க; கிடைக்கக் கூடிய

**प्रामाणिक** - वि० அத்தாட்சி பெற்ற; ஒப்புக்கொள்ளக் கூடிய

**प्रायः** - अव्य० முக்கியமாய்; அநேகமாய்; பெரும்பாலும்

**प्राय** - पु० மரணம்; பட்டினிச் சாவு; மிகுதி वि० சமமான; நிறைந்த

**प्रायद्वीप** - पु० தீபகற்பம்

**प्रायश्चित्त** - पु० பிராயச்சித்தம்; செய்த பாபத்தை போக்கச்செய்யும் அறச் செயல்

**प्रायोपवेश** / **प्रायोपवेशन** - पु० அன்ன ஆகாரமின்றி கிடந்து உயிர் விடுதல்

**प्रारंभ** - पु० தொடக்கம்

**प्रारंभिक** - वि० அடிப்படையான; முதன் முதல் தொடங்குகிற

**प्रारब्ध** - वि० ஆரம்பிக்கப் பட்ட; पु० விதி; பாக்கியம்

**प्रार्थना** - स्त्री० வேண்டுகோள்; வேண்டுதல்

**प्रार्थी** - वि० வேண்டுகிற

**प्रालंब** - वि० நீண்டு தொங்குகிற

**प्रालेय** - पु० பனிக்கட்டி

**प्रारूप** - पु० நகல்

**प्राशन** - पु० உணவு; ஆகாரம்

**प्राश्निक** - पु० கேள்வி கேட்பவன்; வினா தொடுப்பவன்; சாட்சி

**प्रासंगिक** - वि० சந்தர்ப்பத்துக்கேற்ற

**प्रासाद** - पु० மாளிகை

**प्रिय** - वि० அன்புள்ள; —**तम**- மிக அன்புள்ள கணவன்; —**दर्शी** - எல்லோரிடமும் அன்புள்ள; —**भाषी, वादी** - இனிமையாய்ப் பேசுகிறவன்; —**वर** - மிகப் பிரியமுள்ள

**प्रिया** - स्त्री० மனைவி; காதலி

**प्रीत** - वि० அன்புள்ள; स्त्री० **प्रीति** அன்பு; காதல்

**प्रीतम** - पु० கணவன்; அன்பன்

**प्रीति** - स्त्री० அன்பு; —**भोज, भोजन** - பாராட்டு விருந்து

**प्रेक्षक** - पु० பார்ப்பவன்

**प्रेक्षण** - पु० பார்த்தல்; காணுதல்; கண்களின் அபிநயம் வேடிக்கை முதலியன

**प्रेक्षा** - स्त्री० பார்த்தல்; காட்சி; நன்மை, தீமை காணும் விவேகம் —**गृह** - அரசனின் ஆலோசனை மண்ட

பம்; நாடகசாலை; —छुड़ाना- சிறையிலிருந்து விடுவிக்க

**प्रेत** - पु० பிணம்; பிசாசு

**प्रेम** - पु० அன்பு; காதல்; ஆநந்தம்

**प्रेमालाप** - पु० அன்பு ததும்பும் பேச்சு

**प्रेमी** - पु० அன்பன்; காதலன்

**प्रेयसी** - स्त्री० காதலி; மனைவி

**प्रेरक** - पु० தூண்டுபவன்; அனுப்புபவன்

**प्रेरणा** - स्त्री० தூண்டுதல்; அனுப்புதல்

**प्रेरित** - वि० தூண்டப்பட்ட

**प्रेषक** - पु० அனுப்புபவன்

**प्रेषण** - वि० அனுப்புதல்

**प्रेषित** - वि० அனுப்பப்பட்ட

**प्रोत** - वि० நன்றாய்க் கலந்த

**प्रोत्साह** - पु० அதிக உற்சாகம்

**प्रोत्साहन** - पु० நன்றாய் உற்சாக மூட்டல்; ஊக்கமூட்டல்

**प्रौढ़** - वि० யௌவன நிலையை அடைந்த; பக்குவமான; கம்பீரமான; உயர்ந்த

**प्लावित** - वि० நீரில் மூழ்கிய

## फ

**फँका** - पु० துண்டு; ஒருதடவை வாயில் போட்டுக் கொள்ளக்கூடிய அளவு

**फँकी** - स्त्री० ஒரு தடவைக் கான மருந்துப் பொடி

**फँद** - पु० சூது; ஏமாற்று; கபடம்; துன்பம்

**फँदा** - पु० சுருக்கு —मारना - வலையில் சிக்கவைக்க

**फँसना** - अ० சிக்க; மாட்டிக் கொள்ள

**फँसाना** - स० சிக்கவைக்க; மாட்ட; வசமாக்க

**फ़क** - वि० நிறம் கெட்ட; வெளுத்த

**फ़क़त** - क्रि० सिर्फ़ மாத்திரம்; மட்டும்

**फ़क़ीर** - पु० பிச்சைக்காரன்; பக்கிரி; துறவி; ஏழை

**फ़क़ीरी** - स्त्री० பிச்சை எடுத்தல்; சன்னியாசம்; ஏழ்மை

**फक्कड़** - पु० திட்டு; வசவு; தன்போக்கிலே செல்பவன்; பிறருக்கடங்காதவன்; —बाज़ - பிறரைத் திட்டுகிற; பிழைகளைக் காட்டி கண்டிக்கிற

**फ़क़्र** / **फ़क्र** - स्त्री० ஏழ்மை; துறவு; திருப்தி

**फ़ख** - पु० கர்வம்; கர்வப்படும் விஷயம்

**फ़खिया** - क्रि० கர்வத்துடன்

**फगुआ** - पु० फाग ஹோலிப்பண்டிகை; ஹோலிப் பாட்டு

**फ़जर** - स्त्री० அதி காலே

**फ़ज़ल** - पु० கிருபை; அருள்

**फ़ज़ीलत** - स्त्री० மேன்மை; உயர்ந்த குணம்

**फ़ज़ीहत** - स्त्री० கெட்ட நிலை மை; அவமானம்; இழி நிலே

**फ़ज़ूल** - वि० பிரயோஜனமில் லாத; அர்த்தமில்லாத; —ख़र्च - வீண் செலவு செய்பவன்

**फ़ज़्ल** - पु० தயவு; அருள்; வித்தை; மேன்மை

**फटक** - पु० ஸ்படிகக் கல்

**फटकना** - क्रि० உடனே; அக் கணமே स० புடைக்க : अ० பிரிய; போக; துடிக்க

**फटकाना** - स० பிரிக்க; உதற

**फटकार** - स० திட்டுதல்; அதட்டுதல்; அவமதிப்புச் சொல்

**फ़टकारना** - स० உதறி அடிக்க; லாபமடைய; அதட்ட

**फटना** - अ० கிழிய; பிளக்க; வெடிக்க; முறிய

**फटफटाना** - अ० துடிதுடிக்க; உளற

**फटहा** - वि० கிழிந்த

**फटा** - वि० கிழிந்த; முறிந்த; உளறுகிற स्त्री० பாம்பி னது படம்; பற்கள்; கபடம்

**फटाटोप** - पु० பாம்பின் படம் விரித்தல்

**फटाटोपी** - पु० பாம்பு

**फटेहाल** - वि० மிக ஏழையான

**फटिक** - पु० ஸ்படிகம்; சல வைக் கல்

**फटीचर** - पु० தோசி

**फड़** - स्त्री० சூதாட்டம்; சூதாடுமிடம்; கடையில் முதலாளி உட்காருமிடம்; பறவைகள் இறக்கையை அடிப்பதால் உண்டாகும் சத்தம்

**फड़क** / **फड़कन** } स्त्री० துடித்தல்; துடிப்பு

**फड़कना** - अ० குலுங்க; துடிக்க; அசைய

**फण** - पु० பாம்பின் படம்; மூக்கின் நுனி

**फणी** - पु० பாம்பு

**फ़तवा** - पु० ஒரு செயலின் தகுதி அல்லது தகுதியின் மையைப் பற்றி அறநூல் களை ஒட்டி இஸ்லாமிய மதகுருவினுல், அளிக்கப் படும் தீர்ப்பு

**फ़तह** - स्त्री० जीत வெற்றி; —मंद - வெற்றியுள்ள;

**शुभ** - **वि०** சுபமான ; நல்ல ; —**कामना** - பிறருக்கு நன்மை ஏற்பட வேண்டுமென்கிற விருப்பம் ; —**चिंतक** - நன்மையைக் கோருகிற

**शुभागमन** - **पु०** மங்களகரமான நல்வரவு

**शुभाकांक्षी** - **वि०** நலம் விரும்புகிற

**शुभ्र** - **वि०** வெள்ளையான

**शुभ्रता** - **स्त्री०** வெண்மை

**शुमार** - **वि०** எண்ணிக்கை ; கணக்கு ; —**करना** - கணக்கில் சேர்க்க

**शुमारी** - **स्त्री०** கணக்கு எண்ணுதல் ; (உ-ம்) **मर्दुम शुमारी** - ஜனத்தொகைக் கணக்கு

**शुमाल** - **पु०** வடக்கு

**शुरू** - **पु०** தொடக்கம்

**शुल्क** - **पु०** சம்பளம் ; கட்டணம் ; வரி ; வாய்தாத் தொகை

**शुश्रूषा** - **स्त्री०** தொண்டு ; பணிவிடை

**शुष्क** - **वि०** உலர்ந்த ; ரசமற்ற

**शूकर** - **वि०** பன்றி

**शून्य** - **पु०** ஆகாயம் ; சூன்யம் ; பூஜ்யம் ; **वि०** காலியான ; உருவமற்ற

**शूप** - **पु०** **सूप** முறம்

**शूम** - **पु०** கஞ்சன்

**शूर** - **पु०** சூரன் ; வீரன்

**शूल** - **पु०** வலி ; வேல் ; வாத சூலை ; —**उठना** - குத்துவலி எடுக்க ; —**देना** - அதிக வேதனையுண்டாக்க

**शूलना** - **अ०** குத்துவலியெடுக்க ; துன்பப் படுத்த

**शूली** - **पु०** பரமசிவன் ; சூலரோகம் ; **स्त्री०** வலி ; துன்பம்

**शृंखल** - **पु०** சங்கிலி ; ஒட்டியாணம் ; விலங்கு

**शृंखला** - **स्त्री०** வரிசை ; சங்கிலி ; ஒட்டியாணம் ; —**बद्ध** - தொடர்ச்சியான

**शृंग** - **पु०** மலையுச்சி ; கொம்பு

**शृंगार** - **पु०** அலங்காரம் ; சிங்காரம் ; —**दान** - பவுடர், குங்குமம் முதலியவை வைக்கும் பெட்டி

**श्रृगाल** - **पु०** **सियार** நரி

**शेख़** - **पु०** முகம்மதின் வம்சத்தாரின் பட்டம் ; இஸ்லாமிய மதகுரு ; —**चिल्ली** - **पु०** மனக்கோட்டை கட்டுபவன் ; முட்டாள்

**शेखर** - **पु०** தலை ; கிரீடம் ; தலை உச்சி ; சிகரம்

**शेख़ी** - **स्त्री०** கர்வம்; தற்புகழ்ச்சி; **—बघारना, मारना** - டம்பம் அடித்துக் கொள்ள; **—बाज़** - தற்பெருமை செய்துகொள்பவன்

**शेफ़्ता** - **वि०** பற்றுதலுள்ள

**शेर** - **पु०** சிங்கம்; உருதுவில் இரண்டு வரிகளில் அமையும் ஒரு கவிதை; **—बबर** - நன்கு வளர்ந்த சிங்கம்; **—होना** - பயமற்றிருக்க

**शेरवानी** - **स्त्री०** நீண்ட கோட்டு

**शेल** - **पु०** ஈட்டி

**शेवाल** - **पु०** நீர்ப்பாசி

**शेष** - **पु०** பாக்கி; முடிவு; ஆதிசேஷன்; **वि०** மிஞ்சிய; முடிந்த; **—पूर्ति** - அனுபந்தம்

**शै** - **स्त्री०** பொருள்; பண்டம்

**शैतान** - **पु०** துர்த்தேவதை; சைத்தான்; போக்கிரி; **वि०** போக்கிரியான

**शैतानी** - **स्त्री०** போக்கிரித்தனம்; **वि०** போக்கிரித்தனமுள்ள

**शैथिल्य** - **पु०** தளர்ச்சி; சோம்பல்

**शैदा** - **वि०** காதல் கொண்ட

**शैदाई** - **पु०** காதலன்

**शैल** - **पु०** மலை; பெரும் பாறை; **वि०** கல்போன்று கடினமான; பாறைப் பாங்கான; கல் பற்றிய

**शैली** - **स्त्री०** முறை; நடை; மொழி நடை

**शैलूष** - **पु०** நடிகன்; போக்கிரி

**शैव** - **पु०** சைவமதம்; சைவன்; **वि०** சிவனைப் பற்றிய

**शैवाल** - **पु०** நீர்ப்பாசி

**शैशव** - **पु०** குழந்தைப் பருவம்; சிறு பிராயம்

**शोक** - **पु०** வருத்தம்; துயரம்

**शोकाकुल** - **वि०** சோகம் நிறைந்த; வருந்துகிற

**शोख़** - **वि०** பிடிவாதமான; சஞ்சலமான; நன்கு பிரகாசிக்கும் நிறமுள்ள

**शोख़ी** - **स्त्री०** பிடிவாதம்; துஷ்டத்தனம்; சஞ்சலம்

**शोच** - **पु०** துக்கம்; கவலை

**शोचनीय** - **वि०** கவலைக்கிடமான; வருந்தத்தக்க

**शोण** - **पु०** சிவப்பு; தீ; ரத்தம்; ஒரு ஆறு

**शोणित** - **वि०** சிவந்த; **पु०** ரத்தம்

**शोध** - **पु०** திருத்தல்; ஆராய்ச்சி; தேடுதல்

**शोधक** - पुं० திருத்துபவன் ; ஆராய்பவன்

**शोधन** - पुं० சோதித்தல் ; தேடுதல் ; பிழை திருத்தல்

**शोधना** - स० சுத்தம் செய்ய ; போதிக்க ; பிழை திருத்த ; ஆராய

**शोभन** - वि० அழகான ; மங்களகரமான ; உத்தமமான

**शोभना** - अ० சோபிக்க

**शोभा** - स्त्री० அழகு ; சோபை; பெருமை ; —**कर, वह** - பெருமையளிக்கிற

**शोभायमान** } **शोभित** } वि० அழகான ; சோபிக்கிற ; விளங்குகிற

**शोर** - पुं० **शोरगुल** பெரும் சத்தம் ; குழப்பம் ; புகழ்

**शोरबा** - पुं० குழம்பு ; சாறு

**शोरा** - पुं० வெடியுப்பு; —**पुश्त**- அதிகப் பிரசங்கியான

**शोरिश** - स्त्री० இரைச்சல் ; சச்சரவு ; கரிப்பு ; கலகம்

**शोला** - पुं० தீக்கொழுந்து ; —**खू** - உக்கிரமான சுபாவமுள்ள ; —**रू** - மிக்க அழகான

**शोशा** - पुं० அற்புதமான விஷயம் ; நுனி

**शोषक** - पुं० உறிஞ்சுகிறவன் ; வாட்டுகிறவன்

**शोषण** - पुं० உறிஞ்சுதல் ; சுரண்டுதல் ; வாட்டுதல் ; அழித்தல்

**शोषित** - वि० பீடிக்கப்பட்ட ; ஒடுக்கப்பட்ட ; சுரண்டப்பட்ட

**शोहदा** - पुं० காவாலி ; சோதா

**शोहरत** - स्त्री० } **शोहरा** - पुं० } பெயர் ; புகழ்

**शौक़** - पुं० பெரு விருப்பம் ; பற்றுதல் ; மோகம் ; —**से** விருப்பப்படி ; தயக்கமின்றி

**शौक़त** - स्त्री० **शान** பகட்டு

**शौक़िया** - क्रि० அதிக விருப்பத்துடன் ; वि० மிக்க விருப்பம் நிறைந்த

**शौक़ीन** - पुं० தீவிர விருப்பமுள்ளவன்; உல்லாச புருஷன் ; वि० ஷோக்கான ; மிக ஆடம்பரமான

**शौक़ीनी** - स्त्री० தீவிர விருப்பம் ; மோகம் ; பகட்டு

**शौच** - पुं० சுத்தம் செய்து கொள்ளுதல்; தூய்மைப் படுத்திக் கொள்ளுதல் ; மலம் கழித்தல்

**शौध** - वि० சுத்தமான

**शौहर** - पु० கணவன்

**श्मशान** - पु० மயானம்

**श्याम** / **श्यामल** } वि० கருநீலமான

**श्येन** - पु० ராஜாளி ; கழுகு

**श्रद्धा** - स्त्री० நம்பிக்கை ; சிரத்தை ; மரியாதை

**श्रद्धेय** - वि० பூஜிக்கத்தக்க ; மதிக்கத் தக்க

**श्रम** - पु० களைப்பு ; உழைப்பு ; —**कण, जल** - வியர்வை ; ——**जीवी** - பாடுபட்டு வாழ்பவர் ; பாட்டாளி

**श्रमण** - पु० புத்தபிக்ஷு ; முனிவர் ; தொழிலாளி

**श्रमी** - पु० உழைப்பவன்

**श्रवण** / **श्रवन** } पु० காது ; காதால் கேட்டல்

**श्रव्य** - वि० கேட்கத் தகுந்த

**श्रांत** - वि० களைத்த ; வாடிய

**श्रांति** - स्त्री० களைப்பு ; இளைப்பாறுதல் ; வாட்டம்

**श्रावण** - पु० ஆவணி மாதம்

**श्री** - स्त्री० லக்ஷ்மி ; செல்வம் ; சோபை ; —**खंड** - வெள்ளைச் சந்தனம் ; ஓர் இனிப்பு பக்ஷணம் ; —**गणेश** - ஆரம்பம் ; —**मान, युत** - ஸ்ரீமான் ; திருவாளர்

**श्रीफल** - पु० நெல்லிக்காய் ; வில்வம் ; தென்னை ; செல்வம்

**श्रुत** - पु० கேட்கப்பட்ட ; பிரசித்தமான ; அறியப்பட்ட

**श्रुति** - स्त्री० கேட்டல்; வேதம்; ஊர்வதந்தி ; அலர்

**श्रुवा** - पु० மரக்கட்டையால் செய்யப்பட்ட நீண்ட அகப்பை

**श्रेणी** - स्त्री० படிக்கட்டு ; வகுப்பு ; வரிசை ; தரம்

**श्रेय** - वि० மிகச்சிறந்த ; पु० பெருமை ; புகழ் ; முக்தி

**श्रेयस्कर** - वि० மங்களகரமான

**श्रेष्ठ** - वि० மிகச் சிறந்த

**श्रोता** - पु० கேட்பவன்

**श्रोतव्य** - वि० கேட்கத்தக்க

**श्लाघनीय** - वि० கொண்டாடத் தக்க ; புகழத்தக்க

**श्लाघा** - स्त्री० புகழ்ச்சி ; முகஸ்துதி ; பாராட்டு

**श्लाघ्य** - वि० புகழத்தக்க ; சிறந்த ; மதிக்கத் தக்க

**श्लील** - वि० உத்தமமான ; அழகான

**श्लेष** - पु० ஆலிங்கனம் ; சேர்க்கை ; ஒரு சொல்லணி

**श्लेष्म** - पु० கபம்

**श्वपच** - **पु॰** சண்டாளன்
**श्वशुर** - **पु॰ ससुर** மாமனார்
**श्वान** - **पु॰** நாய்
**श्वास** - **पु॰** மூச்சு ; சுவாசம்
**श्वासा** - **स्त्री॰** பிராணன்
**श्वेत** - **वि॰** வெண்மையான ; பிரகாசமான
**श्वेतांबर** - **पु॰** ஜைனர்களில் ஒரு பிரிவு

**ष**

**षंड** - **पु॰** எருது ; அலி ; குவியல் ; கூட்டம் ; மந்தை
**षट्** - **वि॰** ஆறு (எண்ணிக்கை) ; —**कोण** - ஆறு கோணங்கள் ; அறுகோண வடிவுள்ள ; —**पद** - குளவி ; வண்டு ; ஆறு அடிகளுள்ள செய்யுள்
**षड्यंत्र** - **पु॰** சதியாலோசனை
**षोड़श** - **वि॰** பதினாறு

**स**

**संक** - **स्त्री॰** ஐயம் ; பிரமை ; அச்சம்
**संकट** - **वि॰** குழப்பமான ; அடர்த்தியான ; அபாயமான ; **पु॰** கஷ்டம் ; ஆபத்து ; கூட்டம் ; பிளவு
**संकर** - **पु॰** கலப்பு
**संकरा** - **वि॰** குறுகிய ; **पु॰** சங்கடம் ; **स्त्री॰** சங்கிலி
**संकराना** - **स॰** குழப்ப ; கஷ்டமாக்க ; குறுகலாக்க
**संकरित** - **वि॰** சேர்ந்த ; கலந்த
**संकल** - **पु॰** சங்கிலி
**संकलन** - **पु॰** திரட்டுதல் ; கூட்டுதல்
**संकलित** - **वि॰** திரட்டிய ; தேர்ந்தெடுத்த ; கூட்டிய
**सँकल्प** - **पु॰** நிச்சயம் ; மன உறுதி ; தீர்மானம் ; திட எண்ணம்
**संकीर्ण** - **वि॰** குறுகிய ; அற்பமான ; குழப்பமான
**संकुचित** - **वि॰** சங்கோசப் படுகிற ; சுருங்கிய ; குறுகிய ; அற்பமான
**संकुल** - **वि॰** நிரம்பிய
**संकेत** - **पु॰** ஜாடை ; குறி
**संकोच** - **पु॰** சங்கோசம் ; தயக்கம்
**संकोची** - **वि॰** சங்கோசப் படுகிற
**संक्रामक** - **पु॰** தொத்து நோய் ; **वि॰** பரவுகிற ; தொத்துகிற
**संक्षिप्त** - **वि॰** சுருக்கமான
**संक्षेप** - **पु॰** சுருக்கம்
**संक्षेपतः** - **क्रि॰** சுருக்கமாய்
**संखिया** - **स्त्री॰** பாஷாணம்
**संख्या** - **स्त्री॰** எண்ணிக்கை

**संग** - पु० சேர்க்கை ; சந்திப்பு ; கல் ; **क्रि० साथ** கூட
**संगठन** - पु० அமைப்பு
**संगठित** - वि० திரட்டி பலப் படுத்திய; நன்கு அமைத்த
**संगत** - स्त्री० சேர்கை ; **वि०** சேர்த்த; கூட்டின
**संगतराश** - पु० கற்தச்சன்
**संगति** - स्त्री० சேர்க்கை ; தொடர்பு ; பொருத்தம் ; உபயோகம்
**संगदिल** - वि० கல் நெஞ்சுள்ள
**संगम** - पु० நதிகளின் சங்கமம்
**संगमर्मर** - पु० சலவைக்கல்
**संगमूसा** - पु० கருப்புச் சலவைக்கல்
**संगर** - पु० போர் ; நஞ்சு ; ஆபத்து
**संगाती** / **संगी** - पु० தோழன்
**संगिनी** - स्त्री० தோழி ; மனைவி
**संगीन** - स्त्री० துப்பாக்கியின் சனியன் ; **वि०** கல்லால் செய்த ; உறுதியான ; நிலைமை முற்றிய ; **—दिल** - கல் நெஞ்சம் படைத்த
**संग्रह** - पु० சேர்த்தல் ; சுருக்கம் ; நன்கு கிரகித்தல்
**संग्रहालय** - पु० கலைக்கூடம்
**संगृहीत** - वि० திரட்டப்பட்ட ; தொகுக்கப்பட்ட ; சுருக்கப்பட்ட
**संग्राम** - पु० யுத்தம் ; போர்
**संघ** - पु० சமூகம் ; கட்சி; சங்கம் ; புத்த பிக்ஷுக்களின் சபை ; மக்கள் ஆட்சி
**संघटन** - पु० சேர்க்கை ; அமைப்பு
**संघर्ष** / **संघर्षण** - पु० உடைதல் ; போட்டி ; மோதல் ; போராட்டம்
**संघात** - पु० கூட்டம் ; காயம் ; கொலை ; வீடு
**संघाती** - पु० தோழன்
**संघारना** - स० அழிக்க; கொல்ல
**संघाराम** - पु० புத்த பிக்ஷுக்கள் தங்கும் மடம் ; விஹாரம்
**संचय** - पु० சேர்க்கை ; சேகரித்தல் ; குவியல்
**संचालक** - पु० நடத்துபவன் ; மானேஜர் ; அலுவலர்
**संचालन** - पु० நடத்துதல்
**संचित** - वि० சேமித்த ; சேகரிக்கப்பட்ட
**संजात** - वि० பிறந்த
**संजाफ़** - स्त्री० கரை ; துணியின் ஓரத்திலிருக்கும் ஜால்ரா
**संजीदा** - वि० கம்பீரமான; அறிவுள்ள; தகுதியுள்ள

**संजीवन** - **वि०** உயிரளிக்கிற
**संजीवनी** - **स्त्री०** புத்துயிரளிக்கும் மருந்து
**संजोग** - **पु० दे० संयोग**
**सँझला** - **वि०** மூன்றுவது
**सँझा** - **स्त्री०** விவேகம் ; புத்தி ; பெயர்ச்சொல் ; —**हीन** - பிரக்ஞையற்ற
**संड़सा** - **पु०** இடுக்கி ; சிம்டா
**संड़ा** - **वि०** பருத்த
**संड़ास** - **पु०** கக்கூஸ்
**संत** - **पु०** சாது ; சன்னியாசி ; ஈசனடியார்
**संतत** - **अव्य०** எப்பொழுதும் ; இடைவிடாமல்
**संतप्त** - **वि०** சூடான ; துக்கப்பட்ட ; சூடாக்கப்பட்ட
**संतरा** - **पु०** கமலா ஆரஞ்சு
**संतराश** - **पु० दे० संगतराश**
**संतरी** - **पु०** காவல்காரன்
**संतान** - **स्त्री०** மக்கள்; குழந்தை
**संताप** - **पु०** சூடு ; துக்கம்
**संतापी** - **पु०** துக்கம் உண்டாக்குபவன் ; துயரமுள்ளவன், **वि०** எரிக்கிற ; தீமை செய்கிற
**संतुष्ट** - **वि०** மனநிறைவுள்ள ; மகிழ்ச்சியுள்ள
**संतोष** - **पु०** பொறுமை ; திருப்தி ; மகிழ்ச்சி; சுகம்
**संतोषी** - **पु०** திருப்தி அல்லது மகிழ்ச்சியுள்ளவன்
**संदर्भ** - **पु०** சந்தர்ப்பம் ; சூழ்நிலை ; நேரம் ; கட்டுரை
**संदल** - **पु०** சந்தனம்
**संदिग्ध** - **वि०** சந்தேகமுள்ள
**संदूक़** - **पु०** பெட்டி ; —**चा, ची, ड़ी** - சிறு பெட்டி
**संदेश** / **संदेशा** - **पु०** செய்தி ; தூது
**संदेह** - **पु०** சந்தேகம் ; ஐயம்
**संधान** - **पु०** குறி வைத்தல் ; தேடுதல்
**संधि** - **स्त्री०** சந்திப்பு ; உடன்படிக்கை
**संध्या** - **स्त्री०** மாலை நேரம்
**संपत्ति** / **संपद्** / **संपदा** - **स्त्री०** ஐசுவரியம் ; செல்வம்
**संपन्न** - **वि०** நிறைந்த ; செல்வமுள்ள ; வளமுள்ள
**संपर्क** - **पु०** சம்பந்தம் ; தொடர்பு; பற்றுதல் ; கலப்பு
**संपा** - **स्त्री०** மின்னல்
**संपादक** - **पु०** பத்திரிகாசிரியர்
**संपादकीय** - **वि०** பத்திரிகாசிரியர் சம்பந்தமான ; **पु०** பத்திரிகைத் தலையங்கம்

**संपादन** - **पुं०** புத்தகத்தையோ பத்திரிகையையோ சீர் படுத்தல் ; வேலையை முடித்தல்

**संपुट** - **पुं०** சம்புடம் ; பேழை

**संपूर्ण** - **वि०** முழுவதுமான ; நிறைந்த

**संपूर्णतः** / **संपूर्णतया** } **क्रि०** முழுவதும்

**संपेरा** - **पुं०** பாம்பாட்டி

**सँपोला** - **पुं०** பாம்புக் குட்டி

**संप्रति** - **क्रि०अभी** இப்பொழுதே

**संबद्ध** - **वि०** இணைக்கப்பட்ட

**संबन्धी** - **वि०** சம்பந்தமுள்ள ; **पुं०** உறவினர் ; சம்பந்தி

**संबल** - **पुं०** வழிச்சாப்பாடு ; வழிச் செலவு ; உறுதுணை

**संबोधन** - **पुं०** எழுப்புதல் ; விளித்தல் ; எச்சரித்தல்

**संबोधना** - **स०** புத்தி புகட்ட

**सँभलना** - **अ०** ஜாக்கிரதையாயிருக்க ; சமாளித்துக் கொள்ள ; நிலைமை சீர்பட

**संभव** - **पुं०** நிகழக்கூடியது ; நிகழ்ச்சி ; உற்பத்தி

**संभवतः** - **अव्य०** பெரும்பாலும்

**सँभार** - **पुं०** ஆயத்தம் ; வளர்த்தல் ; செல்வம்

**सँभारना** / **सँभालना** } **स०** சமாளிக்க

**संभावना** - **स्त्री०** சம்பவிக்கக் கூடிய நிலைமை ; கற்பனை ; லேசான நம்பிக்கை

**संभावित** - **वि०** கற்பனை செய்யப்பட்ட ; நிகழக்கூடிய

**संभाषण** - **पुं०** உரையாடல் ; பேச்சு

**संभूत** - **वि०** சேர்ந்து உற்பத்தியான ; பிறந்த

**संभोग** - **पुं०** புணர்ச்சி ; சிற்றின்பம் துய்த்தல்

**संभ्रांत** - **वि०** கலக்கமடைந்த ; கௌரவிக்கப்பட்ட

**संमत** - **पुं०** ஒப்புக்கொண்ட

**संमति** - **स्त्री०** இசைவு ; சம்மதம் ; ஒப்புதல்

**संयत** - **वि०** கட்டுப்படுத்தப்பட்ட ; மூடப்பட்ட ; புலன்களை அடக்கிய

**संयम** - **पुं०** தடை ; புலனடக்கம் ; தீமையிலிருந்து விலகியிருத்தல்

**संयमी** - **पुं० वि०** ஒழுக்கமுள்ளவன் ; கட்டுப்பாடுள்ளவன் ; அடக்கமுள்ளவன்

**संयुक्त** / **संयुत** } **वि०** சேர்ந்த ; பிணைக்கப்பட்ட

**संयोग** - **पुं०** **संजोग** தற்செயலான சந்திப்பு

**संयोजक** - **पुं०** ஒன்று சேர்ப்பவன் ; கூட்டுபவன்

**संयोजन** - पु० ஏற்பாடு ; சேர்த்தல் ; முன்னேற்பாடு

**संरक्षक** - पु० காப்பாற்றுபவன்

**संरक्षण** - पु० காப்பாற்றுதல்

**संरक्षित** - वि० காப்பாற்றப்பட்ட ; பாதுகாக்கப்பட்ட

**संलग्न** - वि० ஒட்டிய; ஈடுபட்ட

**संलाप** - पु० சல்லாபம் ; உரையாடல் ; பேச்சு

**संवत्** / **संवत्सर** - पु० ஆண்டு; வருஷம் ; சகாப்தம் ; விக்ரமாதித்ய சகாப்தம்

**संवरण** - पु० தவிர்த்தல்; விலக்குதல்; மூடுதல் ; மறைத்தல் ; ஆசைகளை அடக்குதல் ; உள்ளடக்கம்

**सँवरना** - अ० அலங்கரிக்கப்பட ; சீர்படுத்தப்பட

**संवलित** - वि० சேர்ந்த

**संवर्द्धक** - पु० விருத்தி செய்பவன் ; वि० வளர்க்கிற

**संवर्द्धन** - पु० விருத்தியாதல் ; விருத்தியாக்குதல்

**संवाद** - पु० சம்பாஷணை; உரையாடல் ; செய்தி ;—**दाता** - பத்திரிகை நிருபர்

**सँवारना** - स० ஒழுங்கு படுத்த; அலங்கரிக்க

**संविधान** - पु० அரசியல் சட்டம்

**संवेद** - पु० அநுபவம் ; வேதனை

**संवेदन** - पु० அநுபவித்தல் ; தெரிவித்தல் ; உணர்ச்சி

**संशय** - पु० சந்தேகம் ; பயம்

**संशयात्मक** - वि० சந்தேகத்திற்கிடமான

**संशयित** - वि० சந்தேகப்பட்ட

**संशोधक** - पु० சீர்திருத்துபவன்

**संशोधन** - पु० சீர்திருத்துதல்

**संशोधित** - वि० சீர்திருத்திய

**संश्लिष्ट** - वि० சேர்க்கப்பட்ட; அணைத்துக் கொள்ளப்பட்ட ; மருவிய

**संसर्ग** - पु० கூட்டுறவு ; சேர்க்கை; ஆண்-பெண் உறவு

**संसार** - पु० உலகம் ; இல்வாழ்வு

**संसारी** - वि० உலக சம்பந்தமான ; லௌகிகமான

**संसृति** - स्त्री० பிறப்பு இறப்புகளின் வரிசை ; சிருஷ்டி ; சேர்க்கை; உலகம்

**संस्करण** - पु० பதிப்பு ; சீராக்குதல் ; சுத்திகரிப்பு

**संस्कार** - पु० சீராக்குதல்; நல்ல சேர்க்கையின் பலன்

**संस्कृति** - स्त्री० கலாசாரம் ; நாகரிகம் ; சீர்திருத்தம்

**संस्था** - स्त्री० கழகம் ; ஸ்தாபனம் ; நிறுவனம்

**संस्थान** - स्त्री० இருப்பிடம்; பொது இடம்

**संस्थापक** - पु० நிலை நிறுத்துபவன்; ஸ்தாபிப்பவன்

**संस्थापन** - पु० ஸ்தாபித்தல்; நிறுவுதல்; நிலைபெறச் செய்தல்

**संस्मरण** - पु० நல்ல ஞாபகம்; நினைவு; நினைவுக்குறிப்பு

**संहार** - पु० அழிவு; முடிவு

**संहारक** - पु० அழிப்பவன்

**सअद** - पु० அதிர்ஷ்டம்

**सअब** - वि० கடினமான; கசப்பான

**सआदत** - स्त्री० நன்மை;—**मंद** - கீழ்ப்படிதலுள்ள

**सई** - स्त्री० விருத்தி; முயற்சி; உழைப்பு

**सईद** - वि० பாக்கியசாலியான

**सक** - अव्य० முடியும்

**सकट** - पु० வண்டி

**सकत** - स्त्री० பலம்; சக்தி

**सकता** - पु० மூர்ச்சை; **सकते में आना** - ஸ்தம்பித்துப் போதல்; स्त्री० பலம்; திறமை

**सकपकाना** - अ० வியப்படைய; தயங்க; திகைக்க

**सकल** - वि० முழுவதும்; எல்லா

**सकलात** - पु० சால்வை; வெகுமதி; ரஜாய்

**सकाना** - अ० சந்தேகப்பட்ட; பயத்தால் பின் வாங்க

**सकाम** - पु० எண்ணம் ஈடேறியவன்; வெகுமதியை எதிர்பார்த்து காரியம் செய்பவன்

**सकारना** - अ० ஒப்புக்கொள்ள; ஆமோதிக்க

**सकारे** - क्रि० காலையில்

**सक़ालत** - स्त्री० சுமை; கனம்

**सक़ीम** - वि० நோயுள்ள; முற்றமுள்ள

**सकिलना** - अ० நழுவ; நகர; குறுகிவிட

**सक़ील** - वि० கனமான; அஜீரணப்படுத்துகிற

**सकुचना** - अ० வெட்கப்பட; நாண

**सकुचाना** - अ० சங்கோசப்பட; स० சங்கோசத்துக்குள்ளாக்க

**सकुन** - पु० दे० **शकुन**

**सकुनी** - स्त्री० பறவை

**सकून** - पु० தங்குதல்; மன அமைதி

**सकूनत** - स्त्री० இருப்பிடம்

**सकेलना** - स० ஒன்று சேர்க்க

**सकोरा** - पु० ஒருவித மண் பாத்திரம்; மண் கூஜா

**सक्का** - पु० தண்ணீர் கொண்டு வரும் வேலையாள்

**सखरी** - स्त्री० சாதாரணமான சமையல்

**सखा** - पु० தோழன் ; நண்பன் — **भाव** - தோழமை ; ஆண்டவனைத் தோழனாக எண்ணி வழிபடும் தன்மை

**सख़ावत** - स्त्री० உதாரகுணம் ; அள்ளி அள்ளித்தரும் பண்பு

**सखी** - स्त्री० தோழி

**सख़ी** - वि० தாராள குணமுள்ள

**सख़ुन** - पु० பேசும் மொழி ; பழமொழி ; கவிதை ; — **तकिया** - **तकिया-कलाम** வழக்கச்சொல் ; —**फ़हम** - சொல்லின் மர்மத்தை அறிகிற

**सख़्त** - वि० கடுமையான ; — —**दिल** - கொடிய மனமுள்ள

**सख़्ती** - स्त्री० கொடூரம் ; அதட்டுதல் ; கஷ்டம்

**सख्य** - पु० தோழமை

**सगबग** - वि० நன்றாக நனைந்த ; நிரம்பிய ; क्रि० சீக்கிரமாக ; சட்டென

**सगबगाना** - अ० நனைய ; நிச்சயமில்லாமலிருக்க

**सगरा** - वि० எல்லாம் ; அதிகம்

**सगा** - वि० ஒரே தாய் வயிற்றில் பிறந்த

**सगाई** - स्त्री० உறவு ; விவாக நிச்சயம்

**सग़ीर** - वि० சிறிய ;— **सिन**-சிறு வயதுள்ள

**सगुण** - पु० குணங்களோடு கூடிய ; சத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களோடு கூடிய கடவுள்

**सगुनिया** - पु० சகுனம் சொல்லுபவன் ; குறி சொல்லுபவன்

**सगुनौती** - स्त्री० சகுனம் பார்த்தல்

**सगोत** / **सगोती** } पु० உற்றார் உறவினர்

**सघन** - वि० அடர்ந்த

**सच** - वि० உண்மையான

**सचमुच** - क्रि० உண்மையாக

**सचराचर** - पु० அசை பொருள், அசையாப் பொருள்

**सचाई** - स्त्री० உண்மை

**सचान** - पु० ராஜாளி

**सचिंत** - वि० கவலையுள்ள

**सचिक्कण** - वि० வழவழப்பான ; மென்மையான

**सचिव** - पु० மந்திரி ; தோழன்

**सचेत** } **सचेतन** } वि० ஜாக்கிரதையான; உயிருள்ள ; சுய அறிவுள்ள ; உணர்வுள்ள

**सचेष्ट** - वि० முயற்சிக்கிற ; செயலில் ஈடுபட்டுள்ள

**सच्चरित** - वि० நன்னடத்தையுள்ள ; பண்புள்ள

**सच्चा** - वि० உண்மையான

**सच्चाई** - स्त्री० உண்மை

**सच्चिदानंद** - पु० பரம்பொருள்; கடவுள்

**सज** - स्त्री० அழகு ;—**धज-स्त्री०** சிங்காரம்; பகட்டு; அலங்காரம்

**सजग** - वि० விழித்துக் கொண்டிருக்கிற

**सजन** - पु० கணவன் ; நல்ல மனிதன் ; காதலன் ; वि० ஜன நடமாட்டமுள்ள

**सजना** - स० அலங்கரிக்க ; अ० அலங்கரித்துக் கொள்ள

**सजनी** - स्त्री० தோழி ; காதலி ; மனைவி

**सजल** - वि० ஜலம் நிறைந்த ; கண்ணீர் நிரம்பிய

**सजा** - पु० புள்ளினம் ஆர்த்தல் ; கவிதை ; சந்தம்

**सज़ा** - स्त्री० தண்டனை

**सजातीय** - वि० ஒரே ஜாதியைச் சேர்ந்த

**सजाना** - स० சீராக வைக்க ; அலங்கரிக்க,

**सज़ायाफ़्ता** } **सज़ायाब** } वि० தண்டனை பெற்ற; தண்டனைக்குட்பட்ட

**सज़ायार** - वि० தகுதியுள்ள ; நல்ல பலன் தருகிற

**सजाव** - पु० ஆடைத் தயிர் ; அலங்காரம்

**सजावट** - स्त्री० அலங்காரம்

**सज़ावार** - वि० தண்டிக்கத் தகுந்த

**सजीला** - वि० பகட்டான ; அழகுள்ள

**सजीव** - वि० உயிருள்ள ; உற்சாகமுள்ள

**सजीह** - पु० இயற்கை; சுபாவம்

**सज्जन** - पु० கனவான்

**सज्जा** - स्त्री० படுக்கை ; அலங்காரம்

**सज्जाद** - पु० மசூதியில் தொழுபவன்

**सज्जादा** - पु० நமாஸ் படிக்கும் போது கீழே போட்டுக் கொள்ளும் விரிப்பு

**सज्जित** - वि० அலங்கரித்த ; தேவையான சாமான்களோடு கூடிய

**सजी** - स्त्री० சோடாக் காரம்; உவர்மண்

सझिया - पु० பங்குதார் ; கூட்டாளி

सटक - स्त्री० ஹூக்காவின் குழல்

सटकना - अ० மெள்ளத் தப்பித்து மறைந்து போக; 'கம்பி நீட்ட'; துடுப்புப் போட

सटकाना - स० சத்தப்படுத்த ; கம்பால் தட்ட ; கசையால் அடிக்க

सटकारना - स० சாட்டையால் அடிக்க

सटना - अ० ஒட்டிக்கொள்ள

सटपट - स्त्री० ஆச்சரியம் ; சந்தேகம் ; சங்கடம்

सटपटाना - अ० दे० सिटपिटाना

सटर-पटर - वि० அற்பமான ; சாதாரணமான; வீணான

सटसट - क्रि० சீக்கிரமாக ; உடனே

सटा - स्त्री० ஜடை; वि० ஒட்டிக்கொண்டிருக்கிற

सटाना - स० ஒட்ட

सटीक - वि० வியாக்கியானத்துடன் கூடிய புத்தகம்; क्रि० சரியாக

सट्टा - पु० ஒப்பந்தம்; வாய்தா பேரம் ; —बट्टा - நெருங்கிய பழக்கம் ; ஒப்பந்தம் ; சதியாலோசனை

सट्टेबाज़ - पु० சூதாடுபவன்

सट्टी - स्त्री० குறிப்பிட்ட பொருள் விற்கும் கடைத் தெரு ; சந்தை

सठ - पु० दे० शठ

सठियाना - अ० அறுபது வயதாக ; கிழடாகிப் போக; புத்தி மந்தப்பட

सड़क - स्त्री० சாலை ; தெரு

सड़ना - अ० அழுகிப் போக

सड़सठ - वि० அறுபத்தி ஏழு

सड़ाना - स० அழுக வைக்க

सड़ायंध - स्त्री० துர்நாற்றம் ; அழுகல் நாற்றம்

सड़ियल - वि० அழுகின; மட்டரகமான

सत - पु० शत நூறு ; पु० உண்மையான

सतत - पु० எப்பொழுதும்

सतदल - पु० நூறு இதழ்கள் உள்ள தாமரை

सतफेरा - पु० மணம் நிகழும் போது தம்பதிகள் எடுத்து வைக்கும் ஏழுகாலடிகள்; சப்தபதி

सतर - स्त्री० கோடு ; வரிசை; திரை ; वि० கோணலான; கோபமுள்ள

सतराना - अ० கோபப்பட ; சிடுசிடுக்க

**सतर्क** - वि० எச்சரிக்கையான; விழிப்போடுள்ள; தர்க்கத்துடன் கூடிய

**सतलज** - स्त्री० பஞ்சாபில் பாயும் ஐந்து நதிகளில் ஒன்றின் பெயர்

**सतसई**
**सतासैया** } स्त्री० எழுநூறு கவிதைகள் கொண்ட ஒரு நூல்

**सतह** - स्त्री० மேல் பாகம்; மேல் மடிப்பு

**सतहत्तर** - वि० எழுபத்தி ஏழு

**सताना** - स० தொந்தரவு செய்ய; வம்பு செய்ய

**सती** - स्त्री० பதிவிரதை; —होना - உடன் கட்டை ஏற; —त्व - கற்பு

**सतासी** - वि० எண்பத்தி ஏழு

**सतून** - पु० தூண்

**सत्कार** - पु० மரியாதை; உபசரிப்பு

**सत्कीर्ति** - स्त्री० நற்புகழ்

**सत्त** - पु० சாரம்; தத்துவம்

**सत्तर** - वि० எழுபது

**सत्ता** - वि० அதிகாரம்; பக்தி; இருப்பு

**सत्ताईस** - वि० இருபத்தி ஏழு

**सत्ताधिकारी** - पु० அதிகாரி

**सत्तावन** - वि० ஐம்பத்தி ஏழு

**सत्तुआ**
**सत्तू** } पु० சத்து மாவு

**सत्पथ** - पु० நல்வழி; நன்னடத்தை

**सत्पात्र** - पु० உதவி செய்யத் தகுந்தவன்; நல்லவன்

**सत्य** - वि० உண்மையான; அசலான; पु० உண்மை; —निष्ठ - உண்மையைக் கடைப்பிடிக்கிற; —वादी- உண்மை பேசுகிற; —संध- சொல் தவறாத

**सत्यतः** - क्रि० உண்மையாய்

**सत्याग्रह** - पु० உண்மையைக் கடைப்பிடித்தல்; சத்யாக்கிரகம்

**सत्यानास** - पु० சர்வ நாசம்; அழிவு

**सत्यानासी** - वि० சர்வ நாசம் செய்கிற

**सत्र** - पु० சத்திரம்; வீடு; பள்ளியின் படிப்புக் காலத்தில் ஒரு பகுதி

**सत्व** - पु० சாரம்; அதிகாரம்; இயற்கைக்குணம்; உயிர்; சக்தி

**सत्वर** - अव्य० சீக்கிரம்

**सद** - स्त्री० இயற்கை; பழக்கம்; वि० புதிய; क्रि० உடனே; விரைவில்

**सदक़ा** - पु० தானம்; பலி

**सदन** - पु० இருப்பிடம்; வீடு; கோயில்

**सदमा** - पु० மனப் புண் ; அதிர்ச்சி ; துன்பம்

**सदय** - वि० தயையுள்ள

**सदर** - वि० முக்கியமான ; पु० தலைமையதிகாரி இருக்குமிடம் ; தலைவர்

**सदर-आला** - पु० உதவி நீதிபதி

**सदर-मुक़ाम** - पु० காரியாலயத்தின் தலைமை இடம்

**सदरी** - स्त्री० கையில்லாத ஜாக்கெட்

**सदस्य** - पु० அங்கத்தினர் ; உறுப்பினர்

**सदस्यता** - स्त्री० அங்கத்தினர் பதவி ; பதவிக் காலம் ; —**शुल्क** - உறுப்பினர்க் கட்டணம்

**सदहा** - वि० நூற்றுக் கணக்கான

**सदा** - अव्य० எப்பொழுதும் ; स्त्री० சத்தம் ; எதிரொலி

**सदाक़त** - स्त्री० உண்மை ; சாட்சி

**सदाचरण** / **सदाचार** - स० நன்னடத்தை

**सदाचारी** - वि० நன்னடத்தையுள்ள

**सदारत** - स्त्री० தலைமை ; அக்கிராசனம்

**सदावर्त** - पु० **ख़ैरात** ஏழைகளுக்குத் தினம் உணவளித்தல்

**सदाबहार** - वि० வருஷம் முழுவதும் பசுமையாயிருக்கிற (மரம்)

**सदी** - स्त्री० நூற்றாண்டு

**सदृश** - वि० **समान** போன்ற

**सदैव** - अव्य० எப்பொழுதும்

**सद्भाव** - पु० நல்ல கருத்து ; நன்மதிப்பு ; நட்பு

**सद्म** - पु० வீடு ; இருப்பிடம்

**सद्य** / **सद्यः** - अव्य० இப்பொழுதே ; உடனே

**सधना** - अ० காரியம் கைகூட ; தேர்ச்சி பெற

**सधवा** - स्त्री० சுமங்கலி

**सधावर** - पु० கர்ப்பவதி பெண்டிற்கு அளிக்கும் அன்பளிப்பு

**सन्** - पु० வருஷம் ; சகாப்தம்

**सन** - पु० சணல் ; अव्य० ஓடு ; கூட ; இடம்

**सनअत** - स्त्री० சிற்ப வேலை

**सनई** - स्त्री० ஒருவிதச் சணல்

**सनक** - स्त्री० ஒரு குறிப்பிட்ட காரியத்தில் பிடிவாதம் ; பைத்தியம் ; —**सवार होना** - அசட்டுப் பிடிவாதம் ஏற்பட ; பைத்தியம் பிடிக்க

**सनकना** - अ० பைத்தியம் பிடிக்க

**सनकी** - वि० பைத்தியம் பிடித்த

**सनद** - स्त्री० பட்டம்; அத்தாட்சிப்பத்திரம்;—**याफ़्ता** பட்டம் பெற்ற

**सनना** - अ० நனைந்து போக; கலந்து போக; இழைய

**सनम** - पु० அன்பன்; நண்பன்

**सनमानना** - स० மரியாதை செலுத்த; போற்ற

**सनसनी** - स्त्री० பயம்; குழப்பம்; பரபரப்பு

**सनसनाहट** - स्त्री० சலசலப்பு

**सनाअत** - स्त्री० दे० **सनअत**

**सनातन** - वि० மிகப் பழமையான; நிலையான

**सनाय** - स्त्री० சூரத்தாவரை

**सनाह** - पु० கவசம்

**सनीचर** - पु० சனிக்கிழமை

**सनेह** - पु० அன்பு; பிரியம்

**सनेही** - वि० சிநேகமுள்ள

**सन्न** - वि० உணர்ச்சியற்ற; பிரமித்த; திகைத்த

**सन्नद्ध** - वि० தயாரான; கட்டப்பட்ட; ஈடுபட்ட

**सन्नाटा** - पु० தனிமை; சத்தமின்மை; **सन्नाटे में आना** - பிரமித்துப்போக; நாக்கு பேச முடியாமல் போக

**सन्नाह** - पु० दे० **सनाह**

**सन्निकट** - अव्य० வெகு சமீபத்தில்; पु० மிக நெருக்கம்

**सन्निधान** - पु० சமீபம்; தொடர்பு

**सन्निधि** - स्त्री० சமீபம்; சன்னிதி; முன்னிலை

**सन्निपात** - पु० திடீர் வீழ்ச்சி; ஜன்னி

**सन्निविष्ट** - वि० சேர்ந்து உட்கார்ந்த; புகுந்த; தீர்மானிக்கப்பட்ட

**सन्निवेश** - पु० சேர்ந்து உட்காருதல்; நிலைமை; புகுதல்; கூடுதல்; சந்தர்ப்பம்

**सन्निहित** - वि० கூட வைக்கப்பட்ட; அருகிலுள்ள

**सपक्ष** - वि० தன் கட்சியைச் சேர்ந்த; சிறகுள்ள

**सपत्नी** - स्त्री० **सौत** சக்களத்தி

**सपत्नीक** - वि० மனைவியுடன் கூடிய

**सपना** - पु० கனவு

**सपरबाई** - पु० நட்டுவனர்

**सपरना** - अ० வேலை முடிய; குளிக்க

**सपाट** - वि० சமதளமான; வழவழப்பான

**सपाटा** - पु० ஓட்ட வேகம்; பாய்தல்

**सपिंड** - पु० ஒரே குலத்தைச் சேர்ந்தவர்கள்.

**सपुर्द** - **स्त्री०** ஒப்படைத்தல் ; **वि०** ஒப்படைக்கப்பட்ட

**सपूत** - **पु०** நல்ல புத்திரன்

**सपूती** - **स्त्री०** புத்திரனின் புனிதக் கடமைகள் ; நற்புத்திரனைப் பெற்றவள்

**सपेरा** - **पु०** பாம்பாட்டி

**सपोला** - **पु०** பாம்புக் குட்டி

**सप्त** - **वि०** ஏழு ; —**क** - ஏழு பொருள்களின் குழு

**सप्ताह** - **पु०** ஒரு வாரம்

**सप्रीति** - **अव्य०** அன்போடு

**सफ़** - **स्त्री०** வரிசை ; கோடு ; நீளமான பாய்

**सफ़र** - **पु०** யாத்திரை : பயணம் ; —**दाई** - வாத்தியம் வாசிப்பவன் ; —**मैना** - படையின் முன்னணிப் பகுதி

**सफ़री** - **वि०** பிரயாணத்தில் உபயோகப்படுகிற ; **पु०** வழிச் செலவு

**सफल** - **वि०** வெற்றியடைந்த

**सफलता** - **स्त्री०** வெற்றி

**सफलीभूत** - **वि०** வெற்றி பெற்ற ; நிறைவேறிய

**सफ़हा** - **पु०** புத்தகத்தின் பக்கம் ; மேற்பரப்பு

**सफ़ा** - **वि०** சுத்தமான ; வழவழப்பான

**सफ़ाई** - **स्त्री०** சுத்தம் ; தெளிவு; நேர்மை ; விளக்கம்

**सफ़ाचट** - **वि०** சுத்தமான ; வழவழப்பான ; —**करना** - எல்லாவற்றையும் உபயோகப்படுத்த ; அழிக்க

**सफ़ाया** - **पु०** மீதியின்மை ; முடித்துவிடுதல்

**सफ़ी** - **वि०** பரிசுத்தமான

**सफ़ीना** - **पु०** கோர்ட்டுச் சம்மன் ; புத்தகம் ; கணக்கு நோட்டு ; நோட்டு

**सफ़ीर** - **पु०** ராஜ தூதன்

**सफ़ूफ़** - **पु०** சூர்ணம் ; பொடி

**सफ़ेद** - **वि०** வெள்ளையான ; —**पोश** - வெள்ளை ஆடை உடுப்பவன்

**सफ़ेदी** - **स्त्री०** வெண்மை ; —**आना** - கிழத்தன்மை வர ; —**पुतवाना** - வெள்ளையடிக்க

**सफ़्फ़ाक** - **वि०** இரக்கமற்ற

**सब** - **वि०** எல்லாம் ; பூராவும் ; முழுவதும்

**सबक़** - **पु० पाठ** பாடம் ; படிப்பினை

**सबद** - **पु०** ஒலி ; மொழி ; நல்லோரின் நல்மொழி

**सबब** - **पु०** காரணம் ; பயன்

**सबर** - **पु०** மகிழ்ச்சி ; தைரியம்

**सबरी** - स्त्री० கன்னக் கோல்
**सबल** - वि० பலமுள்ள ; சேனையுள்ள
**सबा** - स्त्री० கீழைக் காற்று
**सबील** - स्त्री० சாலை ; உபாயம் ; தண்ணீர்ப்பந்தல் ; முயற்சி.
**सबीह** - वि० அழகான ; நல்ல நிறமுள்ள
**सबुजपैरी** - स्त्री० தோசி ; உருப் படாதவள்
**सबूत** - पु० ருஜு ; பிரமாணம்
**सबूर** - वि० பொறுமையுள்ள ; சகிப்புத்தன்மையுள்ள
**सबेरा** - पु० காலை வேளை
**सबेरे** - अव्य० காலை வேளையில் ; விரைவில்
**सब्ज** - वि० பசுமையான ; புத்தம் புதுக் காய்கறி ; —**क़दम** - தோசி ; —**बख़्त** - சௌபாக்கியமுள்ள ; —**बाग़ दिखलाना** - ஆசை காட்ட
**सब्ज़ा** - पु० பசுமை ; அமைப்பு; தண்ணீர்ப்பந்தல்
**सब्ज़ी** - स्त्री० கீரை ; காய்கறி ; அமைப்பு
**सब्र**-पु० பொறுமை ; திருப்தி ; சகிப்புத்தன்மை
**सभा** - स्त्री० சபை ; பொதுக் கூட்டம் ; குழு ; —**पति** - அவைத்தலைவன் ; —**नेत्री** - அவைத்தலைவி ; —**सद** - சபையோர்; கூட்டத்தார்
**सभागा** - वि० அதிர்ஷ்டசாலி
**सभ्य** - वि० நாகரிகமான ; पु० அங்கத்தினர்
**सभ्यता** - स्त्री० நாகரிகம் ; பண்பாடு
**समंजस** - पु० உசிதமான ; சரியான
**समंद** - पु० குதிரை
**समंदर** / **समुंदर** } पु० கடல்
**सम** - वि० சமமான ; போன்ற
**समअ** - पु० குறைகளைக் கவனித்தல் ; —**बाँधना** - சிறந்த பேச்சையோ, பாட்டையோ கேட்டு லயிக்க
**समकक्ष** - वि० ஒரே வகுப்பைச் சேர்ந்த ; சமானமான
**समकालीन** - वि० ஒரே காலத்தைச் சேர்ந்த
**समकोण** - वि० சமகோணமுள்ள
**समक्ष** - क्रि० முன்னிலையில் ; நேரில்
**समग्र** - वि० எல்லாம் ; முழுவதும்; பூராவும்
**समज** - पु० கால் நடைகளின் கூட்டம் ; மந்தை ; காடு .

**समझ** - स्त्री० அறிவு ; —दार-वि० அறிவுள்ள ; புத்தியுள்ள

**समझना** - अ० புரிந்துகொள்ள ; அறிய ; உணர ; நினைக்க

**समझाना** - स० விளங்கக் கூற ; போதிக்க ; அறிவுறுத்த

**समझौता** - पु० ஒப்பந்தம்

**समतल** - वि० ஒரேமட்டமான ; தூய

**समता** } स्त्री० சமத்துவம் ; சம
**समत्व** } पु० நிலை

**समद** - वि० மதம் பிடித்த ; போதையேறிய ; களிப்புற்ற ; கர்வமுள்ள

**समदन** - पु० காணிக்கை

**समदर्शी** - पु० எல்லோரையும் சமமாகப் பாவிப்பவன்

**समधिक** - वि० மிக அதிகமான

**समधियाना** - पु० சம்பந்தி வீடு

**समधी** - पु० சம்பந்தி

**समन** - पु० விலை ; கோர்ட்டு சம்மன் ; स्त्री० முல்லை

**समन्वय** - पु० வகுக்கப்பட்ட முறை ; காரிய காரணங்களின் தொடர்பை விளக்குதல் ; சந்தர்ப்பம் ; வாய்ப்பு

**समन्वित** - वि० சேர்ந்த ; சேர்க்கப்பட்ட ; ஒழுங்காக அமைந்த ; பொருந்திய

**समय** - पु० நேரம் ; காலம் ; வாய்ப்பு

**समर** - पु० போர் ; சந்ததி ; நல்ல காரியத்தின் பயன் ; செல்வம்

**समरथ** - वि० दे० समर्थ

**समरभूमि** } स्त्री०
**समरांगण** } पु० போர்க்களம்

**समराना** - स० அலங்கரிக்க ; அணிந்துகொள்ள

**समर्थ** - वि० திறமையுள்ள

**समर्थक** - पु० ஆமோதிப்பவர்

**समर्थन** - पु० ஆமோதித்தல்

**समर्पण** - पु० காணிக்கை செலுத்துதல் ; அர்ப்பணம் செய்தல்

**समर्पित** - वि० அர்ப்பணம் செய்த

**समवेत** - वि० ஒன்று சேர்க்கப்பட்ட ; ஒன்று கூடிய

**समवेदना** - स्त्री० வருத்தம் தெரிவித்தல் ; இரங்கல்

**समशीतोष्ण** - वि० தட்ப வெப்ப நிலை சமமாக உள்ள

**समष्टि** - स्त्री० ஒன்று கூடியது ; பலவின் சேர்க்கை அல்லது கூட்டமைப்பு

**समसाम** - स्त्री० உருவின வாள்

**समस्त** - वि० எல்லாம் ; பூரா

**समस्या** - स्त्री० சிக்கலான

விஷயம்; பிரச்சினை; —पूर्ति - செய்யுட்களின் ஒரு அடிக்குத் தகுந்தபடி மற்ற அடிகளை இயற்றிப் பூர்த்தி செய்தல்

**समाँ** - पु० நேரம்; வேளை; —**बाँधना** - கேட்போரை மயக்கும்படி பாட

**समा** - पु० நேரம்; சமயம்; வாய்ப்பு; சாமை அரிசி; **स्त्री०** காட்சி; அழகு

**समाअत** - **स्त्री०** குறைகளைக் கவனித்தல்; ஈரங்கி

**समाई** - **स्त्री०** திறன்; பிரிவு; சாத்தியக் கூறு

**समागत** - वि० வந்திருக்கிற; பெறப்பட்ட

**समागम** - पु० சந்திப்பு; வருகை; சேர்க்கை

**समाचार** - पु० செய்தி; தகவல்; —**पत्र** - செய்தித்தாள்

**समाज** - पु० சமூகம்; சபை; —**वाद** - பொதுவுடமைக் கொள்கை; —**वादी** - பொதுவுடமை வாதி —**सेवक** - சமூகத்தொண்டன்

**समाजत** - **स्त्री०** வெட்கம்; வேண்டுகோள்; முகஸ்துதி; பொய்ப் புகழ்ச்சி

**समादर** - पु० மிக மரியாதை

**समाधान** - पु० தகுந்த பரிகாரம்; சந்தேகத்தைப் போக்குதல்; சமாதானம்

**समाधि** - **स्त्री०** சமாதி நிலை; யோக நிலை; ஆணை; ஒரு பொருளணி; சவக்குழி; —**लगाना** - ஆழ்ந்த தியானத்தில் நிலைத்திருக்க

**समान** - वि० சமானமான; ஈடான

**समाना** - अ० நுழைய; புக; கொள்ள; நிரம்ப

**समानांतर** - पु० சமமான இடைவெளியுள்ள

**समापक** - पु० நிறைவேற்றுபவன்; முடித்து வைப்பவன்

**समापित** - वि० முடிக்கப்பட்ட

**समाप्त** - वि० முடிவடைந்த; நிறைவேறிய

**समाप्ति** - **स्त्री०** முடிவடைதல்

**समारंभ** - पु० சிறப்பாகத் தொடங்குதல்; விழா

**समारोह** - पु० கொண்டாட்டம்; விழா

**समालोचक** - पु० விமரிசனம் செய்பவர்

**समालोचना** - **स्त्री०** விமரிசனம்

**समावर्तन** - पु० திரும்பி வருதல்; காரியம் முடியும்போது

கொண்டாடும் விழா ; — समारोह - பட்டமளிப்பு விழா

**समाविष्ट** - **वि॰** நுழைந்த ; சேர்ந்த ; உள்ளடங்கிய

**समावेश** - **पु॰** உட்புகுதல்

**समिति** - **स्त्री॰** ஸ்தாபனம் ; கமிட்டி ; சபை ; குழு

**समीकरण** - **पु॰** சமமாக்குதல்

**समीक्षा** - **स्त्री॰** நன்ருய்ப் பார்த்தல் ; விமரிசனம் ; இலக்கிய ஆராய்ச்சி

**समीचीन** - **वि॰** உண்மையான ; மிகப் பொருத்தமான

**समीप** - **वि॰** அருகிலுள்ள ; **अव्य॰** அருகில் ; —**वर्ती** - அருகிலிருக்கிற

**समीपता** - **स्त्री॰** அருகாமை

**समीय** - **वि॰** சமமான

**समीर** / **समीरण** - **पु॰** காற்று

**समुंदर** - **पु॰** கடல்

**समुचित** - **वि॰** உசிதமான ; வேண்டிய ; தகுந்த

**समुत्थान** - **पु॰** முன்னேற்றம் ; உற்பத்தி ; தொடக்கம், ஆரம்பம் ; எழுச்சி

**समुदाय** - **पु॰** சேர்க்கை ; கூட்டம் ; சமூகம்

**समुदित** - **वि॰** உண்டான ; ஏற்பட்ட

**समुन्नति** - **स्त्री॰** நல்ல முன்னேற்றம் ; அதிக வளர்ச்சி

**समुल्लास** - **पु॰** அதிக உற்சாகம் அல்லது மகிழ்ச்சி ; அத்தியாயம்

**समुहाना** - **अ॰** எதிரே வர ; போரிட வர

**समूचा** - **वि॰** முழு ; பூரா

**समूम** - **स्त्री॰** உஷ்ணக்காற்று

**समूल** - **क्रि॰** வேருடன் ; முற்றிலும் ; அடியோடு

**समूह** - **पु॰** குவியல் ; கூட்டம்

**समृद्ध** - **वि॰** செல்வம் நிறைந்த ; பொருள் நிறைந்த

**समृद्धि** - **स्त्री॰** செழுமை ; வளப்பம் ; நிறைவு

**समेटना** - **स॰** ஒன்று சேர்க்க

**समेत** - **वि॰** சேர்ந்த ; **क्रि॰ सहित** - கூட ; சேர்ந்து

**समोखना** - **स॰** அறிவுறுத்த

**समौरिया** - **वि॰** சமவயதுள்ள

**सम्त** - **पु॰** திசை ; பக்கம்

**सम्मत** - **वि॰** சம்மதித்த ; ஒப்புக் கொள்ளப்பட்ட

**सम्मति** - **स्त्री॰** அபிப்பிராயம் ; சம்மதம் ; கொள்கை

**सम्मन** - **पु॰** கோர்ட்டின் அழைப்புக் கடிதம், சம்மன்

**सम्मान** - **पु॰** மரியாதை ; கௌரவம் ; மதிப்பு

**सम्मानित** - वि० மதிப்புள்ள ; கௌரவிக்கப்பட்ட

**सम्मिलन** - पु० சந்திப்பு

**सम्मिलित** - वि० கலந்த

**सम्मुख** - अव्य० **सामने** எதிரே

**सम्मेलन** - पु० சந்திப்பு ; சபை; மகாநாடு

**सम्मोहन** - पु० மோகிக்கச் செய்தல் ; மயக்குதல்

**सम्यक** - वि० எல்லா ; முழு ; क्रि० நன்றாக

**सम्राज्ञी** - स्त्री० மகாராணி

**सम्राट** - पु० சக்கரவர்த்தி ; பேரரசன்

**सयाना** - वि० வயது வந்த ; புத்திசாலியான ; தந்திரசாலியான ; —**पन** - தந்திரம் ; புத்திசாலித்தனம் ; செயல்திறன்

**सरंजाम** - पु० செயல் விளைவு ; முடிவு; ஏற்பாடு; நிறைவு; ஆயத்தம்

**सर** - पु० குளம் ; அம்பு ; தலை ; உச்சி; वि० ஜயிக்கப்பட்ட; —**करना** - ஜயிக்க ; —**गर्मी** - ஊக்கம் ; தீவிர முயற்சி ; —**अंजाम** - दे० **सरंजाम**

**सरकंडा** - पु० நாணல்

**सरकना** - अ० நகர ; நழுவ

**सरकश** - वि० கிளர்ச்சி செய்கிற ; சொன்ன பேச்சுக் கேளாத ; பொல்லாத

**सरकाना** - स० நகர்த்த ; கிளர

**सरकार** - स्त्री० அரசாங்கம் ; எஜமான் ; தலைவன்

**सरख़त** - पु० ரசீது ; ஆணைச் சீட்டு ; குத்தகைச் சீட்டு

**सरखुश** - वि० எல்லா விதத்திலும் மகிழ்ச்சியுள்ள

**सरग** - पु० சுவர்க்கம் ; அத்தியாயம் ; எண்

**सरग़ना** - पु० தலைவன் ; முன்னணியிலிருப்பவன்

**सरगरदाँ** - वि० கலக்கமடைந்த ; பிரமித்த ; அர்ப்பணம் செய்யப்பட்ட

**सरगर्म** - वि० ஆவேசமுள்ள ; தயாரான ; தீவிரமுள்ள

**सरगश्त** - वि० மனக்கலக்கமடைந்த ; நிம்மதியற்ற

**सरगुज़श्त** - स्त्री० அனுபவித்த விஷயம் ; வாழ்க்கை வரலாறு

**सरगोशी** - स्त्री० கோள் சொல்லுதல் ; நிந்தனை ; அவதூறு ; ரகசியம்

**सरज़मीन** - स्त्री० தேசம் ; பூமி

**सरजना** - स० உண்டாக்க ; சிருஷ்டிக்க

**सरजा** - पुं० தலைவன் ; சிங்கம்; சிவாஜியின் பட்டப் பெயர்

**सरज़ोर** - वि० பலமுள்ள ; துஷ்டத்தனமுள்ள ; அடங்கி நடக்காத

**सरणी** - स्त्री० வழி ; சாலை

**सरताज** - पुं० உயர்ந்த பொருள்

**सरतापा** - क्रि० தலைமுதல் கால் வரையில் ; அடிமுதல் நுனி வரையில்

**सरदई** - वि० வெளுத்த பச்சை நிறமான

**सरदार** - पुं० தலைவன்

**सरदारी** - स्त्री० தலைமை

**सरदी** - स्त्री० சளி ; குளிர்ச்சி

**सरधन** - वि० செல்வம் படைத்த

**सरन** - स्त्री० சரணம் ; புகல்

**सरनाम** - वि० புகழ்பெற்ற

**सरनामा** - पुं० முகவரி ; கடிதத்தின் தொடக்கத்தி லிருக்கும் மரியாதை மொழி

**सरपंच** - पुं० பஞ்சாயத்துத் தலைவன்

**सरपट** - क्रि० நாலுகால்ப் பாய்ச்சலாக ; மிக விரைவாக

**सरपत** - पुं० ஒருவிதக் கோரை; விழல்

**सरपरस्त** - पुं० காப்பவன்

**सरपेच** - पुं० தலைப்பாகையில் அணியும் ஓர் அணி

**सरपोश** - पुं० மூடி ; சாப்பாட்டுத் தட்டை மூடும் துணி

**सरफ़राज़** - वि० கீர்த்தியுள்ள

**सरबर** - पुं० நீர்நிலை ; தடாகம் ; குளம்

**सरबराह** | **सरबराहकार** | पुं० மானேஜர் ; காரியதரிசி

**सर-ब-सर** - क्रि० ஒரு கோடியிலிருந்து ; முற்றிலும்

**सरबस्ता** - वि० மறைந்த

**सरबुलन्द** - वि० புத்தறிவு பெற்ற ; பாக்கியசாலியான

**सरमस्त** - वि० மதம் பிடித்த

**सरल** - वि० சுலபமான ; கபடமற்ற ; எளிமையான

**सरवत** - स्त्री० செல்வச்செழுமை

**सरवर** - पुं० दे० **सरोवर**

**सरस** - वि० சுவையுள்ள ; அழகான ; சிறந்த ; இனிமையான

**सरसना** - अ० பசுமையாய் இருக்க ; சிறந்திருக்க ; சுவை நிறைந்திருக்க

**सरसब्ज़** - वि० பசுமையான ; செழுமையான; மகிழ்ச்சியான

**सरसर** - पु० காற்று வீசும் ஒலி ; புயல் ; சுழிக் காற்று

**सरसरी** - क्रि० சீக்கிரம் ; மொத்தத்தில் ; वि० வேகமான

**सरसार** - वि० முழுகிய ; ஈடுபட்ட ; ஆழ்ந்த

**सरसिज** - पु० தாமரை

**सरसी** - स्त्री० சிறு குளம் ; குட்டை

**सरसों** - स्त्री० மஞ்சள் கடுகு

**सरह** - पु० அந்துப்பூச்சி ; விட்டில் பூச்சி

**सरहज** - स्त्री० மைத்துனனின் மனைவி

**सरहद** - स्त्री० எல்லை

**सरहदी** - वि० எல்லையிலிருக்கிற

**सरा** - स्त्री० அருவி ; சிதை ; தர்மசாலை ; சத்திரம்

**सराना** - स० செயலை முடிக்க

**सराप** - पु० சாபம்

**सरापा** - क्रि० दे० **सरतापा**

**सराफ़** - पु० நகை வியாபாரி ; தங்கம், வெள்ளி பேரில் லேவாதேவி செய்யும் வியாபாரி

**सराफ़ा** - पु० நகைக் கடை ; காசுக் கடை

**सराफ़ी** - स्त्री० நகை அல்லது ஷராப்பு வியாபாரம்

**सराब** - स्त्री० கள் ; पु० பாழ்வெளி ; மணல் வெளி

**सराबोर** - वि० முழுதும் நனைந்த

**सराय** - स्त्री० சாவடி ; சத்திரம்

**सरासन** - पु० धनुष வில்

**सरासर** - अव्य० முற்றிலும் ; இங்குமங்கும் ; முழுவதும்

**सरासरी** - स्त्री० சீக்கிரம்; குத்து மதிப்பு ; எளிமை

**सराहना** - स० புகழ ; கொண்டாட ; स्त्री० புகழ்ச்சி

**सराहनीय** - वि० புகழத்தக்க

**सरिता** - स्त्री० நீர்ப்பெருக்கு ; பிரவாகம் ; நதி

**सरियाना** - स० ஒழுங்காக வைக்க ; அடுக்கி வைக்க

**सरिश्ता** - पु० கோர்ட்டு ; இலாகா ; அலுவலகம் ; தொடர்பு

**सरिश्तेदार** - पु० சிரஸ்தார் ; அலுவலகத் தலைவர்

**सरीखा** - वि० போன்ற

**सरीफ़ा** - पु० சீதாப்பழம்

**सरीर** - पु० உடல் ; உறுப்பு ; துஷ்டன் ; போக்கிரி

**सरीह** - वि० வெளிப்படையான ; தெளிவான

**सरीहन्** - क्रि० வெளிப்படையாய் ; தெளிவாய்

**सरूप** - वि० உருவமுள்ள ; போன்ற ; அழகான ; पु० சொரூபம் ; உருவம்

**सरूर** - पु० மகிழ்ச்சி ; இளம் போதை

**सरे-आम** - क्रि० வெட்ட வெளியாய்

**सरे-नौ** - क्रि० முற்றிலும் ஆரம்பத்திலிருந்து

**सरे-हस्त** - क्रि० सरे-दस्त இப்பொழுதே ; உடனே ; கையோடு

**सरे-बाजार** - क्रि० வெளிப்படையாய் ; எல்லோரெதிரிலும்

**सरे-शाम** - स्त्री० மாலை நேரம் ; क्रि० மாலையானதும்

**सरेश / सरेस** - पु० வச்சிரம் (பசை)

**सरोंट** - पु० சுருக்கம்

**सरो** - पु० சவுக்கு மரம்

**सरोकार** - पु० தொடர்பு; உறவு

**सरोज** - पु० தாமரை

**सरोजना** - स० அடைய

**सरोद** - पु० வீணை போன்ற வாத்தியம்

**सरोरुह** - पु० தாமரை

**सरोवर** - पु० குளம்; பொய்கை

**सरोष** - क्रि० கோபத்துடன் ; ரோஷத்துடன்

**सरोसामान** - पु० சாமான்கள் ; உதவிப் பொருள்கள்

**सरौंता** - पु० பாக்கு வெட்டி

**सर्ग** - पु० செல்லுதல் ; அத்தியாயம் ; காவியப் பகுதி

**सर्द** - वि० ठंढा குளிர்ந்த ; மந்தமான ; உற்சாகமற்ற

**सर्दी** - स्त्री० குளிர்ச்சி; சளிப்பு

**सर्फ़** - वि० செலவு செய்யப்பட்ட ; पु० செலவு ; வீண் செலவு ; இலக்கணம்

**सर्फ़ा** - पु० விருத்தி ; செட்டு

**सर्बस** - पु० दे० **सर्वस्व**

**सर्राफ़** - पु० दे० **सराफ़**

**सर्व** - वि० எல்லா ; —**ग्रास** - முழுக் கிரகணம் ; முழுவதையும் விழுங்குதல்

**सर्वज्ञ** - पु० எல்லாமறிந்தவன் ; கடவுள்

**सर्वतः** - क्रि० நாலா புறமும் எல்லாவிதத்திலும்

**सर्वत्र** - अव्य० எல்லா இடத்திலும் ; எங்கும்

**सर्वथा** - अव्य० எல்லா விதத்திலும் ; முற்றிலும்

**सर्वदा** - अव्य० எப்பொழுதும்

**सर्वनाम** - पु० பிரதிப் பெயர்ச்சொல் (இலக்கணம்)

**सर्वनाश** - पु० பேரழிவு

**सर्वोपरि** - वि० மிக உயர்ந்த

**सर्वव्यापी** - वि० எங்கும் பரவிய

**सर्वश्रेष्ठ** - वि० மிகச் சிறந்த

**सर्वस्व** - पु० செல்வம் முழுவதும்

**सर्वेसर्वा** - वि० மிக உயரிய

**सर्वांगीण** - वि॰ எல்லா அம்சங்களிலும் நிறைந்த

**सलगम** } पु॰ 'டர்னிப்' என்னும் கிழங்கு
**सलजम** }

**सलज्ज** - वि॰ வெட்கப்பட்ட

**सलतनत** - स्त्री॰ ராஜ்யம்; அரசு; சௌகரியம்

**सलफ़** - वि॰ கழிந்த; பழமையான; पु॰ பழைய காலத்து ஜனங்கள்

**सलवट** - स्त्री॰ दे॰ सिलवट

**सलवात** - स्त्री॰ ஆண்டவனின் கருணை; சலிப்பு; விட்டு விடல்; ஏசல்

**सलहज** - स्त्री॰ மைத்துனனின் மனைவி

**सलाई** - स्त्री॰ தீக்குச்சி

**सलाक़** - पु॰ அம்பு

**सलाख** - स्त्री॰ ஊசி

**सलात** - स्त्री॰ நமாஸ்

**सलाबत** - स्त्री॰ திடம்; வீரம்; கடுமை; பிரதாபம்

**सलाम** - पु॰ } வணக்கம்
**सलाम-अलैकुम** - स्त्री॰ }

**सलामत** - क्रि॰ க்ஷேமமாக; —रहना - நிலையாக இருக்க

**सलामती** - स्त्री॰ ஆரோக்கியம்; நலம்; க்ஷேமம்; ஒருவித முரட்டுத் துணி

**सलामी** - स्त्री॰ வந்தனமளித்தல்; மரியாதைக்காகக் குண்டு போடுதல்

**सलाह** - स्त्री॰ ஆலோசனை; அபிப்பிராயம்; —कार - அபிப்பிராயம் சொல்லுபவர்; ஆலோசகர்

**सलिल** - पु॰ ஜலம்; நீர்

**सलीक़ा** - पु॰ நல்லொழுக்கம்; திறமை

**सलीब** - स्त्री॰ சிலுவை

**सलीम** - वि॰ சரியான; சுத்த மனதுள்ள; கம்பீரமான

**सलीस** - वि॰ சுலபமான; வழங்கி வரும் மொழி

**सलूक** - पु॰ நடத்தை; உபகாரம்; நேர்மை; பக்தி

**सलैला** - वि॰ வழுக்கக் கூடிய

**सलोना** - वि॰ உப்பு கலந்த; அழகான

**सवा** - वि॰ ஒன்றே கால்; ஒரு எண்ணுடன் கால் சேர்ந்திருத்தல் (उदा॰ सवा चार)

**सवाई** - स्त्री॰ ஒன்றுக்கு ஒன்றே காலாக வசூலித்தல்

**सवानह** - पु॰ நிகழ்ச்சிகள்; —उमरी - स्त्री॰ வாழ்க்கைச் சரிதம்

**सवाब** - पु॰ உண்மை; புண்ணியம்; நன்மை; சிறப்பு

**सवार** - पु॰ குதிரைமேல் ஏறியவன்; वि॰ சவாரி செய்கிற

**सवारी** - स्त्री० வாகனம் ; ஊர் வலம் ; உலா

**सवाल** - पु० கேள்வி ; வேண்டு கோள் ; **—जवाब** - தர்க் கம் ; **—बनाना** - வினுத் தாள்கள் தயாரிக்க

**सवालात** - पु० கேள்விகள்

**सविता** - पु० சூரியன் ; எருக்கு

**सविधि** - क्रि० நியமப்படி ; ஒழுங்காக ; சட்டப்ப்டி

**सविनय** - वि० வினயத்தோடு ; மட்டுமரியாதையோடு

**सवैया** - पु० ஒன்றே கால் சேர் எடையுள்ள எடைக்கல் ; ஒரு வர்ண விருத்தப் பாவினம்

**सव्य** - पु० தெற்கு ; वि० அனு கூல மில்லாத ; எதிரான ; **—साची** - அர்சுனன்

**ससक** - पु० முயல் ; **—शृंग, सींग** - முயல் கொம்பு ; நடக் காத காரியம்

**सवेरा** - पु० **सबेरा** காலை

**सशंक** - वि० சங்கேமுள்ள ; பயமுள்ள

**ससुर** - पु० மாமனுர்

**ससुराल** - स्त्री० மாமனுர் வீடு

**सस्ता** - वि० மலிவான

**सस्ती** - स्त्री० மலிவு ; மலிந்த காலம்

**सस्य** - पु० தானியம்

**सह** - अव्य० ஒடு ; கூட ; உடன்

**सहकार** - पु० மாமரம் ; உதவி யளிப்பவன் ; நறுமணப் பொருள்

**सहकारता** / **सहकारिता** - स्त्री० உதவி ; ஒத்து ழைப்பு

**सहकारी** - पु० கூட வேலை செய் பவன் ; உபகாரி ; वि० கூட் டுறவு சம்பந்தமான

**सहगमन** - पु० உடன் கட்டை யேறுதல்

**सहचर** - पु० வேலைக்காரன் ; தோழன் ; பணியாள்

**सहचरी** - स्त्री० வேலைக்காரி ; மனைவி ; தோழி

**सहचारी** - पु० தொடர்பவன் ; சேவகன் ; பணியாள்

**सहज** - वि० இயல்பான ; எளி தான ; இயற்கையான

**सहजन** - पु० **सहिजन** முருங்கை

**सहदानी** - स्त्री० குறி ; அடை யாளம் ; சின்னம்

**सहन** - पु० பொறுமை ; கஷ் டத்தை சகித்துக்கொள் ளுதல் ; முற்றம் ; ஒரு வகைப் பட்டு ; **—शील** - பொறுமையுள்ள

**सहनक** - स्त्री० சிறு முற்றம் ; சிறு தட்டு

**सहना** - स० பொறுத்துக் கொள்ள ; அனுபவிக்க
**सहनीय** - वि० பொறுக்கத் தகுந்த ; சகிக்கத்தக்க
**सहपाठी** - पु० கூடப்படிப்பவன்; துணைமாணவன்
**सहभोज** / **सहभोजन** पु० சமபந்தி போஜனம்
**सहभोजी** - पु० உடன் அமர்ந்து சாப்பிடுவர்
**सहम** - पु० பயம் ; சங்கோசம்
**सहमत** - वि० ஒரே அபிப்பிராயம் கொண்ட ; —**होना** - ஒப்புக்கொள்ள
**सहमना** - अ० பயப்பட ; மூர்ச்சித்துவிட
**सहयोग** - पु० கூட்டுறவு ; ஒத்துழைப்பு
**सहयोगी** - पु० கூட உழைப்பவன் ; உதவுபவன்
**सहर** - स्त्री० அதிகாலை ; செப்பிடு வித்தை ; நகரம் वि० மெதுவாக
**सहरा** - पु० மைதானம் ; காடு
**सहल** - वि० **सहज** சுலபமான
**सहलाना** - स० தடவிக் கொடுக்க ; अ० கூச்சம் உண்டாக ; அரிக்க
**सहवास** - पु० கூடியிருக்க ; சேர்ந்திருக்க; சம்போகம்
**सहसा** - अव्य० திடீரென்று
**सहस्र** - वि० ஆயிரம்
**सहाध्यायी** - पु० दे० **सहपाठी**
**सहानुभूति** - स्त्री० அனுதாபம்
**सहाय** - पु० உதவி ; உதவியாளன் ; நம்பிக்கை
**सहायक** - वि० உதவுகிற
**सहायता** - स्त्री० உதவி
**सहार** - पु० பொறுமை
**सहारा** - पु० உதவி ; முட்டு ; ஆதாரம்
**सहिजन** - पु० **सहजन** முருங்கை
**सहित** - अव्य० கூட ; உடன்
**सहिष्णु** - वि० பொறுமையுள்ள
**सहिष्णुता** - स्त्री० பொறுமை
**सही** - वि० சரியான ; **स्त्री०** கையொப்பம் ; —**सलामत** - ஆரோக்கியமான ; குற்றமற்ற ; சௌக்கியமாக
**सहूलत** / **सहूलियत** स्त्री० **आसानी** சுலபம்; சௌகரியம்
**सहृदय** - वि० நெகிழ்வுள்ளம் படைத்த ; உணர்ச்சி நிரம்பிய ; பிறர் இன்ப துன்பங்களை உணருகிற
**सहेजना** - स० நன்கு பரிசீலனை செய்ய ; புத்தி புகட்டி ஒப்புவிக்க
**सहेली** - स्त्री० தோழி ; பாங்கி

**सह्य** - वि० சகிக்கக்கூடிய; पु० ஒருமலை

**साँई** - पु० दे० साइँ

**साँकर** - स्त्री० சங்கிலி; पु० சங்கடம்; वि० குறுகிய; துன்பம் நிறைந்த

**साँकरा** - वि० குறுகிய

**साँकल** - स्त्री० சங்கிலி

**साँग** - स्त्री० ஈட்டி; அதிகாரம்

**सांग** - वि० முழு; உறுப்புக்களுடன் கூடிய; பூரணமான

**सांगोपांग** - முழுவதுமாக; குறையில்லாத

**साँच** - वि० உண்மையான; சரியான; पु० உண்மை

**साँचा** - पु० வார்ப்பிற்கு வேண்டிய அச்சு

**साँझ** - स्त्री० மாலை நேரம்

**साँट** - स्त्री० பிரம்பு; பிரம்படித் தழும்பு

**साँटा** - पु० தடி; கரும்பு

**साँटिया** - पु० ஈடுக்கை அடிப்பவன்; குடுகுடுப்பைக் காரன்; மந்திரவாதி

**साँठ** - पु० தடி; ஆப்பை; நாணல்; கரும்பு; சேர்க்கை; **—गाँट** - स्त्री० **मेल-मिलाप** - சந்திப்பு; தொடர்பு; தகாத உறவு

**साँड, साँढ** - पु० பொலி காளை

**साँडनी** - स्त्री० ऊँटनी பெண் ஒட்டகம்

**साँडा** - पु० உடும்பு

**सांत्वना** - स्त्री० ஆறுதல்

**साँधना** - स० குறிபார்த்து அடிக்க; கலக்க; சேர்க்க; முடிக்க

**सांध्य** - वि० மாலை நேரத்து

**साँप** - पु० பாம்பு; **—सूँघ जाना** - உயிரற்றுப் போக; இறக்க

**सांपत्तिक** - वि० பொருளாதார சம்பந்தமான

**सांप्रदायिक** - वि० மத சம்பந்தமான

**साँबरी** - स्त्री० **जादूगरी** கண்கட்டு வித்தை; மாயம்

**साँवली** - वि० கருநீல நிறமான

**साँस** - स्त्री० மூச்சு; அவகாசம்; **—लेना** - மூச்சு இழுக்க; சுவாசிக்க; **—फूलना** - மூச்சுத் திணற; **—रोकना** - மூச்சு அடக்க; **एक साँस में** - ஒரே மூச்சில்; ஒரேயடியாக

**साँसत** - स्त्री० மூச்சுத் திணறுதல்; பெரும் துன்பம்; **—घर** - **कालकोठरी** பாதாளச் சிறை

सांसारिक - वि० உலகத்து
सा - अव्य० போன்ற
साइक - पु० பாணம், அம்பு
साइत - स्त्री० சுப முகூர்த்தம்; ஒரு மணி நேரம்; சகுனம்
साइयाँ } पु० தலைவன்; கடவுள்;
साईं } எஜமானன்
साई - स्त्री० முன் பணம் ; அச்சாரம் ; पु० முயற்சி செய்பவன்
साईस - पु० குதிரைக்காரன்
साक - पु० காய்கறி ; கீரை
साका - पु० சகாப்தம் ; புகழ்
साकार - वि० உருவமுள்ள
साकिन - वि० வசிக்கிற
साक़ी - पु० மதுபானம் பரிமாறுபவன் ; காதலன்
साकेत - पु० அயோத்தி நகர்
साक्षर - वि० எழுதப் படிக்கத் தெரிந்த ; எழுத்தறிவுள்ள
साक्षात् - क्रि० எதிரே ; वि० உருவமுள்ள ; —कार - சந்திப்பு ; எதிரே காணல்
साक्षी - पु० गवाह சாட்சி
साक्ष्य - पु० சாட்சியம்; சான்று
साख - पु० மரியாதை; சாட்சி; வியாபார நம்பிக்கை
साखना - स० அத்தாட்சி கூற ; சாட்சி சொல்ல
साखी - पु० சாட்சி; மரக் கிளை
साखू - पु० சால மரம்
साग - पु० கீரை ; காய்கறி ; சமைத்த கறி ; —पात - எளிய உணவு
सागर - पु० கடல்; பெரிய ஏரி
साग़र - पु० கிண்ணம் ; மதுக் கோப்பை
सागू - पु० ஜவ்வரிசி செய்யப் பயன்படும் மரவள்ளிக் கிழங்கு ; —दाना - साबूदाना ஜவ்வரிசி
सागौन - पु० தேக்கு மரம்
साज - पु० சிங்காரித்தல்; தேவைப் பொருள்கள் ; சாதனங்கள் ; —बाज - ஏற்பாடு ; —सामान - சாதனங்கள் ; தட்டு முட்டுச் சாமான்கள் ; பகட்டு
साज़ - पु० மராமத்துக்காரன் (உ-ம்) घड़ीसाज़
साजन - पु० கணவன் ; காதலன் ; கடவுள்
साजिन्दा - पु० வாத்தியம் வாசிப்பவன்
साजिश - स्त्री० சதியாலோசனை
साझा - पु० பங்கு ; கூட்டு
साझी } पु० பங்காளி ; கூட்
साझेदार } டாளி

**साटक** - पुं॰ தோல்; உமி; பயனற்ற பொருள்

**साटना** - स॰ ஒட்ட; சேர்க்க

**साठ** - वि॰ அறுபது

**साठनाठ** - वि॰ மிக ஏழையான

**साठसाती**, **साढ़साती** - स्त्री॰ ஏழரை நாட்டுச் சனி

**साड़ी** - स्त्री॰ புடவை

**साढ़ी** - स्त्री॰ பாலேடு; குறுவை சாகுபடி; பல வர்ணப் புடவை

**साढ़ू** - पुं॰ ஷட்டகன்; சகலே; சகலபாடி

**सात** - वि॰ ஏழு

**साथ** - प्रत्य॰ ஓடு; உடன்; पुं॰ கூட இருத்தல்; தோழன்; —**देना** - உதவி புரிய; உடன் இருக்க

**साथरा** - पुं॰ படுக்கை; கோரைப்பாய்

**साथी** - पुं॰ தோழன்

**साद** - पुं॰ ஒப்புக்கொள்ளுதல் அல்லது சரி என்பதைக் குறிப்பிடுவதற்காகப் போடும் அடையாளம்; —**करना** - ஒப்புக் கொள்ள; சம்மதத்தைத் தெரிவிக்க

**सादगी** - स्त्री॰ ஆடம்பரமின்மை; கபடமின்மை; நேர்மை

**सादा** - वि॰ படாடோபமில்லாத; நகாசு இல்லாத; —**लौह** - கபடமற்ற; முட்டாளான

**सादिक़** - वि॰ உண்மையான; சரியான

**सादिर** - वि॰ வெளியாகிற; அமுலிலிருக்கிற

**सादी** - पुं॰ வேடன்; குதிரை

**सादृश्य** - पुं॰ ஒற்றுமை; ஒப்புமை; சமானம்

**साध** - स्त्री॰ விருப்பம்; ஆவல்; கர்ப்பிணியின் விருப்பம் (மசக்கை)

**साधक** - पुं॰ சாதனை செய்பவன்; பயிலுபவன்; யோகி

**साधना** - स्त्री॰ சித்தி; உபாசனை; சாதனை; स॰ குறி வைக்க; சாதிக்க; அப்பியாசம் செய்ய; பயில

**साधारणतः**, **साधारणतया** - अव्य॰ சாதாரணமாக; பெரும்பாலும்; பொதுவாக

**साधु** - पुं॰ சாது; துறவி; वि॰ சிறந்த; —**वाद** - **वाहवाही** சிறப்புப் பாராட்டு

**साध्य** - वि॰ நிறைவேறக் கூடிய; எளிதான

**साध्वी** - स्त्री॰ பதிவிரதை;

அடக்கமுள்ளவள் ; சம ணக் குரத்தியார்
**सानंद** - वि० மகிழ்ச்சியுள்ள
**सान** - पु० **सिल्ली** சாணைக்கல் ; **—देना, धरना, चढ़ाना** - சாணை பிடிக்க ; பளபளப்பாக்க
**सानना** - स० நனைக்க ; ஒன்று சேர்க்க ; பொருப்பாளி யாக்க ; தீய செயலில் கூட்டு சேர்க்க
**सानी** - स्त्री० கால் நடைக் களுக்குத் தரும் தீவனப் பொட்டு, பிண்ணாக்கு கலந்த தீனி ; वि० சம மான ; ஈடான ; அடுத்த ; நனைந்த
**सानीपानी** - पु० பொட்டு முதலி யன கலந்த தீனி (மாடு களுக்கு வைப்பது)
**सान्निध्य** - पु० அருகாமை
**साप** - पु० दे० **शाप**
**सापेक्ष** - वि० எதிர்பார்த்திருக் கிற ; சார்ந்துள்ள
**साफ़** - वि० தெளிவான ; சுத்த மான ; क्रि० தெளிவாக ; சுத்தமாக
**साफ़गो** - पु० மறைக்காமல் வெளிப்படையாகச் சொல்லுபவன்
**साफल्य** - पु० பயனுடைமை
**साफ़ा** - पु० தலைப்பாகை
**साफ़ी** - स्त्री० கைக்குட்டை ; வடிக்கட்டும் துணி
**साबिक़** - वि० முன் நடந்த ; வழக்கம் போன்ற
**साबिक़ा** - पु० சந்திப்பு ; சம்பந் தம் ; தொடர்பு
**साबित** - वि० ருஜுப்படுத்தப் பட்ட ; சரியான ; உருப் படியான ; வலுவான
**साबुत** - वि० சரியான ; முழு
**साबुन** - पु० சோப்பு
**साबूदाना** - पु० ஜவ்வரிசி
**सामंजस्य** - पु० பொருத்தம் ; சேர்க்கை ; ஒற்றுமை
**सामंत** - पु० சிற்றரசன் ; வீரன் ; தலைவன்
**साम** - स्त्री० பூண்
**सामग्री** - स्त्री० சாமான்கள் ; சாதனம்
**सामना** - पु० எதிரேயிருத்தல் ; எதிர்த்தல் ; **—करना** - எதிர்க்க
**सामने** - क्रि० எதிரே ; எதிரில்
**सामयिक** - वि० காலத்தை ஒட் டிய ; காலத்தை அனுச ரித்த ; **—पत्र** - தினசரிப் பத்திரிகை; செய்தித்தாள்
**सामरिक** - वि० போர்பற்றிய
**सामर्थ** / **सामर्थ्य** - पु०,स्त्री० சாமர்த்தியம் சக்தி ; திறமை

**सामाजिक** - वि० சமூகத்தைச் சேர்ந்த; சமூகம் பற்றிய

**सामान** - पु० பொருள் ; ஏற்பாடு

**सामान्य** - वि० சாதாரணமான; பொதுவான

**सामान्यतः** / **सामान्यतया** - क्रि० சாதாரணமாய்; பெரும்பாலும்

**सामिष** - वि० மாமிசம் கலந்த, புலால் சேர்ந்த

**सामीप्य** - पु० அருகாமை

**सामुद्रिक** - पु० உடற்குறிகள் பற்றிய கலை; தேக அங்கங்களின் லட்சணம்; वि० கடலில் உண்டான

**सामूहिक** - वि० சமுதாய சம்பந்தமான; எல்லோரும் சேர்ந்து செய்யக்கூடிய

**साम्य** - पु० ஒற்றுமை ; சமத்துவம் ; —**वाद** - பொதுவுடமை; கம்யூனிஸம்

**साम्राज्य** - पु० பேரரசு

**सायं** / **सायंकाल** - पु० மாலை நேரம்

**सायक** - पु० அம்பு

**सामी** - पु० தலைவன் ; சயாம் நாட்டுக்காரன்

**सायण** - पु० வேதங்களுக்கு உரை விளக்கம் எழுதிய ஆசிரியர் பெயர்

**सायत** - स्त्री० दे० साइत

**सायबान** - पु० ओसारा சாய்ப்பு ; தாழ்வாரம்

**सायर** - पु० கடல்; மேல் பாகம்; இனாம் நிலம் ; கவி

**सायल** - पु० வினவுகிறவன் ; பிச்சைக்காரன் ; வேண்டுபவன்

**साया** - पु० நிழல் ; —**दार** - நிழல் தருகிற

**सारंग** - स्त्री० மான் ; மயில் ; மேகம் ; தவளை ; வில் ; அம்பு ; பாம்பு ; —**पाणि** - पु० விஷ்ணு

**सारंगी** - पु० ஒருவிதத் தந்தி வாத்தியம்

**सारंड** - पु० பாம்பு முட்டை

**सार** - पु० மூலப்பொருள் ; சுவையான பகுதி ; நீர் ; சுவை ; மகத்துவம் ; वि० முக்கியமான ; மிகச் சிறந்த ; உண்மையான ; —**गर्भ, गर्भित** - சுவை, உண்மை அல்லது தத்துவம் நிறைந்த ; —**ग्राही** - சாரமான பகுதியை மட்டும் கொள்பவன்

**सार** - पु० ஒட்டகம் ; —**बान** - **ऊँटहारा** ஒட்டகம் ஓட்டுபவன் ; **प्रत्य०** சேர்ந்த,

  

போன்ற, நிறைந்த முதலிய பொருள்களைக் கொடுக்கும் உரிச்சொல் (उदा० ख़ाकसार, नमकसार)

**सारणि**, **सारणी** - स्त्री० சிறு நதி; நீர்ப் பெருக்கு; அட்டவணை; ஒரு சோதிட நூல்

**सारथी** - पु० தேர்ப்பாகன்

**सारना** - स० நிறைவேற்ற; முடிக்க; அழகு படுத்த

**सारमेय** - पु० நாய்

**सारस** - पु० கொக்கு; தாமரை; அன்னம்

**सारसन** - पु० பெண்கள் இடுப்பில் அணிந்துகொள்ளும் ஒட்டியாணம் போன்ற ஓர் அணி

**सारांश** - पु० சுருக்கம்;கருத்து; சுவையான பகுதி

**सारा** - वि० எல்லாம்; முழுவதும்

**सारिका** - स्त्री० மைனாப்பறவை

**सार्थक** - वि० பலனளிக்கிற; பொருள் பொதிந்த

**सार्थवाह** - पु० கடல் கடந்து வாணிபம் செய்யும் வணிகர்

**सार्वजनिक**, **सार्वजनीन** - वि० பொதுஜன சம்பந்தமான

**सार्वदेशिक** - वि० **सर्वदेशीय** எல்லாத் தேசங்களுடனும் தொடர்புள்ள

**सार्वभौम** - पु० சக்கரவர்த்தி

**साल** - पु० சாலமரம்; ஆண்டு, வருஷம்; தானியம்; துப்பட்டி; போர்வை; स्त्री० துக்கப்படுதல்; துக்கம்; பீடை; ஓட்டை; வளை; இடம்;வீடு;—**गिरह** - स्त्री० ஆண்டு நிறைவு

**सालक** - वि० துன்புறுத்துகிற

**सालन** - पु० பருப்பு, காய்கறி, பச்சடி முதலிய துணை உணவுப் பொருள்கள்; மசாலாப் பொருள்கள்

**सालना** - अ० துக்கமடைய; स० துக்கப்படுத்த; குத்த

**सालस** - पु० நடு நிலையாளன்; மத்தியஸ்தம் செய்பவன்; वि० சோம்பல் மயக்கம்

**सालसा** - पु० நன்னாரி வேர்

**सालसी** - स्त्री० பஞ்சாயத்து

**साला** - पु० மைத்துனன்; ஒரு வசை மொழி; மைனாப் பறவை

**सालाना** - वि० வருடாந்தர

**सालार** - पु० வழிகாட்டி; முக்கியத் தலைவன்; —**जंग** - படைத் தலைவன்

